உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி.

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



| தொகுதி | தாது௵ ஐப்பசி௴ கஉ | பகுதி |
| --- | --- | --- |
| 22 | 1936௵ அக்டோபர்௴ 17உ | 4 |

## கடவுள் வணக்கம்.

அண்டமுமாய்ப் பிண்டமுமா யளவிலாத
ஆருயிர்க்கு ஒருயிராய் அமர்ந்தாயானால்
கண்டவர்ஆர் கேட்டவர்ஆர் உன்னால்உன்னைக்
காண்பதல்லால் என்னறிவாற் காணப்போமோ
வண்டுளப மணிமார்பன் புதல்வனோடு
மனைவியொடுங் குடியிருந்து வணங்கிப்போற்றும்
புண்டரிக புரத்தினில நாதாந்த மௌன
போதாந்த நடம்புரியும் புனிதவாழ்வே. (1)

காதிலே ஓலையை வரைந்துமேற் குமிழையுங்
கறுவிவேள் கருநீலப்
போது போன்றிடுங் கண்ணியர் மயக்கிலெப்
போதுமே தளராமல்
மாது காதலி பங்கனை யபங்கனை
மாடமா ளிகைசூழுஞ்
சேதுமேவிய நாயகா யகன்தனைச்
சிந்தைசெய் மடநெஞ்சே. (2)

பூங்கா வனநிழலும் புதமுதுஞ் சாந்தபதம்
வாங்காத ஆனந்த மாமழையும்—நீங்காவாம்
சொல்லிறந்த மாண்டவாபோற் றாமௌன பூமியினால்
இல்லையென நின்ற இடம். (3)

மண்ணீர்மை யாலே மயங்காதுன் கையாலென்
கண்ணீர் துடைக்கவும் நான் கண்டேன் பராபரமே. (4)

# அரும்பொருள் விளக்கம்

1. இதனால், இறைவ னருளாலன்றி ஆன்ம அறிவால் அவனைத் தரிசிக்க முடியாதென்று கூறுகிறார்.

(இ-ள்.) வளப்பமாகிய துளபமாலையையும், மணிமாலையையும் அணிந்த திருமால் தமது குமாரனாகிய பிரம்மதேவனோடும், மனைவி லட்சுமிதேவியோடும் குடிபுகுந்து வணங்கி வாழ்த்திக் கொண்டிருக்கும் புண்டரிக புரமாகிய சிதம்பரத்தில் நாததத்துவத்தின் முடிவாயுள்ள மௌனநிலையில் ஞான நடனஞ் செய்யும் புனித வாழ்வே! அண்டமாயும், பிண்டமாயும், எண்ணிறந்த ஆன்மாக்களுக்கு ஒரு உயிராயும் இருப்பாயானால், உன்னைப் பார்த்தவர் யார்? கேட்டவர் யார்? உன் திருவருளால் உன்னைப் பார்க்க முடியுமன்றி என் சிற்றறிவுகொண்டு காண முடியுமோ! (எ-று.)

நடராஜப் பெருமானது ஞானநடனம் உரையிறந்த இடத்திலும், மன விகற்பமற்ற அறிவின் முடிவிலும் நடப்பதாதலால், "நாதாந்தமௌன போதாந்த நடம் புரியும் புனிதவாழ்வே" என்றார். சமயாசாரியர்களில் ஒருவராகிய திருநாவுக்கரசு சுவாமிகள் "ஆட்டுவித்தால்" என்னுந் திருத்தாண்டகத்தில், "காட்டுவித்தால் யாரொருவர் காணாதாரே, காண்பார் ஆர் கண்ணுதலாய்க் காட்டாக்காலே" என்ற செய்யுளடியோடு, "கண்டவர் ஆர் கேட்டவர் ஆர்? உன்னால் உன்னைக் காண்பதல்லால் என்னறிவாற் காணப்போமோ!" என்ற இச் செய்யுள் தொடரும் ஒத்திருப்பது கண்டு இன்புறத் தக்கது.

2. இதனால், மகளிர் மயக்கில் மயங்காமல் கடவுளைத் தியானஞ் செய்வாயாக என நெஞ்சுக் கறிவுறுத்துகிறார்.

(இ ள்.) அறியாமையுடைய நெஞ்சமே! காதில் பொன்னோலையைத் தரித்து, பிறகு குமிழம்பூவை யொத்த நாசியும், சிறந்து மன்மதனது நீலோற்பல மலரை யொத்த கண்களையுமுடைய மங்கையர் மையலில் எப்போதும் மயங்கி விழாமல், பார்வதிதேவியை வாமபாகத்தில் வைத்திருக்கும் சிவபெருமானை அழிவற்ற கடவுளை, மாடமாளிகைகளால் சூழப்பட்ட ராமேச்சுரத்தில் எழுந்தருளியுள்ள ராமநாதனைத் தியானஞ் செய்வாயாக. (எ-று.)

(3) இதனால், மோனதவ முனிவர்கட்கு எல்லாம் சித்திக்கும் என்கிறார்.

(இ-ள்.) வாக்கிறந்து இறந்தவர்களைப்போல் தூய்மையான மௌன பூமியில் நான் இல்லையென தற்போத மொழிந்து நின்ற இடத்தில், கற்பக விருக்ஷத்தின் நிழலும், புநிய தேவாமிர்தமும் சாந்தபதம் நீங்காத ஆனந்த மயமான பெருமழையும் நீங்கா திருக்கும். (எ-று.)

4. இதனால் பிரபஞ்ச மாயையில் மயங்காதிருகக அருள் புரிந்தார் என்கிறார்.

(இ-ள்.) பராபரமே! பிரபஞ்ச மாயையாலே மயங்காமல், தேவரீர் ஆசாரிய கோலங்கொண்டு வந்து திருக்கரத்தினால் என் கண்ணீரைத் துடைத்து தேற்ற நான் கனவு கண்டேன். (எ-று.)




# பண்டித நேரு சென்னை விஜயம்





நமது தாய்நாட்டின் விடுதலை குறித்து உண்மையாகப் பாடுபடும் ஸ்தாபனம் எது என்றால், காங்கிரஸ் மகாசபை யொன்றே யாகும் என்று நாட்டுமக்கள் யாவரும் ஒப்புக்கொள்வார்கள். 50 வருஷங்களுக்கு முன்பு அறிஞர்கள் ஒரு சிலரால் ஆரம்பிக்கப்பட்ட இம் மகாசபை, நாளடைவில் பலம் பெற்று வந்திருக்கிறது. அக்காலத்தில் நடுத்தர வாழ்க்கை நிலைமை படைத்தவர்களில் மேம்பட்டவர்கள் சிலர்தான் காங்கிரஸில் ஈடுபட்டிருந்தார்கள். அவர்கள் ராஜவிசுவாசத்தோடு தங்கள் கோரிக்கைகளை பிரிட்டிஷ் இந்திய சர்க்காருக்கு விண்ணப்பித்து வந்தார்கள்.

சிறிது காலஞ் செல்ல செல்ல, காங்கிரஸின் நிலைமையில் மாறுதலேற்பட்டது. நடுத்தர தகுதியினரோடு, சிறிது கீழ்ப்பட்ட தகுதி வாய்ந்தவர்களும் காங்கிரஸில் சேர்ந்தார்கள். அப்போதுதான் காங்கிரஸில் சிறிது சண்டை யுண்டாயிற்று. பாலகங்காதர திலகர் கோஷ்டியின ரென்றும், கோபாலகிருஷ்ண கோகலே கோஷ்டியின ரென்றும் இரு பிரிவினர் காங்கிரஸில் ஏற்பட்டனர். திலகர் தீவிரவாதி; கோகலே மிதவாதி. இவர்கள் ஒருவரது கொள்கை மற்றவர்களுக்குப் பிடிக்கவில்லை யாகையால், இருதிறத்தாருக்கும் அடிக்கடி சச்சரவு ஏற்பட்டது. எனவே, ஒரு சிலர் காங்கிரஸை விட்டு வெளியேறினர். அவ்விதம் விலகியவர்களே இப்போதுள்ள மிதவாதக் கட்சியை ஏற்படுத்தினார்கள்.

இதற்குப் பிறகுதான் உலகாநுபவமும் அரசியல் நிபுணத்துவமும் வாய்ந்தவரான மகாத்மாகாந்தி காங்கிரஸுக்குள் நுழைந்தார். அவரால் நடுத்தர வகுப்பினரில் கீழ்த்தர தகுதி வாய்ந்தவர்கள் காங்கிரஸில் சேர்ந்தார்கள். விவசாயிகளையும், ஏழை மக்களையும் அச்சமயம் மகாத்மா காங்கிரஸுக்குள் கொண்டு வராவிடினும், அவர்களுடைய ஆதரவை மட்டும் கொண்டுவந்து சேர்த்தார். காங்கிரஸில்

காந்தி சகாப்தம் ஏற்பட்ட பிறகே, பொதுமக்களுடைய பூரண ஆதரவைப் பெற்று அது பல பெரிய போராட்டங்களை நடத்தி, தேசத்துக்குச் சேவை புரிந்து வந்திருக்கிறது. ஒரு சில வருஷங்களில் அது மிகவும் பலத்துடனும் சக்தியுடனும் வேலை செய்து வந்திருக்கிறது.

இத்தகைய காங்கிரஸ் மகாசபை இல்லாவிட்டால், இன்று இந்தியாவின் நிலைமை என்ன ஆகியிருக்குமென்று சற்றே சிந்தித்துப் பாருங்கள். அன்பர்களே! நமக்குள் சாதி சமய பூசல் காரணமாகவும், மற்றும் பல காரணங்களைக் கொண்டு சண்டை போட்டுக் கொண்டு, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தால் நசுக்கப் பட்டிருப்போம். உலகில் எத்தனையோ அடிமை நாடுகள் இருக்கின்றன. அந் நாடுகளில் தேசிய இயக்கங்கள் நடந்து வருகின்றன. ஆனால் இந்திய தேசிய காங்கிரஸ் மகாசபையைப் போல் மகா வல்லமை பொருந்திய ஸ்தாபனம் வேறெந்த நாடுகளிலும் கிடையாது என்று தைரியமாகக் கூறலாம்.

இத்தகைய மகத்தான காங்கிரஸ் மகாசபைக்குத் தலைவர்களாக எத்தனையோ பேரறிஞர்களும், அரசியல் மேதாவிகளும் இருந்தனர். அவர்களில் குறிப்பிடத் தக்கவர்கள், கோபால கிருஷ்ண கோகலே, லோகமான்ய திலகர், மகாத்மா காந்தி ஆகியவர்களாவார். இவர்களுக்கு அடுத்தபடியாக, இப்போது பண்டித ஜவஹர்லால் நேரு குறிப்பிடத்தக்கவராக இருக்கிறார். இவர் இத்துடன் இருமுறை காங்கிரஸுக்குத் தலைவராக இருந்து விட்டார். முதலில் 1929-ல் காரச்சியில் நடந்த காங்கிரஸில் பண்டித நேரு தலைமை வகித்தார். இரண்டாவதாக, இவ் வருஷம் லட்சுமணபுரியில் கூடிய காங்கிரஸில் இவர் தலைமை தாங்கினார். எனவே, இவ் வருஷம் காங்கிரஸ் பண்டித ஜவஹர் தலைமையில் சிறப்பாக நடந்து வருகிறது.

பண்டித ஜவஹர்லால் நேரு காங்கிரஸ் மகாசபைக்குத் தலைவராயிருப்பதற்கு மிகவும் பொருத்தமானவர். எல்லா தகுதிகளும் வாய்க்கப் பெற்றவர். லண்டன் கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலையில் வாசித்தவர்; சிறந்த கல்வியாளர். அத்துடன், உலக சரித்திரத்தை நன்குணர்ந்தவர். அதுவேயன்றி மேனாடுகளில் சுற்றுப் பிரயாணஞ் செய்து அங்கு நடக்கும் அரசியல் நிலைமையை அறிந்தவர். தாய் நாட்டுச் சுதந்திரத்தில் அளவிலா ஆர்வமுடையவர். அத் தேசிய உணர்ச்சியாலேயே, அவர் மேனாட்டுக் கல்வியறிவும், நாகரிகமும் வாய்க்கப் பெற்றவரா யிருந்தும்—செல்வத்திலேயே பிறந்து செல்வத்திலேயே வளர்ந்து கஷ்டமின்ன தென்பதையே அறியாதவரா யிருந்தும்—காங்கிரஸ் நடத்திய தேசிய போராட்டத்தில் தீவிரமாகக் கலந்து பல முறை சிறை சென்றார். தமது அதி தீவிர தேசிய உணர்ச்சியாலேயே மிதவாதியா யிருந்த தமது தந்தையையும் காங்கிரஸில் ஈடுபடச் செய்தார். சட்ட மறுப்புப் போராட்டத்தில் பண்டித ஜவஹரும், அவரது

குடும்பத்தாரும் செய்த தியாகத்தை உலகம் என்றும் மறவாது. ராஜபோகத்தில் திளைத்துக் கொண்டிருந்த அக் குடும்பத்தார் சிறை வாசம் முதலிய கஷ்டங்களை யநுபவித்தமையால், உடல் நலங் கெட்டு அதே நோயாக, பண்டித நேருவின் தந்தையான பண்டித மோதிலால் நேருவும், மனைவியார் கமலா நேருவும் தேச நலத்துக்காக தங்கள் உயிரை அர்ப்பணஞ் செய்தார்கள். அலகாபாத்தில் பண்டித நேருவுடைய பெயர்பெற்ற பெரிய அரண்மனையான "ஆனந்த பவனம்" காங்கிரஸ் மகாசபைக்கு அர்ப்பணஞ் செய்யப்பட்டு, இப்போது அது "சுயாஜ்ய பவன"மாகத் திகழ்கிறது.

பண்டிதநேரு, இவ்வருஷம், லக்ஷ்மணபுரி காங்கிரஸில் தலைமை வகித்ததும் இந்தியா சுற்றுப் பிரயாணஞ்செய்து வருவது அனைவருக்குந் தெரிந்த விஷயம். அவர் வடநாட்டின் பல பாகங்களிலும் சுற்றுப் பிரயாணஞ் செய்துவிட்டு, இப்போது நமது தமிழ்நாட்டுக்கு விஜயஞ் செய்திருக்கிறார்; அவர் எதற்காகச் சுற்றுப் பிரயாணஞ் செய்து வருகிறார் என்பதை நாம் கூற வேண்டுவதில்லை. காங்கிரஸ் மகாசபை தேசத்துக்கு விடுத்துள்ள செய்தியை, தேச மகாஜனங்களுக்குத் தெரிவிக்கவே, அவர் தலைவரென்றே ஹோதாவில் சுற்றுப் பிரயாணஞ் செய்து வருகிறார் என்பதை விஷய முணர்ந்தவர்கள் அறிவர்.

காங்கிரஸ் தலைவர் பண்டிதநேரு அக்டோபர் மாதம் 5-ந் தேதி மாலை தமிழ்நாட்டுக் காங்கிரஸ் தலைவர் திரு. எஸ். சத்தியமூர்த்தியோடு சென்னை வந்து சேர்ந்தார். சென்னை நகரே திரண்டு வந்தது என்று கூறும்படியாக வன்றோ பண்டிதரை லட்சக் கணக்கான ஜனங்கள் முகமலர்ச்சியோடும் ஆரவாரத்தோடும் வரவேற்றனர். காங்கிரஸ் தலைவருக்குச் சென்னை நகர் அளித்த வரவேற்பு ராஜ வரவேற்பையுந் தோற்கடித்து விட்டதென்றே கூறவேண்டும். சென்னை நகரில் காங்கிரஸ் தலைவர் பெயருக்கு மூன்று நாட்களாயினும், இரண்டு முழு நாட்களே தங்கியிருந்தார். அவ்விரு நாட்களில் அவர் பல இடங்களுக்கு விஜயம்செய்தார். பல கூட்டங்களில் பேசினார் பொதுஜனங்கள் நிறைந்த பிரம்மாண்டமான கூட்டமென்ன! மகளிர் கூட்டமென்ன! கலாசாலை மாணவர்கள் கூட்டமென்ன! தொழிலாளர் கூட்டமென்ன! ஹரிஜனக் கூட்டமென்ன! இவைகள் ஒவ்வொன்றிலும், அவரவர்களுக்கு இன்றியமையாத பிரச்சினைகளைப்பற்றிப் பேசினாலும், முக்கியமாக, காங்கிரஸ் செய்தியையே அதாவது தேசிய சுதந்தரத்தையே—மிகவும் வற்புறுத்திப் பேசினார். அத்துடன் ஏழை மக்கள் விமோசனத்துக்கு மிகவும் இன்றியமையாதது என்று தாம் கருதும் அபேதவாத சமதர்மக் கொள்கையையும் பிரசாரஞ் செய்து வருகிறார்.

பண்டிதநேரு பல கூட்டங்களிலும் பேசியுள்ள விஷயங்களை ஊடுருவி யாராய்ந்து பார்த்தால், பலவிதமான அபிப்பிராய முடையவர்

களும், ஆடவரும் மகளிரும், மாணவரும் தொழிலாளரும், ஹரிஜனங்களென்போரும் அனைவரும் காங்கிரஸில் ஒன்று சேரவேண்டும் என்றும் அதன் வாயிலாக, தேசிய சுதந்திரத்துக்குப் பாடுபட வேண்டுமென்றும், தேசிய சுதந்தரம் பெற்றுவிட்டால், அப்புறம் மற்றெல்லா பிரச்சினைகளையுஞ் சுலபமாகத் தீர்த்து சவுஜன்யமான நிலைமையையுண்டுபண்ணிவிட முடியுமென்றும் அவர் கருதுகிறார்; அவ்விதம் மற்றவர்கள் செய்ய விரும்புகிறார் என்பது நன்கு புலப்படும்.

மேலும், பண்டிதநேரு சென்னை நகர மக்களுக்குக் காங்கிரஸ் மகாசபையின் பெருமையையும், இன்றியமையாமையையும் அதைப் பலப்படுத்த வேண்டிய அவசியத்தையும் பின் வருமொழிகளால் வற்புறுத்திக் கூறியிருக்கிறார்:—

"இப்போது வறுமை என்பது எல்லா மக்களுக்கும் பொது; வேலையில்லாத் திண்டாட்டம் எல்லா வகுப்பினருக்கும் பொது. வரிப்பளு, கடன் சுமை ஆகியவை ஒரு ஜாதியார் அல்லது மதத்தினர்க்கு மட்டும் உரிய விஷயங்களல்ல; தேச வறுமை என்பது எல்லாருஞ் சேர்ந்து தீர்க்க வேண்டிய பிரச்சினையாகும். சர்க்கார் உத்தியோகங்களும், சட்டசபை பதவிகளும் 36 கோடி இந்திய மக்களுக்கும் கிடைக்கக் கூடியவைகளல்ல. ஒரு சிலரே உத்தியோகங்களையும், சட்டசபை பதவிகளையும் பெற முடியும். எனவே, பல வகுப்புகளிலுமுள்ள மக்களின் குறைகளைப் போக்க வகுப்பு வாதிகளால் ஒன்றுஞ் செய்ய முடியாது. தேசமக்கள் அனைவருக்கும் பொதுவான பிரதிநிதித்துவ சபையாகிய காங்கிரஸ் ஒன்றே, ஜாதி, மத, நிறபேதமின்றி எல்லோருடைய நன்மைக்கும் உழைத்து வருகிறது.....................தேச மக்கள் எல்லாருடைய வறுமையையும் மற்ற தொல்லைகளையும் போக்க வல்லதாகிய காங்கிரஸைப் பொதுமக்கள் முழு பலத்துடன் ஆதரிக்க வேண்டும்."

பண்டிதநேரு சென்னை நகரில் மட்டுமல்லாமல், தமிழ்நாட்டுச் சுற்றுப்பிரயாண முழுவதிலும் காங்கிரஸ் மகத்துவத்தையும், அதில் எல்லா மக்களும் சேரவேண்டிய அவசியத்தையும், யாரும் விரும்பாத புதிய அரசியல் சட்டத்தையும், அதை ஆதரிக்கும் பிற்போக்கான கட்சிகளையும் எதிர்த்து ஒழிக்க வேண்டிய இன்றியமையாமையையும் ஆணித்தரமாகக் கூறி வருகிறார். இத்தமிழ்நாட்டுச் சுற்றுப்பிரயாணம் முடிந்ததும் பண்டிதர் ஆந்திர தேசத்துக்குச் செல்வார்.

ஆகவே, பண்டித ஜவஹர்லால் நேரு தமிழ் நாட்டின் பலபாகங்களிலும் பரப்பிய காங்கிரஸ் செய்தி தமிழ்நாட்டு மக்களுக்கு ஒரு புத்துணர்ச்சியையும், அவர்களுக்குக் காங்கிரஸில் மேலும் பக்தியையும் உண்டாக்கி யிருக்கும் என்பது திண்ணம். காங்கிரஸ் தலைவர் உபதேசத்தைத் தமிழ் மக்கள் ஏற்று காங்கிரஸை முழு மனதோடு ஆதரிப்பார்களென்று நம்புகிறோம். ஓம் தத் ஸத்.

# இரணியன் மனமும் மாயவன் செய்கையும்

( ஜி. ஸ்ரீநிவாசன் )

ப்புனித பூமியாகிய இப் பரத கண்டத்தின் கண் மானிடர்கள் அஞ்ஞானத்தா லுழலாவண்ணம் உலகிருளை நீக்கி, ஞானச் சுடர் விளக்கி, பல்லாயிர மாண்டுகளுக்கு முன்னரே ஸ்ரீயப் பதியான சர்வே சுவரனுடைய கிருபாகடாட்ச வீட்சயண்யத்தால், உலகமுய்ய வேண்டுமென, ஒன்பது அவதார லீலைகள் நிகழ்ந்ததை வாசித்தும் கேட்டும், உணர்கிறோம் என்பதை யாவரும் மறுக்க இயலாது. அவ்வவதாரங்களுள் சிறப்புற்று விளங் காநின்ற ராமகிருஷ்ண நரசிம்ம அவதாரமும் முக்கியமென்பதும், அவ்வவ தாரங்களே கம்பர் மனத்தினை கவர்ந்தவை என்பதும் யாவரும் அறிந்த விஷயமே. நாம் உற்று நோக்குங்கால், கற்போர் மனத்தினைக் கவரும் வண்ணம் சொற்பொலிவு, பொருட் பொலிவு ஒருங்கே யமையப் பெற்று அவதாரங்களினுள்ளும், கம்பர் காவியத்திலும் திகழக் காணலாம்.

கம்பர் தோன்றி வான் முட்டும் புகழ்வீசி, எட்டுணை சீரோடும் சிறப் போடும் வையமென்னும் தன் கையால் அணைத்து பேரின்பமென்னும் வானத்திருத்த ஞானமென்னும் நற்பாலூட்ட, தீந்தமிழ் அற்புத மழலையில் கிடைத்த, காதைகள் செய்தனரன்றோ !

இப் பேரின்பம் முற்காலத்திய அசுரர்களிடமும் தழைத் தோங்கி யதை நாம் காண்கிறோம். இதற்கு மேற்கோளாக "இரணியன் மனமும் மாயவன் செய்கையும்" என்பதை சிறிது ஆராய்வோம். இரணியன் யார்? அவன் மனம் யாது? அவன் செய்கை யென்ன? இவைகளை யாராயுமிடத்து கரதலாமலகம்போல வீடு பேறு இலங்கக் காணலாம். அசுர அரசன் இரணியன் தனக்குற்ற சாபத்தை யெண்ணி துவாரபாலக சேவையினின்றும் விடுபட்டு, அசுர அரசனாகப் பிறந்தமையால் அதிசீக்கிரமாக எப்படியாவது க்ஷீராப்தி நாதரின் அண்டையில் முன் பதவி பெறக் கருதியும், மூன்று அவ தாரங்கள் எடுக்கும்படி க்ஷீராப்திநாதருக்கு அசுரர்கள் கஷ்டம் விளைவித் தமையாலும், தான் நேரில் தரிசனம் கண்டு அசுரர்களின் இடுக்கண் களைய வெண்ணி மனமுருகி, நெடுநாட் செய்வகை யின்னதெனத் தோன்றாத வனாய் யோசனை செய்து, ஓர்வித முடிவிற்கு வந்தனன். யாதெனில்;

"மலைமிசைத் தோன்றும் மதியம்போல் யானைத்
தலைமிசைக் கொண்ட குடையார்—நிலமிசைத்
துஞ்சினரென் றெடுத்துத் தூற்றப்பட்டா ரல்லா
லெஞ்சினா ரிவ்வுலகத்தில்."

என்றபடியும்,

"படுமழை மொக்குளிற் பல்காலுந் தோன்றிக்
கெடுமிதோர் யாக்கை யென்றெண்ணித்—தடுமாற்றந்
தீர்ப்போம்."

என்றபடியும்.

"வேதம்நூற் பிராயம்நூறு மனிதர்தாம் புகுவரேனும்
பாதியு முறங்கிப் போகும், நின்றதில் பதினையாண்டு
பேதைப்பாலகனதாகும் பிணி, பசி, மூப்புத் துன்ப
மாதலால் பிறவி வேண்டேன் அரங்கமா நகருளானே."

என்ற படியும்,

மலைமிசை தோன்றும் மதியம்போல, யானையின்மீது, அம்பாரிவைத்து, வெண்கொற்ற குடை கவிய பவனி வந்தும் நவரத்தின கஜிதங்க ளிழைத்த அரியணை மீது அமர்ந்து பூலோகத்திலிருந்து இந்திரபதவியை ஏற்றாலும், இறக்கிறார்களே யொழிய இறவாது எஞ்சியவர் யாவருமிலர். மழை நீரிலே தோன்றி அழியும் குமிழியைப்போல் பலமுறை, உண்டாகி யழியும் இயல் புடையது யாக்கை. இப் பிறவியால் உண்டாகும் மயக்கத்தைத் தீர்க்க, தவத்தால் ஆகாத காரியம் யாதுளது? வேதத்தில் சொல்லிய பிரகாரம் ஆயு ளிருந்தால் பகவானை யடைய அநேக ஜன்மாக்கள் வேண்டும். எல்லா ஜன்மாக்களிலும் இடையூறாக நிற்கின்ற பிணி, பசி, மூப்பு, தாகம், பேதமை இவைகளை இதே ஜன்மாவில் யாவற்றையும் களைந்து ஊழியோர் பகலா யோதும் ஆண்டெலாம் உலகமேழும் வீயுற்ற ஞான்றும், வீவின்றென நிற்க தவமேற் கொள்வானாயினன்.

"தன்உயிர் தான் அறப் பெற்றானை யேனைய
மன்னுயி ரெல்லாம் தொழும்."

"கூற்றங் குதித்தலுங் கைகூடு நோற்றலி
னாற்றல்தலைப் பட்டவர்க்கு."

என்று பொய்யில் புலவர் அருளிய வண்ணம் தவத்தால் மாயக்கடவுளை காண இயலும் (நமக்கு) எல்லாப் பொருள்களையும் நல்கி காத்துவருகிற பரம் பொருள், மாயவனை எப்பொழுதும் போற்றுகிறோமா? கடவுளைத் தெரிந்து வணங்கவேண்டுமே; அவரிட்ட கட்டளைப்படி நடக்கவேண்டுமே, மரக் கலத்தை யாதாரவாகக் கொண்டு கடற்கரை யேறுகிறவரைப்போல, தவத்தை யாதாரவாகக்கொண்டு இல்வாழ்க்கை கரையேற வேண்டுமே, உயிரை இனிய உயிராக ஆக்கவேண்டுமே இம்மையிற் கடவுளை கண்ணுற்று மறுமையிற் துவாரபாலக சேவையில் அமர்ந்து பேரின்ப மெய்தவேண்டுமே. தான் மட் டிலு மல்லாது ஏனைய உயிர்கட்கும் உய்திற மேற்படுத்த உண்மைக் கட வுளை யறிந்தா லல்லாது, இயலா"தென்று நான்முகன் வாயிலாக வேதப் பொருளை யோதி உணர்ந்து, விண்டு, ஆரியர் மெய்யறிவுணர்த்திய முறையே, ஆசில் நான்மறைப்படியும், எண்ணில் ஆகமத்தின்படியும், துறக்கும் வாயுவை உணவாகக்கொண்டு, நிராசனாகி, இந்திரியங்களை யடக்கி, வேதப் பொரு ளல்லாது வேறு ஒன்றையும் கருதாமல் மனதை யடக்கி, நியமம் வழுவாமல் தவத்தை நடாத்தினன்.

"நீரிற்சாகிலன் நெருப்பினுஞ் சாகில னியிர்ந்த
மாருதத்தினு மண்ணின் மற்றெவற்றினு மாவான்
ஒருந்தேவரு முனிவரும் பிறர்களு முரைப்பச்
சாருஞ்சாபமு மன்னவன் றனைச்சென்று சாரா."

"உள்ளிற் சாகிலன் புறத்தினுஞ் சாகில னுலவாக்
கொள்ளைத் தெய்வவான் படைக்கலம் யாவையுங் கொல்லா
நள்ளிற் சாகிலன் பகலிடைச் சாகிலன் மனூர்
கொள்ளச் சாகில னரினி யவனுயிர் கொள்வார்."

ஏன் வரங்கள் பல வாங்கவேண்டும்? பிறவிப் பிணியை நீக்கக் கருதியா? மாயவன் தரிசனம் காணக் கருதியா? அசுரனின் மன நிலை விளக்கக் கருதியா? அசுரனின் மன நிலை விளக்கப் புகுந்த கம்பர் வெகு அழகாக சித்திரித்திருக்கிறார். பல ஜன்மங்களில் ஏற்படும் இடுக்கண் களைந்து, பதவிகளை யேற்காமல் தடுத்து உண்மைக் கடவுள் மாயவனை நேரில் கண்டு, தானும் பிறரும், பிறந்து, பிறந்துறும் பெருந் துன்பத்தை யகற்றவன்றோ ? உலக ரக்ஷகனாகிய மாயவனல்லாது பிறவிப் பிணியைத் தாண்ட இயலாதென்பதை தமது குலத்துள்ள அசுரருக்கும் தமது சந்ததியாருக்கும் உலகினருக்கும் நிலைநாட்டி, பேரின்பத்தை யடைய வேண்டியே!

மூன் மூன்று அவதாரங்களால் அறம் தலை நிற்க, வேத நீதியை நிலை நிறுத்த திறம் தெரிந்து உலகம் பூண செந்நெறியின்கண் செலுத்த வதைக் கப்பட்ட அசுரனின் திறன் தெரிந்த தானவ்வாறு நடவாமல் தனது சந்ததியாருக்கும் வினையோருக்கும், குலத்தவருக்கும், பேரின்பத்தை யளிக்கக் கருதியே வரங்கள் பல பெற்றனன்போலும். நீர், அக்னி, காற்று இவைகளால் இறந்தால் துர்மரணம் மும்மூர்த்திகளாலும் அவர்களின் படைக்கலன்களாலும் இறந்தால் பதவிகளும், வீர சுவர்க்கமும், முனிவரின் சாபத்தால் பற்பல விதமான அநேக ஜன்மாக்கள் சாபவிமோசனம் வரை யெடுக்கவேண்டி வரும். வரங்கள் யாசித்து ஆயுளை மிகைப்படுத்திக் கொள்ளாவிட்டால் அநேக ஜன்மாக்களுண்டு. சிலர் வியாதி, இடி, பைசாசம், இராஜீக தெய்வீகங்களாலும், பீடிக்கப்பட்டு அல்லல் உறுவதுண்டு. பகலிரவு உள்ளும் வெளியும், ஆகாயம் பூமி யென்றும், ஏன் கேட்கவேண்டு மெனின் தன்னை யறியாமல் ஒரு காரியத்தில் பிரவேசித்திருக்கும் பொழுதாவது, தூங்கும் பொழுதாவது, மாயமாக எந்த இடத்திலாவது தன்னை வதம் செய்யாமல் தனக்கும் குலத்தவருக்கும். வினையோருக்கும் மாயவனின் தரிசனம் காணச்செய்து சந்தோஷிக்கவே இந்த வரங்களல்லாது, வேறு எதனால்? இரணியனின் மட்டற்ற மகிழ்ச்சியை நாம் ஆராய்வோம்.

கர்ணன், பீஷ்மர் இருவருக்குப் போர் நடக்கும்பொழுது (பாரதப் போரில்) போரை நிறுத்தி நேரிற் சென்று சதுர்புஜத்தோடும் சேவை தரவில்லையா? விதுரன், அக்குரூரர், துருவன் முதலானவர்களுக்கும், ஜாதி மதம், பர்வம் காணாது நேரிற் சென்று சதுர்புஜத்தோடும் சேவை தரவில்லையா? என்னே மாயவனின் விந்தை! பரந்தாமனின் வரவை வெகுகாலம் வரை எதிர் பார்த்திருந்த இரணியன் வெகுண்டு, இறுதியாகப் பள்ளியில் பால பருவமுதல் அதிலும் படிக்க ஆரம்பமாகு முதல் தழைத்தோங்கும்

அஷ்டாக்ஷர மென்னும் நாமா அஷ்டாக்ஷர மென்னும் விதத்தில் நல் வினை யென்னு மாமாக நாரி, வீடு அடைதல் என்னும் வேட்கை வேரூன்றி, பக்திகளாகிற கவடுகள் விட்டு, நற்குண மென்னும் பூபூத்து, பதவி யென்னும் காய் காய்த்து, பேரின்பம் என்னும் பழம் சொரியச்செய்யும் நாமா, மனப் பக்குவமாகும் வரை நாவை விட்டு அகலாத நாமா பள்ளியில் நல்கும் வரை வெளி வரார். அதனை நிறுத்தி தனது நாமா நிறுவ தனது ஆணையை எல் லாப் பள்ளியிலும் நிலை நாட்டினான்.

இனி உலகம் தளரும் உய்யும் யார்க்கமில்லை. ஒவ்வோர் துறையிலும் மாயவனின் தரிசனம் காண விரைகின்றான். பள்ளியிலும் பாலர்களிடையே பாலர்களறியாது நாவினால் புலரும் அஷ்டாக்ஷர தாரகமந்திரம் நீக்கப்படா தென அறிந்து, மாயவன் உண்மை கண்டும், நிதானித்து, இராவணனின் பக்கலில் வீபிஷணனும், கம்ஸன் பக்கலில் அக்குரூரும், துர்யோதனன் பக்கலில் துரோணர், பீஷ்மர், விதுரர் முதலானவர்களை யேற்படுத்தி நீதி போதனை செய்ததைப்போல, பள்ளியில் நீதி தவறிய இரணியன் பக்கலில் பிரகலாதனை வைத்து பள்ளியை ஆதியாகக்கொண்டு சேவைதா முற்பட்ட னர் போலும்.

"ஓ நமோ நாராயணாய வென்றுரைத்துள முருகித்
தானமைந்திரு தடக்கையுந் தலையின் மேற்றாங்கிப்
பூ நிறக் கண்கள் புனலுக மயிர்புறம் பொடிப்ப
ஞான நாயக னிருந்தன னந்தண னடுங்க"

என்று கம்பர் பெருமான் பாடியபடி முறைப்படி பள்ளிக்குச் சென்ற பிரகலாதனுக்கு சண்டமார்க்கன் வழக்கம் போல் "இரண்யாய நம" வென்று போதித்தான். ஆதி பரம்பொருள் ஆலிலையில் கண்வளரும் பிரம் மம், உலகங்களை விளையாட்டாக படைக்கும் கடவுள், உலகங்களை எவ்விதம் பரிபாலிப்பது மென்பதையே யோசிக்க யோக நித்திரை செய்யும் க்ஷீராப்தி நாதன் வேதத்தின் இறுதிப் பொருள், உத்தம கதியை உய்யும் வழியை எய்யும் நாராயணர், பிரகலாதன் மனத்திலே ஊக்கத்தை அளித்து பேரின்ப ஊற்றை சுரக்கச்செய்து இரணியனால் இடையூறடைந்த தாரக நாமாவை பள்ளியில் ஊர்ஜிதமாக்கக் கருதி பிரகலாதன் நாவில் தங்கினார். திடுக்குற்ற பிரகலாதன் தகப்பனாரின் நாமாவுக்குப் பதிலாக சிரமேற் கரங்குவித்து, அஞ் சலி செய்து, தேகம் புளகிக்க, சரீரம் விம்ம, மயிர் கூசசெறிய, கண்களிற் ஆனந்த பாஷ்பம் பெருகி அருவி ஆறாகவோட, மனத்தால் தியானித்து நாவி னால் ஓம் நமோ நாராயணாய' என்னும் தாரக மந்திரத்தைக் கூறினான்.

அரிய தவமியற்றுவார் யாருமிலரென்று இயற்றிய இரணியனுக்கு சே வை தராமல் நேர்மாறான நிலையிலல்லவா மாயவன் செய்கை செய்யக் கருதி னன்போலும். எவ்வளவு சிரமம் எடுத்துக் கொண்டும் அவ்வளவும் வீணாகி, எள்ளளவும் பயன் படாதது கண்டு, சண்ட மார்க்கன் வேந்தன்பாற் சென்று "வேந்தே! பிரகலாதன் மனம் மாயா விநோத நிலையில் நிலைத்திருக்கிறது. அதனைச் செப்ப நா எழாமல் உள்ளம் பதைத்து நடுங்குகிறது. வழக்கம் போல உமது நாமாவை உச்சரித்தேன். அதனைச் செவிக்கொள்ளாமல் 'வேதம் ஓதாம லறிவேன். அறிந்தாலும், நினைத்தாலும், கேட்டாலும், சொன்னாலும்

தன்பக்கட்லை கடப்பது உரியது. 'ஓம், நமோ நாராயணாய' என்று இயம்பு கிறான்'' என்றனன்.

அரியணை மீது அமர்ந்து தேவர்கள் குற்றேவல் செய்ய சதா கம்சன் கிருஷ்ணனை நினைத்ததைப் போல், எப்பொழுது காட்சியளித்து மீட்சி தருவாரோ வென்று நினைத்திருக்கின்ற இரணியன் செவியில் புகுதலும், ஆகாய மளாவி குதித்து, தன்னை மறந்து, ஆடிப் பாடி, 'என்னையன்றி இரு நிலத்தில் பிறந்தோரில் யார் பெற்றார்? ஏனையோரால் நன்மை தீமையில்லை. நாராயணரை எனது பெருங் கோயிலில் அவதரிக்கச் செய்து தரிசனம் கண்டு இருபுயத்தால் தீண்டப்பெற வேண்டு'மென வெண்ணி பிரகலாதனை அழைத்துவர கட்டளை யிட்டனன். தன் முன் பாதம் பணிந்து நிற்கின்ற தன் மகனை கட்டி யணைத்து பக்கத்தே யிருத்தி 'உபாத்தியாயரிடத்தில் சொன்ன சொல் யாது? என் முன்னிலையில் கூறு? யான் கேட்க வேண்டு' மென்றான் பனைத்தோள் வீரன்.

''காமம் யாவையுந் தருவது மப்பதங் கடந்தால்
சேம வீடுறச் செய்வதுஞ் செந்தழன் முகந்த
ஓம வேள்வியி னுறுபத முய்ப்பது மொருவன்
நாம மன்னது கேண்மோ நாராயணாய''

தன் முன் கூறாது உபாத்தியாயரின் முன்னிலையிற் கூறியதற்கு மனம் வெதும்பி மறு முறையும் சொல்லச் செய்ததின் கருத்து யாது? வேந்தன் மனமதான் என்னே? அரிய தவமியற்றி வரங்கள் பல பெற்று அல்லும் பகலு மாக சேவைக்கு காத்திருக்கும் வேந்தனுக்குக் கொடாமல் அவன் வம்சத்தில் அவன் புதல்வனுக்கு தனது நாமாவை யுரைத்த மாயவன் செய்கைதான் என்னே! வானவரையும், கூற்றுவரையும், நான்முகனையும், செஞ்சடை யானையும் கடந்து அவர்களின் படைக்கலன்களையும் கடந்து தரிசனம் காண மனத்தின்கண் உதித்த வரமெல்லாம் யாசித்து, (எண்ணத்திற்கு மாறாக நடக்காவண்ணம்) மாயவனை நேரில் காணக் கருதிய வேந்தனுக்கு நேர் மாறான செய்கையில் மாயவன் நடாத்தியது விந்தையினும் விந்தையே! அஷ்டாக்ஷர மந்திரத்தை மறுமுறை நேரில் செவி சாய்த்த வேந்தன், சம்சார சாகரத்தின் ஊழ்வினையாகிற சுழலினின்றும் கரையேற நன் மரக் கலமாகிறதும் எவ்லோருக்கும் கிடைப்பதற்கு அருந்தனமும் ரிஷிகளாலும் முன்னோர்களாலும் கடைந்தெடுத்த மெய்ப்பொருளாகிய குலதன அவிழ்தமு மிதுவே.

'' அற்றை நாண்முதல் யானுள நாள்வரை யப்பேர்
சொற்ற வாயையுங் கருதிய மனத்தையுஞ் சுடுமென்
ஒற்றையாணை மற்றியா ருனக்கிப் பெயருரைத்தார்
கற்றதா ரொடு சொல்லுதி விரைந்தெனக் கனன்றான் ''

ஆற்றுமணலை எண்ணினாலும் எண்ணலாம், நம்முடைய குலத்தில் தோன் றிய அசுரர்களை இரண்டு அவதாரங்கள் எடுத்து அழிக்கவில்லையா? உடன் பிறந்த இரணியாட்சனை மூன்றாவதாக வராக அவதாரமெடுத்து வதம் செய்யவில்லையா? மீன், ஆமை, வாரகம் முதலிய ரூபமாக நினைத்த மாத்தி ரத்தில், நினைத்த விடங்களில், இமைப்பொழுதில் எடுத்து மறைந்திருக்கிறார்.

அசுர ஜாதியுண்டான நாள்முதல் அதிலும் தமையனை வதைத்த நாட்முதல் அசுர ஜாதியாரையும் வம்சத்தவரையும், சுடுமென நான் பிறந்து, எனது குலத்தவரை யழிக்காமல் குலத்தவருக்கும் வம்சத்தவருக்கும் தரிசனம் தா வரங்கள் பெற்றுள்ளேன். அசுரர்களின் நிமித்தமாக இம்மாயவன் அவதரிப்பதை (தனக்குப் பிற்காலம்) தடைசெய்வேன் எனவெண்ணி பிரகலாதனைப் பார்த்து 'தந்தையெப்படி மைந்தனப்படி' என்றபடியிராமல் 'நீயேன் எனது பெயரை உச்சரியாமல், நாராயணர் பெயரை உச்சரிக்கின்றாய்? "பிதிர் தேவோபவா" என்று நீ கற்ற வேதம் மூறையிடவில்லையா? மூத்தொழில்களை யுடையது எந்த வேதத்தின் சம்மதமென்று தேறினாய்? ஆதியந்தமிலாத அளவிறந்த உலகங்களிலும் வேதம் எந்த மார்க்கமோ? அந் நன்மார்க்கத்தை கடைபிடித்து நல்வினை செய்தவர்கள் மேம்படுவார்கள் என்பது உண்மையாம்' என்று உலக நடையாக வினவி, மேலும் 'நீ இளம்பிள்ளை; சொன்ன சொல்லினின்றும் மாறினாலும் மாறுவாய் பிழை பொறுத்தேன்' என நவின்றான்.

"உரையுள துணர்ந்தவ துணர்ந்து கோடியேல்
விரையுள வலங்காய் வேத வேள்வியின்
கரையுள தியாவருங் கற்குங் கல்வியின்
பிறையுள தென்பது மைந்தன் பேசினான்."

எவ்வளவு சோதனை செய்தும் பிரகலாதன் தன் மாசிலா திருமனத்தால் வேதமாகிய கடலுக்கு கரையாயும், வேள்விக்கு பயனாயும், எல்லோராலும் கற்கும், கற்கப்படும கல்வியாகிய பாலுக்கு பிறைபோலுமிருக்கிறது 'ஓம் நமோ நாராயணாய' வென்னும் திருவருமலையான் நாமம்; காரணம் காரியம் என இரண்டினுள் ஒன்றையொன்று பின்பற்றி பிரளய காலத்தில் உலகம் யாவையும் தம்மூ ளடக்கியும் உற்பவிக்கப் பண்ணியும் இரண்டறக் கலந்து நிற்கும் ஆதியந்த மிலாதவருடைய மகிமையை நாவினால் சொல்ல இயலுமோ? சர்வஞ்ஞரை வேத விளைபொருளை வேதத்தின் நீதியை, தூயோனை, மையார மழைவண்ணனை, கையாழியனை, பையாடரவிற் றுயிலும் பரனை, கருணாகரனை, வேதமே அறியேன் என்று சொன்ன ஸ்ரீமந் நாராயணரின் பெருமையைக் கூறிடப்போமா? சிறிதும் அச்சமின்றி சந்தோஷ பரிதனாய் கூறிய அஷ்டாக்ஷரத்தின் மகிமையை கேட்டுணர்ந்து எட்பொழுது பகவானின் ரூப குணங்களை யுரைத்தானோ மாயவன், பிரகலாதனின் ஏகாக்ரக சித்தத்தை சோதித்து நாராயணர் பக்தனை கைவிடார். பிரகலாதனையும் ஓர் பக்தனாகவே அமைத்துக்கொண்டதை (வெளியிட வேண்டியதையும்) நிரூபிக்க நீர், அக்னி, யானை, விஷம், மலை இவைகளின் மூலமாக பல அல்லலுக்கு உட்படுத்தினான் பிரகலாதனை இரணியன். மாயவன் தன்னை மாயவனாகவே யாக்கக் கருதி ஒவ்வோர் துறையிலும் சமயத்திலும் ஒவ்வொன்றிலும் இடுக்கண் உருவண்ணம் பல சோதனைகளிலும் இரட்சித்து காத்து, பிரகலாதனிடம் தாண்டவமாடுவதை நிரூபித்தார். சிறிதும் துன்புறாத சோதனைகளை கடந்த பிரகலாதனை தானும் தன்னைச் சூழ்ந்தவனும் கண்டும் கேட்டும் ஆனந்திக்குமாறு தன்பால் கொண்டுவர ஆக்ஞையிட்டனன் இரணியன்.

"மூன்றவன் குணங்கள் செய்கை மூன்றவ னுருவமூன்று
மூன்றுகண் சுடர்கள் சோதி மூன்றுதன் னுலகமூன்று
தோன்றலு மிடையூறுந் தொடங்கிய பொருள்களெல்லாம்
சான்றவ னிதுவேத முடிவது சாதமென்றான்."

பகவானின் நாமாவையுரைத்த பிரகலாதன் மூன்று லோகத்திற்கும் சாட்சி பூதனாகவும் முத்தொழில் உடையவராகவும் மூன்று ரூபங்களாக கோயில் கொண்டு, சந்திரன், சூரியன், அக்னி, இவைகளை நேத்திரங்களாக அமைத்து உலகினோர் உலகில் செய்யும் காரியங்களை கண்ணுறுகின்றான் நாரா யணன். மேலும் அர்ச்சா ரூபமாகவும் கோயில் கொண்டிருப்பதைக் கண் ணுள் திருவடியைக் கண்டு ஆதரவு பெருகி கையால் தொழுது, காலால் வலம் செய்து, புகழ்களை நாவினால்பாடி, ஆனந்தம் கண்டு களிக்க, பெரும் கருணை படைத்து விளங்காநிற்கும் நாராயணரே யொழிய ஒருவரையும் நம்புகிலேன். பின் ஒருவரையும் பின் செல்லேன். இதுவே வேதத்தின் முடிவான பிர மாண மென்றான்.

"சாணினு முளனோ தன்மை யணுவினைச் சத கூறிட்ட
கோணினுமுளன் மாமேரு குன்றினுமுள னிந்நின்ற
தூணினுமுளன் சொன்ன சொல்லினுமுள னித்தன்மை
காணுதி விரைவி னென்றா னன்றெனக் கனகன் சொன்னான்."

பக்தவத்ஸல பராதீனனான பரந்தாமன் பக்தன் வாயிலாக தான் அவத ரிக்க வெண்ணி எந்த ஸ்தலத்தை எப்பொழுது குறிப்பிடுவானோ வென்று வருமுன் காப்பவனாகி உலகத்திலுள்ள எல்லாப் பொருளினுள்ளும் பூர்ண அவதாரம் செய்தார். இரணியன் மனப்படி இரணியனைத் தவிர மற்ற அசு ரர்களை வதம் செய்யாமல் அரண்மனையிலேயே அவதரிக்கவும் நரலோகத்தி லுள்ள நரர்களுக்கு சிம்மமாகவும் தன்னைத் தவிர வேறு தெய்வங்கள் இல்லை யென்பதை நிலைநாட்டவும் உயிரற்றதிலும் உயிருண்டு என்பதை நிரூபிக்கக் கருதி "தூணினு முளன்" அடியார்களின் கண்களுக்கு எங்கணு முளன் தொட்ட தொட்ட இடந்தொறும் தோன்றுவான் என்றும் பிரகலாதன் வாயி லாக வெளிவந்தார்.

கம்பர் தமது மேன்மையான கருத்தை நிலைநாட்ட துவாரபாலக சேவை யினின்றும் விலகி அசுர மரபிலுதித்தவன், அனேக வரங்களைப் பெற்றவன், மீண்டும் துவாரபாலக சேவைபுரிய பேராவக் கொண்டவன், வம்சத்தவரை யும் குலத்தவரையும் பேரின்ப மடையும்படி செய்ய எண்ணங்கொண்ட வன். பக்கத்தே நவரத்தின கஜிதங்களாலே இழைக்கப்பட்டு மாமேரு குன் றைப்போல் தாங்கி நிற்கின்ற, சுட்டிக் காட்டிய தூணை கையால் அறைந்தான் என்றார். கையால் அறைய தூணை நோக்கி விரைந்து ஆர்வத்தோடு சென்று அறைந்த மாத்திரத்திலே, முன் பதவியில் சேவை தந்ததுபோல் சதுர் புஜங்க ளோடும் சேவை தருவாரென்று வெண்ணியிருந்த இரணியன் ஏமாற்றமடை யும்படி மிருகேந்திர வதனமும் நரேந்திர உடலுமாக அவதரித்தார். தான் ஹரியை முன் பதவியில் கண்டு களித்ததைப்போல் காணக்கருதியது வீணாகி நரசிம்மமாக அவதரித்ததைக் கண்டு உள்ளம் கவர்ந்தெழுந் தோங்கும் கோப வாய்ப்பட்டு, பக்கத்தேயிருந்த அசுரர்களை யேவாமல், மறு ஜன்மாவில்லாவது சதுர் புஜத்தோடும் சேவை காணக் கருதி, தானே மாயவனின் சரீரத்தை நாயகநாயகி பாவமாகத் தழுவி பதம் பெற்றனன். இதனால் மாயவன் செய்கை யையும் இரணியன் மனத்தையும் ஒருவராலும் காண இயலாத தென்பது விளங்குகிற தல்லவா!

---

# பணம்பற்றி மணமா?

(ஸ்ரீரங்கம்—N. C. G. ஸ்ரீநிவாஸ வரதாசாரியார்.)

பெண்மணிகள் ஓர் குறிப்பிட்ட வயது வரை அவரவர் தம் தம் பெற்றோரின் சம்ரக்ஷணையின் கீழ் வாழ்க்கை நடத்த கடமைப்பட்டவர்களாயினும், விவாகம் செய்யத்தக்க வயது வந்தவுடன் ஓர் வரனைத்தேடி, தமது பெண் பிற்காலத்தில் கண்கலங்கா வண்ணம் சுகமே அவளது கணவனுடன் இல்லறம் நடத்த வேண்டுமே என்ற எண்ணம், பெண்களை ஈன்ற ஒவ்வொருவருக்கும் உளதாம். எனினும் ஓர் சிலர் குணத்தைக் கண்டு தம் பெண்ணைக் கொடுக்காது பணம் பெரிதெனக் கருதிக் கொடுப்பதும் பல இடங்களில் நடைபெறும் சங்கதி.

## 1. விவாகம்

தமது பெண்ணிற்கு பனிரண்டு வயது வந்தவுடன் விவாகம் செய்து கொடுக்கவேண்டிய ஏற்பாடுகள் செய்யப்படுகின்றன. பக்கத்து ஊரிலுள்ள தங்களது சொந்தக்கார இனத்திலேயே ஏதோ சுமாரான (S. S. L. C.) கல்வி பயின்றவரன் இருப்பினும், அவ் வாலிபனுக்குக் கொடுக்க இஷ்டப் படாது, வேறு ஊர் ஊர் ஆகச் சென்று வரன் பார்க்கத் தலைப்படுகின்றார். சொந்தக்கார வரனானது மிகவும் கண்யமுள்ள குடும்பத்தில் பிறந்த வாலிபன். பரமசாது. அழகில் நிறைந்தவன். கல்வியில் தேர்ந்தவன். தன் வேலையுண்டு; தான் உண்டு என நினைத்து வேறு அனாவசிய விஷயங்களில் தலையிட்டுக்கொள்ள விரும்பாது காலம் கடத்துபவன். ஆனால் சுமாரான சொத்துக்களே அவ் வரனுக்கு உண்டு. ஆதலால் அவன் ஏழை யாயிற்றே. அவனுக்குப் பெண்ணை எப்படிக் கொடுப்பது? என்பன போன்ற வினாக்களைத் தம் வீட்டிலுள்ளவர்களிடம் கூறத் தொடங்குகிறார். இவர் வேறு வரன் பார்த்து முடித்துக்கொண்டு விவாகத்திற்கு தினத்தையும் நிச்சயித்து வந்து விடுகிறார். இப்போது பார்த்து வந்துள்ள வரனின் நிலைமை என்ன தெரியுமா? பையன் (வரன்) பம்பாயில் உத்தியோகம் செய்கிறானும். மாதம் சம்பளம் முக்கால்நூறு பெறுகிறானும். பூர்வீக ஊர் கல்கத்தா. பையனது படிப்பு, M. A. தலையில் மயிர் கிராப், சதாகாலமும் உடம்பில் அங்கி அணிந்தவாறு தானும். சகோதர-சகோதரி அவருக்குக் கிடையாதாம். ஒரேபிள்ளை. சொத்து இரண்டு வேலி. விவாகம் நிச்சயித்தவிதம் எப்படி தெரியுமா? இவ்வரனுக்கு பந்து ஒருவர் திரிசிராப்பள்ளியில் உண்டாம். அவரிடம் சென்று கலியாணம் நிச்சயம் செய்யப்பட்டதாம். எல்லாம தந்தியின் மூலம் பம்பாய்க்குத் தெரிவித்து, பதிலும் தந்தியின் மூலம் கிடைத்து, கம்பியின் உதவியினால் இவ்வரனை நிச்சயம் செய்யப்பட்ட தாகும். கடைசியில் இவ்வரனுக்கே பெண்ணை விவாகம் செய்து தந்து விடுகிறார்.

## 2. கணவ னில்லம்

பெண் சுசீலாவிற்கு விவாகமாய் கணவனில்லம் சென்று விட்டாள். வயதோ பதினாறு. இவள் தன் கணவனில்லம் சென்ற மறுமாதம் அவளது கணவனுக்கு அவனது உத்தியோக சாலையிலிருந்து ஓர் கடிதம் கிடைத்தது. அதில் "உமது சம்பளம் ரூபாய் 75-ல் ரூபாய் 20- பிடித்து 55-ரூபாய் சம்பளம் நிர்ணயித்திருக்கிறோம். நீர் செய்துள்ள பெரும் தவறுதலுக்கு உம்மை வேலையிலிருந்து நீக்கிவிட வேண்டுவேது அவசியமாயினும், அடியுடன் உம்மைக் கெடுக்க எண்ணமில்லாததால் இவ்விதம் ஏற்பாடு செய்துள்ளோம்" எனக் கண்டிருந்தது. மறுதினம் இவனது தாயார் இவனிடம் நெருங்க தன் குமாரனது கவலைக்கிடமாயுள்ள முகத்தைக் கண்டதும் "என்னடா என்ன சமாசாரம். சொல்லு ஒளிக்காதேயடா" என்று அருகில் வந்து கேட்க, குமாரனும் சமாசாரத்தைக் கூறுகிறான். இவன் சொன்னதுதான் தாமதம் "அடே, எல்லாம் அந்தப் பாழாப்போன கிட்டுவினால் வந்த வினையே இது. இதற்கு முன் இந்த சம்பவம் உனக்கு நேர்ந்ததுண்டா? வீட்டில் கால் வைத்து ஏறினாள் உன் பெண்டாட்டி; பிடித்ததடா சனியன் நமக்கு. எங்கோ பட்டிக்காட்டில் பிறந்த இவளை நமக்குத்தான் கொண்டு வந்து சேர்க்கவேண்டுமா அந்தக் கிட்டு." இதுபோன்ற இராமாயணத்தைத் தொடங்குகின்றான் அந்த மாமி.

## 3. குடும்பத்தில் சச்சரவு

சுசீலா யாது செய்வாள்? அறிவுள்ள நங்கைகளுள் இவளும் ஒருத்தி. எக் கஷ்டம் வந்த போழ்திலும் கணவனே தெய்வமென நம்பி இருப்பவள். மாமியோ தாங்கொணு வார்த்தைகளைக் கொட்டுகிறாள். சுசீலாவோ வாய் மூடிய வண்ணமே பூமியைப் பார்த்தவாறே நிற்பதாயிருக்கிறாள். "ஏண்டி! என்னவோ நிற்கிறையே; கேட்டதற்கு பதில் சொல்லேடி" என்று மாமி ஆர்ப்பரிக்க வணக்கமாய் பதிலுரைக்கின்றாள் சுசீலா. "நான் கூறுகிறேன் பதில் சொல்லுகிறாயா? தைரியமாய்? அடி—பிடாரி எனக்கு பதில் கூ.. சொல்றையே" என ஆர்ப்பரித்து கர்ஜிக்கத் தொடங்குகின்றாள். உண்மையில் மாமி கேட்ட கேள்விக்கு பதில் கூறாது சுசீலா இருப்பின் "நான் கேட்கிறேன். பதில் சொன்னால் உன் வாயிலுள்ள முத்து உதிர்ந்தா போய்விடும்" என்று வார்த்தையை திருப்பி வீசுவாள் மாமி என்பது சுசீலா தெரிந்து தான் பதில் சொன்னதாகும். இச் சம்பவங்களி லகப்பட்ட பெண்ணரசியோ தத்தளிக்கிறாள். இவளது கணவனோ சுயஅறிவற்றுக் கிடக்கும் மானிட கோஷ்டியில் சேர்ந்தவனன்று. ஆதலால் "நான் தப்பிதம் செயதேன். சம்பளம் பிடிக்கப்பட்டது. இதற்கு நேற்று வந்த என் மனைவி என் செய்வாள்? இப்படி அறிவற்று அவளைப்போய்த் திட்டுகின்றானே அறிவற்ற தாயார்" என நினைத்து, தன் அன்னையிடம் இது விஷயங்களைத் தெரிவிக்க அவ்வளவு தாமதம். தன் குமாரனிடம் காட்டத் தொடங்குகின்றாள். "நேற்று வந்த சிறுக்கிக்குப் பரிந்து பேசுகிறாயா? உன்னைவிட நான் பன்மடங்கு பெரியவள் என்பதை அறியாயோ? எனக்குப் புத்திகூற வந்து விட்டாய். போடா, இனி நான் உன்னுடன் இருக்க வில்லை" எனக் கூறி வெளிக்கிளம்ப, தன் தாயின் மதியீனத்தைக் கண்ட குமாரன் ஊராருக்கு பயந்து எவரேனும் சிரிக்க நேரிடுமே என்ற எண்ணத்துடன் சமாதானம் கூறத் தலைப்படுகிறான்

தன் அன்னையிடம். என்னதான் சமாதானம் கூறியும் அன்றிலிருந்து ஒற்றுமை பிரிந்து அக் குடும்பம் நடந்து வரத் தொடங்குகிறது. உண்மையில் எவர் பேரிலும் குற்றமில்லை. அறிவற்ற மாமி செய்யும் ஆர்ப்பாட்டத்தினாலேயே குடும்பநாச கால காரணம் என்பதை அக் குடும்பத்தைச் சார்ந்தவர்கள் நினையார்கள். அயல் பெண்ணாகிய சுசீலாவைத்தான் நிந்தித்து அவளால்தான் கலகம் ஆரம்பம் எனக் கருதுவர். ஏன்? மாமி ஓதிய வார்த்தைகளால்.

## 4. எவர் பக்கம் சேருவது?

நாட்கள் செல்லச் செல்ல குமாரனது மனதிலும் தன் அன்னையைப்பற்றிக் கெட்ட எண்ணம் உதித்துவிடுகிறது. தான் உத்தியோகசாலை சென்று விட்டால் ஆங்கும் "வீட்டில் இரண்டும் மண்டையை உடைத்துக்கொள்ளுமே" என்று கவலைப்படுகிறான். இது சமயம் தன் தந்தையைப்பற்றி நினைக்கிறான். "அவர் என் செய்வார்? பாவம் அவரோ மௌனி. ஆனால் ஏதேனும் சிறு சமாசாரமாய் இருந்த போதிலும் தன் மனதிற்குள்ளேயே அவைகளை வைத்துக் கொள்ளாது மறுவினாடி தமது பத்தினியிடம் கூறி விடும் சுபாவம் கொண்டவர். இதனாலும் கலகம் நேரிடக்கூடிய சந்தர்ப்பங்கள் பல நேரிட்டுள்ளதை இவனும் அறியாதவனன்று. இளமையிலிருந்தே தன் தந்தை தன் அன்னையை அடக்கி வைத்திருந்தால் இவ்வளவு வாய் ஏற்பட்டிருக்கக் காரணமில்லை' எனக் கருதுகிறான். நாட்கள் செல்லச் செல்ல தன் அன்னையுடன் பேசுவதைக்கூட நிறுத்திக் கொள்கிறான். தன் மனைவி இடும் உணவையே அருந்தி உத்தியோக சாலைக்குச் செல்லத் தலைப்படுகின்றான். மாமிக்கோ உள்ளூர, தன் மருமகள் தன் மகனுக்கு உணவு இடுவதுபற்றி தாங்க முடியாத அருவருப்பு. கணவனோ அவரது அன்னை இட்டால் உணவு உட்கொள்ள மறுக்கின்றார். தான் உணவு இடினும் பொறாமை கொள்கின்றான் மாமி. இதற்கு என் செய்ய? எவர் பக்கம் சேருவது? தாயும்—பிள்ளையும் இன்று பேசாதிருப்பர். நாளை பேசி சமரஸமாகி விடுவர். வீட்டிற்குப் புதிதாய் வந்துள்ள நாம் இதில் தலையிட்டுக் கொள்ளாதிருத்தலே நலமெனத் தோற்றினும், கணவருக்கு உணவு பரிமாறத் தான் வேண்டுகிறது. இல்லையேல் பட்டினி கிடப்பது திண்ணம். "இருதலைக் கொள்ளி எறும்புபோல் முழிக்கின்றேனே நான்" என்று சுசீலா நினைத்துக் கண்ணீர் உகிர்க்கின்றாள்.

## 5. முடிவு

பெண்ணை ஈன்ற பெற்றோர் கவனிக்க வேண்டுவது ஒன்று உண்டு. சொத்து சுதந்திரங்களைக் கண்டு பேராசையுடன் தூரதேசங்களில் கொடுப்பதைக் காட்டிலும், பக்கத்து ஊரிலேயே நல்ல (நற்குணமுள்ள) வரன் இருப்பின் பணத்தை கவனியாது குணத்தைக் கருதி பெண்ணைத் தருதல் சிலாக்கியம். பண ஆசையுடன் கொடுக்கப்பட்ட சுசீலா, அடைந்த சுகம் என்ன? என்பதை நம் சகோதரிகளே நிர்ணயித்துக் கொள்ளட்டும்.






# ஔவையார்



(ஸ்ரீமதி. பண்டிதை-அசலாம்பிகை அம்மையார்.)

**பி**ழைபடச் சொல்லேல். இதற்கு வழுக்கள் உண்டாகும் ஒரு சொல்லையும் சொல்லாதே என்பது பொருளாகும்.

இது மிக மிக அருவருப்பைத் தருவது. சொற்கள் தெளிவாக இருக்கும் படி கவனித்துப் பேசவேண்டியதுபோல் அச் சொற்களின் பொருள்களும் மிகத் தெளிவாக (இருவகையான கருத்துக்களைக் கேட்போர் கொள்ளும் வகையில் பேசாமல்) இருக்குமாறு பேசுதல்வேண்டும். இதனால் விளையக்கூடிய துன்பங்களும் அவமானங்களும் பலவாகும். இதுபற்றி நம் நாட்டில் சில உதாரணக்கதைகளும் சொல்லப்படுவதுண்டு. ஒரு தமிழாசிரியர் தன்மேல் அதிபராகிய பள்ளி தலைமையுபாத்தியாயருக்குத் தனக்கு விடுமுறை (லீவு) கோரி எழுதிக் கொடுத்த வேண்டுகோள் நிருபத்தில் "மனைவிக்குச் செய்யவேண்டிய சிரார்த்தத்திற்காக என்று காரணம் குறிப்பிட வேண்டியதற்கு"த் தனது தமிழ்ப் புலமை புலப்பட 'தலைவிதி வசத்திற்காக ஒருதினம் ஓய்வு வேண்டு'மென்று வரைந்து அளித்ததாயும் அத்தலைவர் ஒன்றும் தோன்றாமல் மயங்கி தலைவிதிக்காக லீவெடுத்துக்கொண்டு என் செய்வதெனச் சிந்தித்து இப் புலவரையே வினவி உண்மை விளங்கவே சிரித்துச் சிரித்து பள்ளிக்கூடமே பெரிய ஆரவாரத்தில் பல கணங்கள் அழுந்தியதாகச் சொல்வதுண்டு. இது அற்பப் படிப்பினால் வரும் அநர்த்தம். எழுத்துக்களின் ஒலிக்குறி அறியாத சிலர் கிராமாதிகாரிகளாக இருக்கின்றனர். அதில் ஒருவர் தன்னூரில் ஒரு வீட்டில் பத்து தவலைகள் களவு போனதாகக் கேட்டு அதை மேலே தெரிவிக்க எழுதிய (ரிபோர்டு) அறிவிப்புத்தாளில் 'பத்துத்தலை போய் விட்ட'தாக இடையிலுள்ள வகரத்தை விடுத்து எழுதி விட்டாராம். இதைக்கண்டதும் போலீஸ் அதிகாரிகள் பத்துக்கொலைகள் ஒரே நாளில் நடந்து விட்டதென்று கருதி மேலே ஜில்லா தலைவருக்கும் தந்தி கொடுத்து உருண்டோடி வந்தனர். ஊரில் வந்து பார்த்ததும் நகைப்பை அடக்க முடியாதவர்களாயினர். மணியகாரர் நாணத்தால் தலை கவிழ்ந்தனர். என் செய்வார் பாவம். இதுபற்றியன்றோ 'கற்கை நன்றே கற்கை நன்றே; பிச்சை புகினும் கற்கை நன்றே' என்றெழுந்ததும், பிழைப்புக்காகப் படிப்பது கூடாதென்னும் கொள்கை பண்டைக்காலத்திலேயே இருந்தது. பிச்சை யெடுப்பவனாயினும் அவனுக்கும் கல்வி யறிவு வேண்டுமென்பது அறிஞர் துணிபு. இத்தகைய பிழைபடச் சொல்லுதல் வரைதல் மிகப் படித்தவர்களாகக் கருதவேண்டிய சில உபந்யாஸகர்

களிடமும் வேறொரு வகையில் பரிணமிக்கிற துண்டு. தாங்கள் சொல்லும் விடயங்கள் கேட்பவர்கட்குத் தெளிவுபடாத வகையில் அகராதிகளில் காணப் படும் அரும் பதங்களை அடுக்கி அடுக்கித் திணறிப்போகும்படி செய்தலு முண்டு. இம் முறையும் வெறுக்கத்தக்கதே. என்னை? பிழைபடப் பேசினும் விரைவில் பிறர் உண்மையை உணர்ந்துகொள்ள இயலும். இவர்கள் வேண் டுமென்றே தொகுத்துரைக்கும் அரும் பதங்களும் சிரமப்பட்டுப் பொறுக்கிக் கூறும் மேற்கோள்களும் அவைக்கண் உள்ளோர்களால் உணர முடிவதே யில்லை. ஆகவே இருபுறத்திலும் ஏற்பட்ட நற்பயன் எதுவுமில்லா தொழிகின் றது. இது பிழைபாடுடைய தென்பதற் கையமில்லை. கவி யியற்றுவோர்களி லும் சிலர் பகுக்கத்தகாத பெயர்ச்சொல் முதலியவற்றைப் பகுத்துப் படிக்கும் படி அமைப்பதுமுண்டு. உதாரணமாக 'மன்னுதில,கவுதியம்மை, ஆனைக்காப்பு, ராணமதில் எனப் பிரியும்படி அமைப்பதுண்டு. இவைகளைத் தவிர சிலர் தமக்குப் பயிற்சியில்லாத இதரமொழிகளை தமிழ்மொழிகளுக்கிடையில் வழுப் பட எடுத்தாண்டு கேட்போர்க்குக் கர்ணகடூரமாகப் பேச முற்படுவதும் உண்டு. ஒருவர் ஏதோ பல கீர்த்தனங்களைப் பாராயணம் செய்துவரும் பழக் கத்தினால் தானும் இரண்டொரு போலிச் சரணங்கள் அமைத்துக்கொண்டு ஒரு புலவரிடம் சென்று 'ஜுப்பிரமணியா பேரில் ஜுயம் பாடியிருக்கிறேன்; ஜாத்து கவி கொடுக்கவேண்டும்' எனக் கேட்டனர். சுப்பிரமணியர் பேரில் சுயம் பாடியிருக்கிறேன்; சாற்றுகவி யென்று கேட்டால் அது சாதாரணத் தமிழாக இருக்கும்; தான் ஸமஸ்கிருதமும் கலந்து பேசினால் விசேஷம் என்பது அவர் எண்ணம் போலும். இவ் வறிவீனத்தைப்பற்றி என் சொல்வது? இவ்வாறு கேட்கச் சகியாதபடி பல பதங்களைக் கொட்டிக் குளறுபடை செய் கின்றனர் பலர். ஆங்கிலமொழிகளையும் உச்சரிப் பறியாத நிலைமையில் கூசா மல் பேச முன் வருவோரும் சிலர். பிறமொழிக் கலப்பே கூடாதென்றும் தனித்தமிழே வழக்கில் நிலவவேண்டுமென்றும் சொல்லப்படும் கொள்கை யின் பேரில் மேலே காட்டிய உதாரணங்களைக் குறிப்பிடுவதாக எவரும் கொள்ளுதல் கூடாது. எம்மொழிகளைக் கலந்தாலும் அவ்வம் மொழிகளும் வழுவின்றி உச்சரிக்கப்படல் வேண்டும். சில அறிவாளிகள்கூட "சொற் கள்" என்பதனை "ஸொற்கள்" என்று சாதாரணமாக உச்சரிக்கின்றனர். கற்ற வர்களெனக் கருதப்படும் குழுவினர்களிலேயே இக்குறை இருக்குமானால் சாமானியர்கள் மதுரையை மருதை யென்றும், குதிரையைக் குருதை யென றும், ஸ்கூலை இசுக்கூல் என்றும், டிரஸ்டியை சஷ்டி யென்றும், பழனியைப் பளனி யென்றும் வழக்கில் ஆளுவதற்கு வரம்பு முண்டோ? 'தாலிப்பேச்சை அறுத்துப்பேசு. கூரைப் பேச்சை இழித்துப் பேசு' என்று விவாதம் வரும் போது பேசுவோர்களையும் காண்ப தரிதன்று.

ஒரு கவிராயர் ஒரு சிற்றரசரிடம் சென்று தன் புகழ்க்கவிகளால் அவரை மகிழ்வித்து அவர் பரிசாகக் கொடுத்த குதிரையுடன் மனை திரும்பினார். வீட்டிலுள்ள படிப்பில்லாத அவர் மனைவி கணவன் களிப்புடன் வருவது கண்டு என்ன கிடைத்தது என்று ஆவலுடன் வினவினாள். இவர் அவளுக்குத் தெரியும்படிக் குதிரை என்று சொல்லாமல் தன் புலமை தோன்ற அச்வம் என்றார். அம் மனையாள் சுபம் அசுபம் என்னும் இரண்டையே வழக்கில் கேட்டவளாதலால் ஏதோ இழவு சமாசாரம் கொண்டு வந்திருப்பதாக எண் ணிக் கலங்கினாள். அவளைப் பின்னும் பரிகசிக்க விரும்பிய கணவன், மீட்

டும் கோரம் என்ற மற்றொரு (அசுவத்தின்) பெயரைக் கூறினர். கோர மான விபத்து வந்திருப்பதாக எண்ணிய அம்மங்கை கண்களில் நீர்த்துளி கள் பெருகி யாருக்கு? என்ன?' என வினவலும் குதிரையின் மற்றொரு பெய ராகிய மா என்பதனை இருமுறை அடுக்கி மாமா என்றார். தனது அன்புள்ள அம்மானுக்கு ஆபத்தென்று உணர்ந்த அப்பேதை வாய் திறந்தாற்றி அழத் தொடங்கினள். வெளியார் பலர் இவ் வழுகுரல் கேட்டு வலியவந்து குழு மினர். தமிழ்வாணருக்கு அப்போதுதான் தன் அறியாமை அவமானமாயிற் றென்பது விளங்கிற்று. அதையும் வெளியிட நாணி வாசி என்னும் குதிரை யின் மற்றொரு பெயரைக் கூறினர். மனைவி சமாதானப்பட்டு வெளியாரும அவரவர்கள் வீடு சென்றனர். பிறகு தனிமையில் மனைவியிடம் 'பேதாய்' நான் சொன்ன சொற்கள் எல்லாம் குதிரை ஒன்றிற்கே பெயர்கள்' என்று உண்மை யுரைத்துத் தானும் தன் செயலுக்கு வருந்தினர் என்றொரு கதையுண்டு. இதனை,

> "சுந்தரியே புறமேகி வந்த துணைவரை
> நோக்கிச் சுபம் என்னென்றேன்
> வந்ததோர் அசுவம் என்றார் கோரம்
> என்றார் மயங்கினேன் மாமா என்றார்
> நொந்தழுதேன் பலர் மொய்த்தார் வாசிஎனத்
> தேறினேன் நுவன்ற யாவும்
> அந்தமுறும் குதிரை யெனச் சொலிச்
> சினந்தார் நாணமிகுத் தஞ்சினேனே."

என்ற கவியால் விளக்கி வைத்தனர் அறிஞர். இவ்வாறு குண்டு சட்டியிற் குதிரை யோட்டுதல்போல் இடம் தெரியாமல் சமயம் தெரியாமல் பேசுவதும் பிழைபடப் பேசுவதே யாகும் என்பதில் ஐயம் உண்டோ? சில சிவாலயங் களில உள்ள ஓதுவார் மூர்த்திகள் ஒரு சமயம் "உனதருளால்" என்ற தொடரை மாற்றி "எனதருளால்" என்றே பாடி முடித்தார். இதைப்பற்றி என்ன சொல்வது? கும்பகருணனும் செயற்கருந் தவம் செய்து நான்முகக் கடவுள் காட்சி தந்து கோரிய வரம் கேளென் றருளியபோது, நித்திய தத்து வம் என்று சொல்வதற்குப் பதிலாக நித்திரை தத்துவம் என்று கூறி வாழு நாள் முழுதும் உறக்கத்திலேயே கிடந்து தவப்பயனை இழந்ததாக அறிகி றோம். பிழைபடப் பேசுவதால் வரும் இழுக்கிற்கு ஓர் எல்லையு முண்டோ? பிழை வாராமல் பேசுவது அரிதன்றெனச் சாதாரணமாகச் சிலர் நினைக்கலாம். இது மிக அரிதான திறமை யென்பதைக் குறிப்பிட வேண்டியே பண்டைப் பழமொழியாகப் 'பேசப் போகிறாயோ? சாகப் போகிறாயோ?' என்னும் தொடரும் வழக்கில் நிலவி வருகின்றது. இதன் அருமை தோன்றவே தாயு மானவராய தவக்கடலும் 'நெட்டுயிர்த்துத் தட்டழிந் துளறுவார் வசன நிர் வாகர் என்ற பேரும்' என்று அருளிச் செய்தனர் என்றுணர்தல் அறி வுடைத்து. இதன் பெருமை நோக்கியே பொய்யாமொழிப்புலவரும்,

> "நாகல னென்னும் நலனுடைமை அந்நலம்,
> யாநலத் துள்ளதூஉம் அன்று" எனவும்,

"யாகாவா ராயினும் நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு."

எனவும் வலியுறுத்தி வைத்தனர். ஆதலினால் ஒவ்வொருவரும் தாம் பேசும் மொழிகளில் வழுக்கள் உண்டாகாமல் இருக்கும்படி பேசுவதற்குக் கவனமாக முயலல்வேண்டும். பேசுவதற்கு மட்டில் இந்த ஜாக்கிரதை வேண்டுமென்பதில்லை. எழுதுவதிலும் இதைவிட அதிக கவனம் செலுத்தப்படல் வேண்டும். உண்மையாகவே விளம்பரப் பலகைகளில் சில சமயம் எழுதப்படும் பிழைகளுக்குத் தமிழ்மடந்தை நாணித் தவிக்கிடக்க வேண்டும்.

உதாரணமாக இருப்புப்பாதை வண்டிகளில் "அகாரணமாக இந்தச் சங்கிலியை இழுப்பவர்களுக்கு 50 ரூபாய் அபறுதம் விதிக்கப்படும்" என்று பொறிக்கப்பட்டுள்ளது. இவ்வாறு அபராதம் என்றிருக்க வேண்டியதை தமிழ்மொழிக்குக் குறை வுண்டாகும்படியாக அபறுதம் என்று வல்லின றகரம் வரையப்பட்டிருப்பதைக் கண்டிக்க இதுகாறும் எந்த அங்கத்தினரும் ஆலோசனை கூறியதில்லை. இதுபோலவே பிருமணாள் காபி ஹோட்டல் என்ற விளம்பரப் பலகைகளும் கடைகளை அலங்கரித்து வருவது கண்கூடு. இதுபோல் அராஜகம் என்பதை அருஜகம் என்று எழுதும் கட்டுரைகளும் மிகவே. பல ஆண்டுகளுக்கு முன் சென்னையம்பதியில் விளம்பரப் பலகைகளில் எல்லாம் ஆங்கிலத்திலும் தமிழிலும் வியாபார ஸ்தலத்தின் பெயர்கள் எழுதப்பட்டிருப்பது வழக்கம். அக்காலத்தில் ஆங்கில பாஷை பயிலாதவர்கள் அதிகமாக இருந்தமையால் அவ்வாறு பொறிக்கப்பட்டன. வரவரத் தமிழ்மக்களிலேயே ஆங்கிலத்தில் மட்டும் வரையப்பட்டுள்ள பெயர்களை எவரும் படிக்கக்கூடியவர்களாக இருப்பதும், தாய் மொழியில் உள்ள பெயர்களைப் படிக்க முடியாதவர்கள் சிலர் இருப்பதும் கண்கூடாதலின் தமிழ்ப் பெயர்களை அறவே கைவிடப்பட்டுள்ள இடங்கள் பல. அக்காலத்தில் ஒரு கரும் பலகையில் "பணங்கள் விற்கு மிடம்" எனக் கொட்டை யெழுத்தில் வரையப்பட்டிருந்தது. அவ்வழியே சென்ற உயர்தரக் கல்விகற்கு மாணவர் ஒருவர் கவனம் அதில் சென்றது அவா திகைப்புற்று எல்லாப் பண்டங்களும் பணத்திற்கு விற்கப்படும். பணத்தை எதற்கு விற்ப தென்பது விளங்கவில்லையே எனச் சிந்தித்து அவ்வுண்மையை அறிய விரும்பி உள்ளே நுழைந்தார். அங்கே அவர் பனங்கள் ஜாடி ஜாடியாக அணிபெற வைத்திருப்பதைக் கண்டார். மூன்று சுழிக்கும் இரண்டு சுழிக்கும் ஏற்பட்ட பேதத்தின் பயனோ? இதுவென அதிக அதிசயத்துடன் வெளிவந்தார். இது உண்மையில் நடந்த சம்பவம். இதிலிருந்து பிழைபாட்டினால் விளையும் விபரீதங்கள் எவ்வள வென்பதை வாசகர்களே சிந்தித்துக் கொள்ளலாம். மூதாட்டியார் பிழைபடச் சொல்லேல் என்றது பிழைபட வரையேல் என்றும் குறித்ததாகக் கொள்ளுதல் வேண்டும். இளமையிலேயே சிறுவர் சிறுமிகள் பயிலுங்கால் நன்கு கவனிக்கும்படி ஆசிரியர்கள் பொறுப்புடன் நடந்து கொள்ளுதல் வேண்டும். ஆசிரியர்களிடை குறைபாடுகள் ஏதேனு மிருந்தால் அவை கட்டாயம் பிள்ளைகள் உள்ளத்தில் பிரதிபலிக்கும். பின்னர் அதனை மாற்ற முடியாது. ஆதலின் "பிழைபடச் சொல்லேல்" என மூதாட்டியார் கூறியது ஆசிரியர்களை முதன்மையாக நோக்கிக் கூறியதாகக் கோடலும் தவறாகாது.

இனி, அடுத்த நீதி "பீடு பெற நில்" என்பதாகும். இதற்கு நீ பெருமையைப் பெறும்படியாக நல்ல வழியிலே நிற்பாயாக என்பது கருத்து. எவரும் நல்லவழியில் நடப்பதை விரதமாகக் கொண்டாலொழிய பெருமை உண்டாகாது. அவ்வித பெருமையைப் பெற்றவர்களே உலகில் பெருந் திருவாளர் என்ற சிறப்புக் குரிமையாளராவர். பெருமை யென்பது பிறரால் அளிக்கப்படுவ தொன்றாகக் காணப்படினும் "பெருமையும் சிறுமையும் தான்தர வருமே" என்ற முடிவுப்படி அப் பெருமை வருவது இவனாலேயே என்பது ஊன்றி நோக்கு மிடத்து இனிது விளங்கும். அதாவது இவன் நடந்து கொள்ளும் உயரிய பழுதற்ற நடையிலிருந்தே முகிழ்ப்பதாதலின் என்க. பிரகலாதனுக்கும் துருவனுக்கும் விபீஷணனுக்கும் எய்திய புகழ் கள் எல்லாம் குடும்பத்தில் அதிலும் தந்தை தமையனாதியரை எதிர்த்தும் நல்ல நெறியில் ஈடுபட்டனர். ஒரு இளவயதுள்ள அரசகுமாரியை நிராகரிக் கக்கூடிய மனத்திடம் வீட்டுமனிடம் தோன்றியதென்றால் இது செயற் கரும் செய்கை செய்த நீரமன்றி வேறு யாது? இவ்வாறு உதாரணங்கள் நம்மிந்திய நாட்டுப் பண்டைப் புனிதநூல்களி லெல்லாம் நிரம்பிக் கிடக்கின் றன. பெண்பாலாரிலும் அநசூயை, நளாயினி, சீதை, கண்ணகி முதலிய அநேக மாயிரம் பெண்மணிகள் அழியாப் புகழுடம்பு பெற்றுத் திகழ்கின்ற னர். இன்னார் புகழ் என்றும் நிலைத்து கலங்கரை விளக்கம்போல் நிமிர்ந்து நிற்பதாதலினால் நமது ஔவையார் பீடுபெற இரு, நட என்பவைகளால் இறுதி கட்டாமல் நில் என்றார். இதில் நில் என்றமைத்ததே மிகவும் போற் றத்தக்க தொன்றாகும். நில் என்னும் ஏவலே அப் பெருமையின் மாற்றினை உரைக்கும் உரை கல்லாகும். அங்ஙனம் பீடுபெற முயலாதவர் "மேலிருந்து மேலல்லார் மேலல்லர் கீழிருந்தும், கீழல்லார் கீழல் லவர்" என்றருளினர் தெய்வப்புலவரும். சேரியிற் பிறந்த நந்தனார் சிவத்தோடு இரண்டறக் கலந் தார். மேற்குலத்திற் பிறந்தோர் கடைகோணிச் சிறுமைபுற்றழிந்த கதை கள் நாட்டிற் பலப்பல காணலாம். நீர்வாழ் பிராணியால் பிடிக்கப்பட்ட மதம் கொண்ட யானை ஆதிமூலமே என்றழைத்து மீளாப் பரமபதம் சென் றடைந்தது. கருக்குருவியும் கேள்வியால் ஆலவா யரன்கழல் அடைந்தது. நீரில் துள்ளி விளையாடி வாழும் அற்ப ஜெந்துக்களாகிய மச்சங்களை அறவே தொலைக்கும் குணமே இயல்பாகவுடைய நாரைக்கு மனிதருக்கும் எட்டாத சிவகாருண்யம் உண்டாகி அபார சைவகுருவாகி விட்டது. இவைகளை நோக்கு மிடத்து தவமும் தவமுடையார்க்கே என்ற அருள் வாக்குப்படி பண்டைத்தவமும் பலித்தாலன்றி நல்லாற்றில் நிற்கும் பண்பு அமைதல் அரிதரிது. மனிதன் பகுத்தறிவுடையவனாதலால் மன உறுதி யுடன் நல்லவழியில் நிற்க முயலல் வேண்டும். முயற்சி யிருந்தால் முயற்சியுடையார் இகழ்ச்சியடையார் என்ற கட்டளைப்படியும், முயற்சி திரு வினையாக்கும்" என்ற அருள்வாக்குப்படியும் பயன்பெறாமல் போகமாட்டார் என்பது உண்மை. தூயமனத்தோடு தொழிற்படுதல் ஒன்றே நமது கடமை. பயன்பெறுவது குறிக்கோளன்று. அப்பயன் இம் முயற்சியாளனைத் தேடி வந்தடையும். இதுவே கீதையின் உட்கருத்து. சுவாமி விவேகாநந்தர் கூறுவதுபோல் நெறிவழாமல் உன் கடமையை நீ செய்துகொண்டு போ. நீ விரைவாக முன்னேற முடியாமல் இருக்கலாம். விரைந்துசெல்லும் தீவிர விவேகிகளைக்கண்டு சோராதே. ஜெகன்மாதா 'தான்பெற்ற நொண்டிப்பிள்ளை வந்து சேரும் வரையில் காத்திருந்து எடுத்தணைப்பளேயன்றி மெதுவாய் வர

அதற்காகக் கோபித்துக் கதவைச் சாத்தித் தாளிடமாட்டாள்' என்னும் கருத்தின் நுட்பங்களை நாம் கவனித்தல்வேண்டும் இக்கொள்கைக்குத் தானே அதிகாரியல்லது பிறர் செய்யக்கூடிய உதவி சிறிதுமின்று. இதனை,

"ஒருமை மகளிரே போலப் பெருமையும்
தன்னைத்தான் கொண்டொழுகி னுண்டு"

என்ற குறட்பாவால் அறியலாம்.

கற்புடைமடவார் தங்கள் கற்பைக்காப்பது தங்கள் மனவுறுதிப் பாட்டினாலே என்பது எவ்வண்ணமோ அவ்வண்ணமே பெருமையை விரும்புவோனும் தனது மனவுறுதியினாலேயே நல்ல நெறியில் நடத்தல்கூடும். பிறருக்காக நன்னெறியில் ஈடுபடுவது நீள நிற்கக்கூடியதன்று.

"பீடுபெற நில்" என்ற ஒரு மொழி ஆழ்ந்து சிந்திக்குங்கால் வெளியுலக வாழ்க்கைக்கு மட்டில் கொள்ள வேண்டுமென்பதில்லை. மேனிலையெய்த விழையும் மெய்த்துறவுடையோர்கட்கும் தாம் அடையவிரும்பும் ஆத்மஞானத்தைப் பெற உறுதியுடன் நிற்றல்வேண்டும் என்பதையும் குறிக்கொண்டெழுந்ததென அந்நிலை நிற்போர் உட்கொள்ளுதலும் மிகச் சிறப்புடையதாகும். இப்பழக்கம் இளமையிலிருந்தே கால் கொள்ளவேண்டியது அவசியம். இளமையிலும், யுவாவிலும், முதுமையிலும், அவ்வப் பருவங்கட்கும் அறிவின் விரிவுக்கும் தக்கபடி எண்ணங்கள் மாறுபடுவ தியல்பு. அவ்வக்காலத்திய எண்ணங்களிலும் அவ்வவற்றிற்குரிய கடமைகள் வேறுபாடுடையவைகளாகும். அவைகள் ஒவ்வொன்றிலும் பெருமைபட ஒழுகுவதற்கு இடமுண்டு. ஆகவே மனிதன் நேர்வழியில் நிற்க வேண்டியது அவசியம். மாறுதல் கடமைகளுக்கேயன்றி நேர்மைபட ஒழுகுவதில் இன்றென்பதை எவரும் மதித்து ஒழுகுதல் வேண்டும்.

---

# மருந்துச் செடிகளும் மூலிகைகளும்

(ஆங்கரை-பி. எஸ். சந்தானம்.)

இந்தியா மிகப் பரந்த தேசம். பலவிதமான சீதோஷ்ண நிலைமையுள்ள பிரதேசங்களில் பயிராகும் எந்தச் செடியையும் இந்தியாவிலே பயிரிட முடியும். பிறநாட்டு மருந்துச் சரக்குகள் தோன்றி அமுக்கி விட்டதனால், புராதனமான மூலிகைகள் அலட்சியம் செய்யப்பட்டுப் போயின. அபரிமிதமான மூலிகைகளை உணர்ந்திருப்போர் இந்தியரே. உலகத்தில் வேறு எத்தேசத்தினரும் அவ்வளவு ஏராளமான செடிகளை அறியார்கள். இந்துக்களின் வைத்திய சாஸ்திர கிரந்தங்களில் அபரிமிதமான மூலிகைகளும் செடிகளும் பிரஸ்தாபிக்கப் பட்டிருப்பதுபோல், கிரேக்கர், ரோமர், எகிப்தியர், பாரசீகர், சீனர், அராபியர் இவர்களுடைய வைத்திய சாஸ்திர கிரந்தங்களில் காணப்படவில்லை.

இப்பொழுது ஆங்காங்கே மலை வாசிகளாய் இருப்போரின் மூதாதைகளே பலவிதமான மூலிகைகளின் விபரங்களை உணர்ந்திருந்தனர். அவர்களுக்கு எழுதத் தெரியாததனால் அவ்விபரங்கள் உலகோருக்குப் பயன் படாமல் மறைந்துபோயின. ஆயினும் மூலிகைகளின் விஷயமாய் அம்மலை நாட்டினருக்குள்ள பரிச்சியத்தை நாம அலட்சியம் செய்வதற்கில்லை.

ஏனெனில், அவர்களின் மூலமாகவே அருமையான மூலிகைகள் பல நமக்குப் புலப்படலாயின. காடுகளின் ஊடே சென்றும், மலைகளின் மேல் ஏறியும், இயற்கையில் மூலிகைகள் எத்தன்மையில் இருக்கின்றன வென்று உணர்ந்துகொள்ள வேண்டுமென்று நம்முன்னோர்கள் வைத்தியர்களுக்குக் கட்டளை யிட்டனர். அக்கட்டளையின் விசேஷத்தை நாம் சாமானியமாய் மதிப்பதற்கில்லை.

பல பொருள்களைச் சேர்த்துச் செய்யப்படும் பொருள்களைக் கையாளுவதைக் காட்டிலும், மூலிகைகளையும் செடிகளையுமே கையாளுதல் மிக்க பலன் தருமென சென்ற 1914-ம் வருஷம் நடந்த மகாயுத்தம் நன்கு சுட்டிக் காட்டி யிருக்கிறது. மருந்துச் செடிகளின் விபரத்தை யறியாமல் உலகெங்கும் வைத்தியர்கள் அலட்சியமாய் இருக்கிறார்கள். இந்தியாவிலும் அப்படியே. மருந்துச் செடிகளையும் மூலிகைகளையும் பற்றித் தெரிந்துகொள்வதென்றால், "இதென்னடா கிழவிமுறை" என்று ஏளனமாய்ச் சிலர் சொல்லுகின்றனர். இது சரியல்ல. செடிகளின் தத்துவ சாஸ்திரத்தை ஆராய்ச்சி செய்யாதிருத்தல் நமது துரதிருஷ்டமாகும்.

ஆராய்ச்சி செய்து தீரவேண்டுமென்று பல மேதாவிகள் வற்புறுத்தி

# புராணப் புதையல்கள்

(V. சங்கர ஐயர்.)

(சென்ற மாதத் தொடர்ச்சி.)

## தேவீ மஹாத்மியம்

### ஐந்தாவது அத்தியாயம்.

(1—40)

முன்னொரு காலத்தில் ஸும்பன், நிஸும்பன் என்ற இரண்டு அசுரர்கள் தங்கள் பலத்தால் மதம் பிடித்தவராக தேவேந்திரனிடமிருந்து யக்ஞ பாகங்களையும் மூவுலக ஆட்சியையும் கவர்ந்துகொண்டார்கள். அவர்கள், சூரிய சந்திரர்களுடையவும், குபேரனுடையவும், யமனுடையவும், வருணனுடையவும் வேலைகளையும் தாங்களே செய்ய ஆரம்பித்து விட்டார்கள். வாயுவினுடையவும் அக்னியினுடையவும் வியாபாரங்களையும் அவரே செய்து வந்தார்கள். மற்ற எல்லா தேவர்களுடைய அதிகாரங்களையும் அவர்களே நடத்தினார்கள். இந்தப் பிரகாரம் அசுரர்களால் அதிகாரங்கள் கைப்பற்றப்பட்டு தோற்கடிக்கப்பட்டு, இராஜ்யத்தை விட்டு வெளியேறின தேவர்கள் எல்லோரும் அபராஜிதயான அந்த தேவியை ஸ்மரணம் செய்தார்கள். "ஆபத்துக் காலத்தில் என்னை ஸ்மரித்தால் உடனே நான் உங்களுடைய ஆபத்துக்களை யெல்லாம் தீர்த்து விடுகிறேன் என்று எங்க

---

யிருக்கிறார்கள். மூலிகைகளை வெகு சுலபமாய் அடைந்து விடலாமென்பதையும், மகத்தான வியாதிகளுக்கும் அவை பரிகாரம் உண்டு பண்ணுமென்பதையும் கவனிக்குமளவில், நாம் ஆராய்ச்சி செய்யாமலிருக்க லாகுமோ?

ஆதியிலே பௌத்தமதம் இந்தியாவில் தலையெடுத்த பொழுது, வைத்திய சாஸ்திரப்படிப்பும் தலையெடுத்தது. நமது ஹிந்து வைத்திய கிரந்தங்கள் அநேகம் அரபி பாஷையில் மொழி பெயர்க்கப்பட்டிருக்கின்றன. ஆயுர்வேத வைத்தியர்கள் மகாநாடுகூடி பூர்வீக மருந்துச் செடிகளையும் மூலிகைகளையும் வைத்துக் காட்சி கடத்துகின்றனர். ஆனால் அவைகளைப் பற்றி கிரமமான ஆராய்ச்சி இன்னும் செய்யப்படவில்லை. காச்மீரம், ஒரிஸா, பிஹார், பெலுசிஸ்தானம், ஸிந்து, பாஞ்சாலம், ராஜபுதனம் இவ்விடங்களிலே ஏராளமான மூலிகைகள் அகப்படுகின்றன. அவைகளைக் குறித்து ஆராய்ச்சி செய்து அதன் முடிவை எழுதிவைக்க வேண்டும். இந்திய வைத்திய சாஸ்திரத்தை உயிர்ப்பிக்கும் வண்ணம் ஒவ்வொரு இந்தியரும் முயலவேண்டும்.

ளுக்கு முன் வரம் கொடுத்தாயே" என்று நினைத்து தேவர்கள் ஹிமாலய மலையை அடைந்து அங்கே யிருக்கும் விஷ்ணு மாயையான தேவியை துதிக்க ஆரம்பித்தார்கள்.

(இவர்கள் செய்த ஸ்தோத்திரம் முப்பத்து மூன்று சுலோகங்களைக் கொண்டதாய் "தேவி ஸூக்தம்" என்ற பெயரோடு விளங்குகின்றது. இவைகளைத் தினமும் பாராயணம் செய்தால் 33 கோடி தேவர்களையும் அவர்களுக்கு அதிதரான மும்மூர்த்திகளான பிரம்மா, விஷ்ணு, ருத்திரர்களையும் அவர்களுடைய சக்திகளான ஸரஸ்வதி, லக்ஷ்மி, பார்வதி இவர்களையும், இவர்களுக்கு அதீதமாக இருக்கும் விஷ்ணு மாயையான விராட் புருஷனையும் ஸ்தோத்திரம் செய்த பலன் கிடைக்கும். இந்த ஸ்தோத்திரம் தேவிக்கும், மிகப் பிரியமானவையே. ஆகையால் பக்தர்கள் இவைகளைப் பாராயணம் செய்து தங்கள் கஷ்டங்களையும் அரிஷ்டங்களையும் தீர்த்துக் கொண்டு பகவதியின் அருள் பெறுவார்களாக)

மஹரிஷி சொல்வது:—(41-57)

ஹே ராஜ புத்திரா! இந்தப் பிரகாரம் தேவர்கள் ஸ்தோத்திரம் செய்து கொண்டிருந்த பொழுது பார்வதி கங்கா ஸ்நானம் செய்வதற்காகப் புறப்பட்டாள். அவள் தேவர்களோடு சொன்னதாவது, "நீங்கள் இவ்விடத்தில் யாரைக் குறித்து துதிக்கிறீர்கள்?" அதே சமயத்தில் பார்வதியினுடைய தேஹகோசத்திலிருந்து ஒரு தேவி வெளியே வந்து நின்று பதில் சொன்னதாவது, "ஸும்பன், நிஸும்பன் என்ற இரண்டு அஸுரர்களால் யுத்தத்தில் தோற்கடிக்கப்பட்டு வந்திருக்கும் இந்த தேவர்கள் எல்லாரும் என்னைக் குறித்து ஸ்துதி செய்கின்றனர்." பார்வதியின் தேஹ கோசத்திலிருந்து வெளி வந்தவளான அம்பிகையை எல்லாரும் கௌசிகீ என்று அழைத்து வருகின்றனர். கௌசிகீ வெளியேறினதும் பார்வதியின் தேகம் கருப்பு நிறமாக மாறி விட்டது. ஆகையால் காளி (கருப்பு நிறமுடையவள்) என்ற பெயருடன் ஹிமவான் பர்வதத்துக்குப் போய் வசித்து வந்தாள். பிறகு அதி மனோஹரமான ஒரு ரூபத்தோடு கூட இருக்கின்ற கௌசிகீ என்ற அம்பிகையை ஸும்ப நிஸும்பர்களுடைய தூதர்களான சண்டன், முண்டன் என்ற இருவர்கள் பார்த்தார்கள். அவர்கள் உடனே ஸும்பனிடம் சென்று "மஹாராஜாவே! அதி மனோஹர தேக காந்தியோடு கூடி ஒரு ஸ்திரீ ஹிமாலய பர்வதத்தை ஜ்வலிக்கும்படிச் செய்து கொண்டிருக்கிறாள். அவ்வளவு அதி ஸௌந்தரிய முள்ள ஒரு உருவம் ஒருவரும் ஓரிடத்திலும் பார்த்திருக்க மாட்டார்கள். அஸுரேச்வரா! அந்த அம்பிகையை யார் என்று விசாரித்து தாங்கள் சம்பாதிக்கவேண்டும். அந்த ஸ்திரீ ரத்னம் தன் தேஜஸ்வினால் அஷ்டதிக்குகளையும் பிரகாசித்துக் கொண்டிருக்கிறாள். ஹே தைத்யேந்திரா; தாங்கள் அந்த ஸுந்தரியைப் பார்க்கவேண்டும். ஹே ஸ்வாமி! இந்த மூன்று உலகங்களிலுமுள்ள கஜ, அச்வம் முதலான சகல ரத்னங்களும், மணிகளும், எல்லாம் இபபொழுது தங்களுடைய அரண்மனையி லிருக்கின்றன. ஐராவதம் என்ற கஜரத்னத்தையும், உச்சைச்சிரவஸ் என்ற அச்வ ரத்னத்தையும் தாங்கள் தேவேந்திரனிடமிருந்து கொண்டு வந்தீர்கள். பிரம்மாவினிட மிருந்து கொண்டு வரப்பட்ட அதி அற்புதமான ஹம்ஸ விமானம் இதோ இருக்கிறது; முற்றத்தி லிருக்கின்றது. குபேரனிட

யிருந்து கொண்டு வரப்பட்ட மஹா பத்மம் என்ற நிதி இதோ இருக்கின்றது. சமுத்திரம் தண்டோடு கூடின வாடாத் தாமரை மாலையை தங்களுக்குக் கொடுத்தது. வருணனுடைய பொன் பிடியோடு கூடின வெண்குடை தங்கள் அரண்மனையிலிருக்கின்றது. பிரஜாபதியுடைய ரதம் தங்களிட மிருக்கின்றது. பிரபோ! யமனுடைய மரணத்தை உண்டாக்குகின்ற உத்கிராந்தி என்ற சக்தி (வேல்) தங்களிட மிருக்கின்றது. வருணனுடைய பாசக்கயிறும், சமுத்திரத்திலிருந்த பூரா ரத்தினங்களும் தங்கள் சகோதரனை நிசும்பனிடமிருக்கிறது. அக்னி சௌசங்கள் என்ற வஸ்திரங்களை அக்னி பகவான் தங்களுக்குக் கொடுத்திருக்கிறார். ஹே தைத்யேந்திரா! இப்படி எல்லாவித ரத்னங்களும் தங்கள் ஆதீனத்திலிருக்கின்றன. ஆகையால் ஸ்திரீரத்னமான இந்த ஸுந்தரியையும் தாங்கள் வசப்படுத்தாம லிருப்பது ஏன்?" என்று வணக்கத்தோடு கூட கூறினார்கள்.

மஹரிஷி சொல்வது:—(58)

இப்படி சண்ட முண்டர்கள் சொன்னதைக் கேட்ட அந்த ஸும்ப மஹாசுரன், ஸுக்ரீவன் என்ற தூதனை, தேவியிடம் அனுப்பினான்.

ஸும்பன் சொல்வது:—(59-60)

'நீ போய், நான் சொன்னதாக இந்தப் பிரகாரம் அவளிடம் சொல்ல வேண்டியது. அவள் சந்தோஷித்து இவ்விடத்துக்கு வரும் விதமாக கூடிய சீக்கிரம் நீ செய்ய வேண்டும்'. அவன் அதி சோபனமான அந்தப் பர்வதப் பிரதேசத்திற்குப் போய், அந்த தேவியோடு இனிமையான வாக்குகளால் சொன்னான்.

தூதன் சொல்வது:—(61-69)

'தேவி! மூன்று லோகங்களுக்கும் ஈசுவரனான ஸும்பாஸுரேந்திரன் என்னைத் தங்களிடம் தூதனாக அனுப்பி யிருக்கிறான் எந்த தேவர்களிடத்திலும் எவனுடைய ஆக்ஞைக்கு தடை கிடையாதோ, எல்லா அஸுரர்களையும் எவன் தன் வசத்தி லிருக்கும்படி ஆக்ஞாபித்திருக்கிறானோ, அந்த ஸும்பாசுரன் சொல்வதைக் கேள். "மூவுலகமும் என்னுடையதே. தேவர்களும் என் வசத்திலுள்ளவர்களே எல்லா யக்ஞபாகங்களையும் நானே தனித்தனியாக அனுபவித்து வருகின்றேன். மூவுலகங்களி லிருக்கும் முக்கியமான எல்லா ரத்தினங்களையும் நானே வைத்திருக்கின்றேன். தேவேந்திரனுடைய வாஹனமாயிருந்த கஜரத்னத்தை நான் கொண்டு வந்து விட்டேன். பால் கடலிலிருந்து வெளிவந்த உச்சைச்ரவஸ் என்ற அசுவரத்தினத்தை தேவர்கள் எனக்காக பிரமாணம் செய்துகொடுத்தார்கள். ஹே ஸுந்தரீ! தேவர்கள், கந்தர்வர்கள், நாகர்கள் என்ற சாதியாருடைய வசத்திலிருந்த ரத்னங்களான மற்ற எல்லா வஸ்துக்களும் என் வசத்தில்தான் இருக்கின்றன. ஹே தேவி! நீ இவ் வுலகத்திலுள்ள ஸ்திரீரத்னம் என்று நான் நினைக்கிறேன். ஆகையால் நீ என் பக்கத்திற்கு வந்து விடு. நான் தானே எல்லா ரத்னங்களையும் அனுபவித்து வருகின்றேன். ஹே ஸுந்தராங்கி! நீ ஒரு ரத்னமாகவே யிருக்கின்றாய். ஆகையால் நீ என்னையாவது என் தம்பி மஹாபராக்ரம முள்ள நிசும்பனையாவது வந்து சேர்வாயாக!

என்னைச் சேர்ந்தால் நிஸ்துல்யமான பரம ஐசுவரியத்தை அடைய முடியும். நீ உன் புத்தியால் நன்றாக ஆலோசித்து என்னையே வரித்துக்கொள்ளவும்.

மஹரிஷி சொல்வது:—(70-74)

இதைக்கேட்ட அந்த கம்பீரையான தேவி, இவ் வுலகத்தைக் காக்கின்ற பத்திரையான துர்க்கா பகவதி தன்னுள்ளிலேயே மந்தஹாசம் செய்து கொண்டு சொன்னதாவது, "தாங்கள் சொன்னவைகளெல்லாம் சரியே! ஒன்று கூட பொய் கிடையாது. மூன்று லோகங்களுக்கும் நாயகன் ஸும்பாஸுரனே. அவ்வாறே தான் நிஸும்பனும். ஆனால் இது விஷயமாக ஒரு பிரதிக்ஞை செய்து விட்டேனே. அதை எப்படிக் கைவிடுவது? நான் புத்திஹீனத்தால் முன்னாடியே செய்து விட்ட பிரதிக்ஞை இதுவே. கேட்பாயாக. எவன் என்னை யுத்தத்தில் ஜயிப்பானோ, எவன் என்னுடைய கர்வத்தை அடக்குவானோ, எவன் இவ்வுலகில் என் சத்துருவாக இருந்து யுத்தம் செய்வானோ அவனே என் பர்த்தா. அதனால் அஸுரேந்திரனை ஸும்பனோ, நிஸும்பனோ இவ்விடத்துக்கு வரவேண்டும். என் தாமதம்? வேகத்தில் என்னை ஜயித்து என் பாணியை கிரகித்துக் கொள்ள ஆக்ஷேபணையில்லை".

தூதன் சொல்வது:—(75-78)

"அம்மா, நீ ஒரு கர்வம் உள்ளவளே. எங்களிடம் இப்படிக் கூறாதே. இந்த மூவுலகிலும் எந்த புமான் ஸும்ப நிஸும்பர்களை எதிர்க்க வல்லவன்? ஹே தேவீ! மற்ற தைத்தியர்களோ தேவர்களோ யுத்தத்தில் அவர்களை எதிர்த்து நிற்க முடியாதே. அப்படியிருக்க ஒரு ஸ்திரீயான நீ தனிமையில் எப்படி அவர்களை எதிர்க்க முடியும்? ஆகையால் அம்மா! நீ நான் சொல்லிய பிரகாரம் ஸும்ப, நிஸும்பர்களுடைய சமீபம் செல்லவும். சிரோருஹத்தைப் பிடித்து இழுத்துக் கொண்டு போகிறதால் உண்டாகக் கூடிய அவமானத்திற்கு ஆளாகாதே."

ஸ்ரீ தேவீ சொல்வது:—(79-80)

'சரிதான், ஸும்பனும் நிஸும்பனும் மஹா வீரிய பலவான்கள் தான். ஆனால் நான் என்ன செய்வது? முன் ஆலோசனையின்றி ஒரு பிரதிக்ஞை செய்து விட்டேனே. ஆகையால் நீ போய் நான் சொன்ன இந்த விஷயங்களையெல்லாம் விவரமாக அஸுர அரசனிடம் சொல்லவும். அவர் உசிதம் போல செய்து கொள்ளட்டும்'—இது ஸ்ரீமார்க்கண்டேய புராணத்தில் தேவீ மஹாத்மியத்தில் (5) தேவீ தூத சம்வாதம் என்ற எண்பத்திரண்டாம் அத்தியாயம்.



# பொருள் நூல்

ஸ்ரீகண்ட இராமன், எம். ஏ., எல். டி.,



(202-வது பக்கத் தொடர்ச்சி.)

## ஆடம் ஸ்மித் (Adam Smith)

ஆடம் ஸ்மித் ஸ்காத்லாந்தில் பிறந்தவர். பொருளாதாரத் துறையில் அரிய நோக்கங்களைக் கொண்டிருந்தார். அவர் பிஸியோகிரட்ஸ் கூட்டத்தார் சரியாக எடுத்துரையாமல் விட்டுவிட்ட கருத்துக்களை நன்கு உரைத்தார். அவர் வியாபாரக் கொள்கை (Mercantilism) யைப் பின்பற்றிய மக்களைக் கண்டித்துப் பேசி, சுயாதீன வியாபாரம் (Free Trade) என்னும் கொள்கையை நன்கு விளக்கினார். அவருடைய சீர்மிக்க விளக்கம் ஐரோப்பிய பொருளாதார சரித்திரத்தில் ஒரு முக்கியமான விஷயமாக ஆகிவிட்டது. சர்க்கார் வியாபாரம், தொழில்கள் முதலியவற்றில் ஏதும் தங்கு தடைசெய்யாமல் இருந்தால் (சட்டங்கள் அவற்றின் முன்னேற்றத்திற்கு ஏற்றவாறு இருக்கலாம்), அந்நாட்டின் பொருளாதாரநிலை மேம்பாடுற்று, செல்வம் நடமாடும் நாடாகும் என்பது ஆடம் ஸ்மித்தின் கருதது. பிஸியோகிரட்ஸ் கூட்டத்தார் விவசாயத்தினால் ஒருநாடு பொருளாதார விஷயத்தினால் மட்டும் முன்னேற்றமடையும் என்று கொண்ட கொள்கை சரியல்லவென்று சொல்லி, தொழில்களினால் செல்வம் செழித்தோங்கும் எனும் தத்துவத்தின் உண்மையை உபதேசித்தார். இருந்தாலும் ஆடம் ஸ்மித் விவசாயத்திலும் பட்சமனதுடையவராகத்தான் இருந்தார். விவசாயத்தில் மனிதனுக்கு உதவி செய்ய இயற்கை (Nature) அநுசரணையாக நிற்கிறது என்று சொன்னார். ஆடம்ஸ்மித் எழுதிய "தேசங்களின் செல்வம்' (The Wealth of Nations) எனும் நூல் நானது வரையில் யாவராலும் மதிப்போடும் மரியாதையோடும் பேசப்படுகிறது.

## ரிகார்டியன் கூட்டத்தார்

இந்தக் கூட்டத்தினரை ஆங்கில பொருளாதாரக் கூட்டம் என்றும் சொல்லுவார்கள். ரிகார்டோ, ஜேம்ஸ் மில், ஜே. ஈ. கேர்னஸ் (J. E. Cairnes), மேக்குல்லா (Mc Culloch) என்பவர்கள் நட்சத்திரங்கள்போல் விளங்கினார்கள். இவர்கள் எல்லாரும் கொள்கையில் மிக்க நம்பிக்கை கொண்டிருந்தனர். அநுபவ உண்மையைப்பற்றி அக்கரை கொள்ளவில்லை. பொருள் நூலை இவர்கள் ஒரு சாஸ்திரம் எனக் கொண்டனர். கூலி வேலை செய்து பிழைக்கும் கூட்டத்தார் (Working classes) களுடைய வருங்கால வாழ்க்கையில் இவர்கள் சந்தோஷமான கருத்து கொண்டிருக்கவில்லை. ரிகார்டோ என்பவருடைய கொள்கைகள் வருமாறு: ரிகார்டியன் வாடகைக் கொள்கை

(The Ricardian Theory of Rent). பணத்தை இன்டர் நேஷனல் முறைப் படி பங்கிடுங் கொள்கை (The Theory known as International Distribution of Money); விலையைப் பற்றிய கொள்கை (The Theory of value based on labour) உழைப்பை யநுசரித்து நிற்கிறது. மற்றும், பங்கிடுதல் (Distribution) மாற்றுதல் (Exchange) கொள்கைகளுக்கும் இவர் பேரா காரண கர்த்தராவர்.

## அபேதவாதப் பொருளாதாரக் கொள்கை
## (The Socialist School)

தனிப்பட்ட முறையில் சொத்து வைத்துக் கொள்ளுதல், கழுத்தை யறுக்கும் விதத்தில் வியாபாரப்போட்டி, சுயாதீன முறையில் பொருளாதார விஷயங்களை நடத்துதல் ஆகிய பெரிய கருத்துகளுக்கு முரணாக அபேத வாதக் கொள்கை நிற்கிறது. ஐரோப்பா, அமெரிகா, ஜப்பான், இந்தியா (இந்தியாவில் பண்டிதர் ஜவஹர்லால் நேரு அவர்கள் அபேதவாதக் கொள்கை யைப்பற்றிப் பிரசங்கம் செய்வதும், அதனால் ஜனங்களுடைய மனதில் ஒரு கிளர்ச்சி ஏற்பட்டுவருவதும் தற்கால விஷயமாகும் என்பதை மட்டிலும் சொல்லிக்கொள்ள விரும்புகிறோம்) முதலான நாடுகளில் பல்லாயிரக் கணக் கில் உழைப்பினால் ஜீவிப்பவர்கள் (Labouring Classes) அபேதவாதம் எனும் பொருளாதாரக் கருத்தை ஆதரிக்கிறார்கள். மேலும் கல்விமான் களும், ஆசிரியர்களும், சாஸ்திரங்களில் பிரக்கியாதி பெற்றவர்களும் இந்தக் கொள்கையில் பற்று வைத்திருக்கின்றார்கள்.

ஒரு நாட்டின் செல்வம் சரிசமானமாக ஜனங்களுக்குப் பகிர்ந்து கொடுக் கப்படவேண்டும் என்பது அபேதவாதத்தின் ஜீவநாடியாகும். சமூகம் நன் றாக திருத்தி யமைக்கப்பட வேண்டும் என்று அபேதவாதிகள் காரணங்களு டன் சொல்லுகின்றார்கள். மேலும் தனவந்தர்கள் எனப்படுபவர்களிடம் அதிக செல்வம் போய்ச் சேர்ந்துவிடுகிறது. ஏனைய மன்பதைகள் ஏழைக ளாகி வருந்தி கஷ்டங்களில் சிக்க நேரிடுகிறது. உண்மையான நிலைமை சரியாக ஏற்படுவதில்லை. ஜன சமூகத்தில் இந்த ஏற்பாட்டை அநியாயம் என்றே அபேதவாதிகள் கருதுகின்றனர். இந்த ஏற்பாடு நிலைத்து நீடித் திருக்க தனிப்பட்ட முறையில் உள்ள சொத்து (Private Property) சுயா தீன வியாபாரப்போட்டி ஆகியவை அநுசரணையாக இருக்கின்றன. இந்த ஏற்பாட்டினால் ஒரு சிலர் எப்பொழுதும் செல்வந்தர்களாகவே வளர்ந்து கொண்டிருக்கின்றனர். ஆனால் ஏழைகள் ஏழைகளாகவே போய் விடுகின் றார்கள். அதனால் பல சமூகத்தீமைகளும் சந்தோஷமற்ற காரியங்களும் ஏற் படுகின்றன.

அபேதவாதக் கொள்கையில் பல பிரிவுகள் உண்டு. அவற்றுள் ஈண்டு முக்கியமானவற்றை மட்டும் குறிப்பிடுவோம் :—

## புரட்சி அபேதவாதக்காரர்கள்
## (Revolutionary Socialists)

இவர்கள் இப்பொழுது உலகில் உள்ள ஜன சமூகத்திற்கு நன்மை புரிய கொடிய புரட்சியை ஆதரிக்கின்றார்கள்.

## பொதுவுடைமைக்காரர்கள் (Communists)

தனிப்பட்ட ஹோதாவில் ஜனங்களுடைய சொத்துக்களை அழித்து, எல்லோரும் ஒரு தேசத்தின் சொத்துக்களுக்கும் ஏனைய உரிமைகளுக்கும் சம்பாத்தியதை கொண்டவர்களாக இருக்கவேண்டும் என்று சொல்லுகிறார்கள்.

## அரசாங்க அபேதவாதக்காரர்கள் (State Socialists)

அரசாங்க அபேதவாதம் புரட்சியை ஆதரிக்கவில்லை. ஒரு நாட்டின் சர்க்கார் சில பொறுப்புக்களை ஏற்றுக்கொண்டு, ஜனங்களுடைய நன்மைக்குப் பாடு படவேண்டும் என்பது அரசாங்க அபேதவாதிகளுடைய கருத்து. கூலி வேலைசெய்து பிழைக்கும் ஜனங்களுடைய க்ஷேமத்தைச் சர்க்கார் கண்ணை போல் பாதுகாத்து, நலம்பெற உழைத்தல் வேண்டும். அதாவது: கூலிவேலையாட்களுக்கு கிழவயது உபகாரச்சம்பளம் (Old Age Pensions for Labourers) கொடுக்கவேண்டும்; வேலையாட்களுக்கு இன்ஷுரன்ஸ் திட்டம், மற்றும் பல நன்மைதரும் விஷயங்களில் சர்க்கார் சிரத்தை யெடுத்துக்கொள்ள வேண்டும். ஜெர்மனியில் இந்தக் கொள்கையை யாதரிக்க பலர் இருக்கின்றனர்.

இந்த சிறிய நூலில் நாம் எல்லா விஷயங்களையும் சொல்லுவது என்பது கூடாத காரியமாகும். ஆதலின் நாம் இப்பொழுது பொருளாதாரக் கொள்கையின் நிலைமையென்ன என்பதைக் கூறி இந்த அத்தியாயத்தை முடிப்போம்.

தற்பொழுது பொருளாதாரக் கொள்கையில் உண்மை சரியான முறையில் ஒரு தேசத்து மக்களுடைய முன்னேற்றத்திற்கு உபயோகமாய் இருக்குமென்பது தெரிந்தால் அத்தேசத்து சர்க்கார் அதைக் கையாளுவதாக நாம் அறிகிறோம். பொருளாதார சாஸ்திரமும் அரசாங்க விஷயங்களும் நீரும் பாலும்போல் சேர்ந்தே இருக்கின்றன. ஒன்றைப் பிரிந்து மற்றொன்றை ஆராய்ச்சி செய்வது என்பது முடியாதகாரியம். ஆதலின் தற்காலத்தில் பொருளாதாரக் கொள்கைகள் பயன்படக்கூடிய வழியில் உபயோகப் படுகின்றன என்று சொல்லுதல் மிகையாகாது.

(தொடரும்.)



# நகர மக்களின் படாடோபம்

(K. V. சிவசுப்பிரமணியன், B. A.)

எனது கட்டுரையில் குறிக்கப்படும் நகரம் சென்னையே. ஏனென்றால் நானறிந்தவரையில் இதற்குமேல் பெரிய நகரம் பார்த்தது கிடையாது. பல தீததொழிலுக்கும் பேதமைச் செயலுக்கும் மதிகேடான போலி நாகரீகத்திற்கும் அடிமைப்பட்டுக் கிடக்கும் இந்நகரத்திலுள்ள மக்களிற் பெரும்பாலோரை இப்போது போலிப்பெருமை, கர்வம் என்னும் பேய்கள் பிடித்தாட்டுகின்றன. 'காண்போரைக் கண்டு கழுதை பரதேசம் போனதுபோல்' என்று தமிழில் ஒரு பழமொழி யுண்டு. அதைப்போல, ஆயிரம் ரூபாய் ஆஸ்தியுடைய ஒருவன் கோடி ரூபாய் ஆஸ்தியுடையவனைப் போல் வெளியில் நடக்க விரும்புகிறான். பிக்ஷாபாத்திர மெடுத்து சாப்பிடுபவன் லக்ஷாதிபதியைப் போலிருக்க விரும்புகிறான். கணக்கப்பிள்ளை வேலை பார்க்கு மொருவன் தனக்கு மேலிருக்கும் ரெவென்யூ இன்ஸ்பெக்டரைப் போல் நடக்க விரும்புகிறான். ஏழைப் பெண்களும் பணக்காரர்கள் போடும் உயர்ந்த தினுசு நகைகளையெல்லாம் போட்டுக்கொள்ள ஆசைப்படுகின்றனர். தினசரி வாழ்க்கையில், விளக்கைப் பழமென நினைத்து விழுந்து மடியும் விட்டில் பூச்சியைப்போல் கிண்டி குதிரைப் பந்தயத்திற்குச் செல்வோர் பலர்; சூதாட்டச்சாலைகளுக்கு (Gambling Houses)ச் செல்பவர் சிலர்; தேவடியாள் வீட்டிற்குச் செல்வோர் பலர்; குடித்துக் கூத்தாடி சினிமாக் கொட்டகையில் ஷோக்காக காலங்கழிப்பவர் சிலர்.

கொலை, களவு, கள், காமம், சூது எனும் தீத்தொழில்களுக்கு உறைவிடமாய் விளங்கும் நகரத்தின் பெருமைதா னென்னே! உதாரணமாக காய் கறி விற்குமொருவன் ட்வீட் கோட்டு, பட்டு அங்கவஸ்திரம், ஸ்லிப்பர் முதலிய டாம்பீக உடையணிந்து மாலையில் உல்லாசமாக வெளியில் சென்று இரண்டு மூன்று ரூபாய்களை மதுபானம், சினிமா, டிராமா முதலிய டாம்பீக வழிகளில் செலவழித்துவிட்டு இரவு வெறுங் கையனாய் வீட்டுக்கு வந்து சேருவான். சிறு வியாபாரியாகிய இவனுக்கு அன்றாடம் ரூபாய்க்குக் குறையாமல் செலவழிக்க எங்கிருந்து கிடைக்கிறது? ஏன் மார்வாடிக் கடைகளும் வட்டிக் கடைகளும் பதார்த்தக் கடைகளும் மைனர் போன்றவர்களுக்கே சொந்தமாய் இருக்கும்போது அவர்களுக்கு பணத்துக்கென்ன குறை? இந்த மார்வாடிகள் 'ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும் வாடியிருக்கும் கொக்கு'போ லிருந்து சமயம் வாய்த்தபோது தூண்டி வீசிப் பிடித்து, பத்து ரூபாய் கடன் கேட்டால், "இப்போது என்ன கெட்டுப்போச்சு; 20 ரூபாயாதான் வச்சுக்குங்களேன" என்று சொல்லி வேண்டாதவன் தலையில் கட்டி பின்பு ஒன்றுக்குப் பத்தாக வாங்கும் பெருந்தன்மையுடையவர்கள். அவர்களுக்கு மேற்கூறிய மைனர் போன்ற பேர்வழிகளிடத்தில் அத்தியந்த விஸ்வாசமுண்டு. ஏனென்றால் சமயத்தில் அவர்களது பெண்டாட்டி கழுத்தி லிருக்கும் நகைக ளெல்லாம்

தமது கடைக்கு வந்தாலும் வருமல்லவா? நிற்க, அந்த மைனரின் மனைவியின் கதியை நினைத்தாலோ வெட்கக்கேடு. மைனர் ஷோக்காக ட்ரெஸ் செய்து கொண்டு வெளியே போவார்; மனைவி ஆப்பம் விற்று ஆறணா லாபம் சம்பாதித்து அரிசிவாங்கி சமைத்து வைப்பாள். வீட்டுக்காரர் வீடுவந்து வேளைக்கு சாப்பிடுவார். அதுமட்டுமல்ல, இரண்டோரணா மீத்து பீடி சிகரெட் செலவுக்கும் கொடுப்பாள். ஆகா என்ன வாழ்க்கை! இதைக்கண்டு தான் காலஞ்சென்ற பாரதியாரும்,

"நெஞ்சு பொறுக்குதிலையே—இந்த
நிலைகெட்ட மனிதரை நினைந்துவிட்டால்" (நெஞ்சு)

என்று பாடினார் போலும்!

இவை யாவும் என் மனதில் ஒன்றின்பின் ஒன்றாகத் தோன்ற அடிப்படையான காரண மொன்றுண்டு. ஒருநாள் நானும் எனது நண்பன் "குண்டு" வும் கிண்டிக்குப் போனோம். எனக்கு அங்குபோக இஷ்டமில்லாதபோதிலும் சிநேகிதனுடைய கட்டாயத்தினால் போனேன். போனது ஒரு ரூபாய் கட்டி ஆயிரம் ரூபாய் வாங்குவதற்கல்ல; சும்மா வேடிக்கை பார்க்கப் போனேன். எங்கள் சொஸைட்டியில் மாஸ்டர் குண்டுவை "ரேஸ் பைத்தியம்" என்று தமாஷாக கூப்பிடுவது வழக்கம். ரேஸ் கிரௌண்டில் ஜனங்கள் தேனீக்களைப்போல் கூடியிருப்பதைக் கண்டோம். எத்தகைய அந்தஸ்துள்ள ஜனங்களெல்லாம் அங்கு வந்திருக்கிறார்களென கவனித்தோம். நியாயமாக வாங்கின கடனைத் தீர்க்க இஷ்டமில்லாமல், திருடர்களுக்கும் சூதாட்டக்காரர்களுக்கும் குதிரைப்பந்தயத்திற்கும் ஒரு நிமிஷத்தில் கொடுப்பதற்காக சில கரன்ஸி நோட்டுகளை கோட் பாக்கெட்டில் போட்டுக்கொண்டு, தன்னையும் பிறர் பணக்காரனென்று மதிக்க வேண்டுமென்ற எண்ணத்தால் படாடோப உடையணிந்து வந்திருந்தவர் பலர். சிறிது நேரம் கழித்து திடீரென்று ஒரு மகானுபாவர் நாங்கள் நின்றிருந்த இடத்தின் ஓரமாக வந்து மோட்டாரை விட்டிறங்கினார். இறங்கியவுடன், வந்திருப்பவர்களைப்போல் நாமும் மதிக்கத்தக்க உடையணிந்து கொண்டிருக்கிறோமா என்று தன்னை ஒருதரம் பார்த்துக்கொண்டார். காரிலிருந் திறங்கியவர் அந்தப்பக்கம் திரும்பி யிருந்ததால் அவர் முகத்தைப் பார்க்கப் போனேன். என்ன ஆச்சரியம்! உடனே அவர் பழம்புஸ்தகங்களை விற்கும் ஒரு புஸ்தகவியாபாரி என்றறிந்தேன். என் மனதில் புதிய புதிய எண்ணங்களும் வெறுப்பும் தோன்றின. உடனே என் நண்பனை வீடு திரும்பும்படிக் கையைப் பிடித்திழுத்தேன். வீட்டுக்குத் திரும்புகையில் என் சிநேகிதனிடம் காரில் வந்திறங்கிய கண்ணப்ப செட்டியாரின் நிலைமையையும் அறியாமையையும் கூறி இனி அவனிடத்தில் ஒரு அணுவுக்குக்கூட சாமான் வாங்குவதில்லை என்று தீர்மானித்தேன்.

பத்திரிகாசிரியருக்கு ஒரு வார்த்தை. உங்களுடைய பத்திரிகையில் இச்சிறு கட்டுரையை அங்கீகரித்து வெளியிடுவீர்களானால் மிஸ்டர் கண்ணப்ப செட்டியாரைப்போன்ற அரைகுறை கனவான்கள் அற்ப வருமான மூள்ளவர்களுக்கு குதிரைப்பந்தயம் தகுதியானதா இல்லையா என்பதை யோசித்து பயனடைதல்கூடும். மற்றும் தன் பிழைப்பிற்குரிய காரியத்தைக் கவனியாது, ஒவ்வொரு இரவும் தாசிவீட்டிற்கு (நற்குண மமைந்த மனைவி வீட்டிலிருந்தும்) சென்று அவளோடு சுகமாகக் காலங்கழிப்பவன் இவ்வுலகில் ஒருநாளும் முன்னேற்றமடைய மாட்டான். சீக்கிரத்தில் தான் செய்த

# ஆபுத்திரன் வரலாறு

(பெ. ராமாநுஜம்.)

## 4. ஆபுத்திரனும் வேள்வியும்

வயனங்கோடு எனும் சிற்றூரிலே, இளம்பூதி யந்தணர் இல்லத்தில் "ஆபுத்திரன்" என்ற அருமைத் திருப்பெயரையுடைய அச் செல்வ மகன் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வருகின்றான். "விளையும் பயிர் முளையிலேயே தெரியும்" என்னும் முது மொழிக்கு ஏற்ப சிறு பருவத்திலேயே கூரிய அறிவும், பெரியோர்களிடத்தில் பணிவும், அறச்செயலில் விருப்பமும் உடையவனாக இருந்தான். அவனுக்கு வயது பதினாறு நிறைந்தபொழுது வேதம் முதலிய நூல்களிலும், புராண இதிகாசங்களிலும், நீதி சாத்திரங்களிலும் வல்லவனாக விளங்கினான். 'மகன் தந்தைக் காற்றுமுதவி-இவன் தந்தை, என்னோற்றான் கொல்லென்னுஞ் சொல்' என்னும் பொய்யாமொழியின் பொருட்கு இலக்காக விளங்கியவன் அவ்வூரில் அவன் ஒருவனே. எப்பொழுதும் புன்சிரிப்போடுகூடிய முகமுடையவனாய், அனைவரிடத்தும் பணிவும் அன்பும் இன்சொல்லும் உடையவனாய், பிறர் துன்பம் கண்டு இரங்குபவனா யிருந்தமையால் இவன் பெயர் எங்கும் எளிதில் பரவிற்று. விலங்குகளிடத்தும் பறவைகளிடத்தும் கூட இரங்கிய நெஞ்சொடு, அவற்றிற்கு நேரும் இன்ப துன்பங்களில் கலந்து கொள்ள முயல்வான். அதனால் யாவரும் இவனிடத்துப் பேரன்பு காட்டிப் பாராட்டி வந்தனர்.

ஒருநாள் அவ்வூரில் ஒரு மறையவர் வீட்டில் வேள்வி ஒன்று நடந்தது. இவன் பார்ப்பன மரபிற் பிறந்து, பார்ப்பனர் இல்லில் வளர்ந்தவனாயினும் இதுவரை வேள்வி நடத்தியதைக் கண்டவனல்லன். பகுத்தறிவு பெறாத

---

குற்றத்தைத் தானே யணர்வான்; கையிலுள்ள பணம் பஞ்சுபோல் பறந்து போய்விடும்; நண்பர்கள் கைநழுவ விடுவார்கள். தன் கடையில் வியாபாரம் குறையும்; கடன்காரர் வந்து கண்டபடி பேசுவர்; கடைசியில் ஜெயிலுக்குப் போகவும் நேரிடும். நான் நகரத்திலுள்ள வியாபாரிகளுக்குச் சொல்லும் வார்த்தை யொன்றுண்டு. அதாவது:—"நீ உன் கடையை சரியான முறையில் காப்பாற்று: அந்தக் கடை உன்னைக் காப்பாற்றும்." இச்சிறு உபதேசத்தைப் பின் பற்றுபவர்களுக்கு காலக்கிரமத்தில் ஆஸ்தியும் பூஸ்திதியும் வந்து சேரும். பணக்காரனாக வழி ஊக்கமும் சுறுசுறுப்புமே. நாணயமே சந்தோஷத்தைத் தரும். இவற்றை எவனொருவன் பின் பற்றுகிறானோ அவனுக்குப் பணமுடையும் ஏழ்மைத்தன்மையும் கிடையாது.

(இது ஆலிவர் கோல்டுஸ்மித் என்பார் " On the pride and luxury of the middling class people" என்ற பெயரோடு எழுதிய கட்டுரையைத் தழுவி எழுதப்பட்டது.

சிறுவயதில் கண்டிருப்பனே என்னவோ? அறிவு விளங்கப்பெற்று நன்மை தீமை இன்னதென்று அறியும் வயதுவந்த பின்னர் நடக்கும் வேள்வி இதுவே முதலதாகலின் அதைக் கண்ணுறப் பேராவல் கொண்டான். அவ்வேள்வியின் பொருட்டு ஒவ்வொரு வீட்டினர்க்கும் அழைப்பு வந்ததெனினும், இவனுக்கு மட்டும் அழைப்புத் தனியே வந்தது. அவ்வூரில் உள்ள அனைவரிலும் இவனே வேதம் புராணம் இதிகாசங்களில் வல்லவனாக விளங்கினமையால் வேள்விக்கு இவன் இன்றியமையாதவனாக இருந்தான். தன்னை மதித்துத் தனியே அழைத்தமையால் மகிழ்வு நிறைந்த நெஞ்சமும், புன்சிரிப்பு தவழும் முகமும் உடையவனாய் வேள்விச்சாலையை அடைந்தான். அங்கே பச்சைப் பந்தலும், தோரணங்களும், வாழை கமுகு நடப்பட்ட வாயில்களும் விளங்கக் கண்டு உளம் மகிழ்ந்தான். பந்தலின் நான்கு பக்கங்களிலும் தெங்கங் குலைகளும், கொங்குக் குலைகளும் வரிசை வரிசையாகத் தூக்கி யிருந்தனர். பந்தற்கால்களிலும், தோரணக்கம்பங்களிலும் வாழையும் கரும்பும் கட்டி அழகு செய்திருந்தனர். பந்தலின் நடுவே செங்கற்களால் அமைக்கடபட்ட ஓம குண்டத்தில் அரசமரத்தின் உலர்ந்த சுள்ளிகள் எரிந்து கொண்டிருந்தன. வேள்வி யாசிரியர் மாவிலையைத் தொன்னைபோல் மடித்து, அதனால் நெய்யை முகந்து ஓமத்தீயில் சொரிந்த வண்ணம் மந்திரம் ஓதிக்கொண்டிருந்தார். வேறு பலரும் ஓமகுண்டத்தைச் சூழ்ந்து வீற்றிருந்து மந்திரம் ஓதினர். ஆபுத்திரனும் மந்திரம் ஓதும கூட்டத்தில் கலந்து கொண்டானெனினும், அவன் சிந்தை முழுதும் வேறு ஒன்றின்மீது சென்று கொண்டிருந்தது. ஓமகுண்டத்திற்கு முன்னே சில அடி தூரத்தில் மஞ்சள் குங்குமம்பூசி, மலரும் மாலையும் கட்டப்பெற்ற கம்பம் ஒன்று நடப்பட்டிருந்தது. அக கம்பத்தில் தூயவெண்ணிறமுடைய ஒரு பசு கட்டப்பட்டிருந்தது. அதன் நெற்றியில் மஞ்சளும் குங்குமமும் அப்பி யிருந்தனர். கொம்பில் மலர்மாலை சூட்டப்பெற்றிருந்தது. அழகு ததும்பிய அப் பசுவின் செவ்விய முகம் துன்பம் நிறைந்திருந்தது. அகன்று பரந்த கண்கள் அச்சத்தால் மருண்டு நோக்கின. சாஸ்திரிகளின் வேத ஒலியும், மற்றையவர்களின் ஆரவாரமும், தான் இருக்கும் புதிய இடமும் ஆகிய இவைகள் சேர்ந்து அப்பசுவுக்கு அச்சம் விளைத்தன. அதனால் அது உடல் நடுங்கி நின்றது. இக் காட்சியே ஆபுத்திரன் சிந்தையைக் கவர்ந்தது. "அந்தோ! இவர்கள் என்ன நினைந்து என் செய்கின்றனர்? மக்கள் நலங்கருதி விலங்குகளின் உயிரைப் போக்க முயலல் மிகக் கொடுமை; அதிலும் பிறர்க்குப் பலவகையிலும் நன்மைதரும் பசுவைக் கொல்ல விரும்பல் எவ்வளவு பேதமை! விலங்குகள் அனைத்திலும் பசுவே மிகச் சாதுவானது. பொறுமை மிகுந்த ஒருவனைப் 'பசுப் போல்வான்' என்னும் முதுமொழியே அதை நன்கு விளக்கும். மற்றையவர்களினும் மறையவர்களே பசு தெய்வத்தன்மை வாய்ந்தது என்று கூறி அதனை மிகுதியும் போற்றுகிறார்கள். இத்தகைய வேதியர்கள் 'பசுவைக் கொன்று செருப்புத்தானம் செய்வது போல' வேள்வியென ஒன்றை நியமமாகக்கொண்டு, இத் தெய்வப்பசுவிற்குத் துன்பம் ஊட்டத் துணிந்து விட்டனரே!

'அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத்து உண்ணாமை நன்று.'

என்பது தமிழ்மறை யல்லவா?" என்பன போன்ற எண்ணங்கள் அவன் மனதில் உதித்தவண்ணம் இருந்தன.

இவ்வெண்ணங்கள் மறையவர் குலத்திற்குப் புதுமையாகும். அவர்கள் வேள்வியைப் புனிதமான குலத்தொழிலாகக் கொண்டவர்கள். வேள்வி செய்ய ஒருப்படாவிடினும், வேள்வியை இகழ்தல் கூடாது. அங்ஙனம் இகழ்பவரை வேதியர் குலத்திற்கு மாறுபட்டவர் என ஒதுக்கிவைத்தல் அவர்கள் மரபிற்குரிய ஒழுக்கமாகும். அங்ஙனமிருக்க, மறையவர் வீட்டில் வளர்ந்த இவன் இவ்வாறு மாறுபட்ட நினைவுகள் கொண்டமை வியப்பேயன்றோ? ஆதரவற்று உயிர் நீங்க இருந்த சமயத்து, ஆ ஒன்றின் துணையால் உயிர்வாழ நேர்ந்த தன் சுயசரிதையைத் தனது வளர்ப்புத்தாய் தந்தையர் வழியாகவோ, அல்லது பிறர் வாயிலாகவோ கேட்டறிந்த காரணத்தாலும், அதற்கியைய தனது பெயர் 'ஆபுத்திரன்' என வழங்கலானும் அவன் மனம் இப் பசுவினிடத்து இரக்கங் காட்டி வருந்துவதற்குக் காரணமாகலாம் என்று பலரும் ஊகிக்கக்கூடும். ஆனால் அவன் இளமைப் பருவத்திலிருந்தே எல்லா வுயிர்களிடத்தும் பேரன்பு காட்டி வந்தவனாகலின், இங்கு இப் பசுமீது தோன்றிய அன்பும் இயற்கையாக எழுந்ததேயாகும். இங்ஙனம் பசுவின் துயர நிலைக்கு இரங்கிப் பலவாறு எண்ணமிட்டுக் கொண்டிருந்த ஆபுத்திரன் தனது முகம் துயரத்தால் மாறுபட்டிருப்பதை எங்கே பிறர் அறிந்து கொள்வரோ என அஞ்சி, ஒருவாறு சிந்திக்கலுற்றான்:—"கொலைத்தொழில் புரியும வேடுவர் வில்லினுக்கு அஞ்சி வலையில் அகப்பட்ட மானைப்போல் பசு துடிதுடித்து நிற்கிறது. வேதம் ஓதும் இவர்களோ பசுவின் துயரநிலையைக் கண்ணெடுத்தும் பாராது ஓமத் தீயில் நெய் சொரிந்த வண்ணம் இருக்கிறது. இது குறித்து யான் ஏதேனும் கூற வாயெடுப்பின் என்னை நன்கு தண்டிப்பதோடு, பசு எங்கும் மறைந்து செல்லாவகை தக்க காவலை நியமித்து விடுவர். ஆதலின் இவர்களிடத்தில் நீதிமொழிகளைக் கூறி வாதாடுவதில் பயன் விளையாது. பொய், கொலை, களவு, கள், காமம் எனும் ஐம்பெரும் பாவங்களுள் களவும் ஒன்றாயினும், அஃது நன்றாய் மாறும் உண்டு. கணவனோடு பகைமை கொண்டு, அதனால் மனம் ஒடிந்த ஒரு மங்கைநல்லாள் 'நஞ்சு உண்டு சாவேன்' எனக் கூறிப் பிறர் இல்லாத சமயத்துக் குடிக்கக் கருதி நஞ்சு பெய்த கலனை ஓர் மறைவிடத்தே வைத்திருந்தாள். அதனை எங்ஙனமோ அறிந்துகொண்ட ஒருவன் அத் தற்கொலை நடைபெறாதவாறு விஷத்தை வெளியே கொட்டிவிட்டு, பார்ப்பதற்கு நஞ்சுபோலத் தோன்றும் வண்ணம் நீரை நிறைத்து அக்கலனை முன்பு இருந்த இடத்திலேயே வைத்துச் சென்றான். அவள் அந்த நீரை நஞ்சு எனக் கருதிப் பருகினளாயினும், அஃது நஞ்சு அன்மையால் உயிர் பிழைத்தாள். இன்றேல் அவன் புரிந்தது களவேயாயினும் அச் செயல் ஓர் உயிரைக் காப்பாற்ற நேர்ந்தமையின் குற்றமற்றதாயிற்று. ஆதலின் இது சமயத்து நான் ஒரு கள்வனாகி இப்பசுவின் கடுந்துயரைப் போக்குவேன்" என்று அற்றம் பார்த்திருந்தான்.

## 5. அறமா? மறமா?

வயணங் கோட்டிற்கு மேற்றிசையில், பருக்கைக்கற்கள் நிறைந்து கிடக்கும் ஓர் சிறு வழியில், இடையாமத்து நள்ளிருளில் ஓர் இளைஞன் ஒரு வெண்ணிறப் பசுவொடு சென்று கொண்டிருக்கிறான். பேய்களும் தீய விலங்குகளும் சஞ்சரிக்கும் அக்காரிருளில், தனி வழியே பசுவைக் கைக்கொண்டு விரைந்து செல்கிறான். "எனது அன்பே! நல்வினையால் இன்று

மரணத்தினின்றும் தப்பினாய். இளகிய நெஞ்சு படைத்தவ ராயினும், வேள்வியின் பொருட்டு உயிர்க்கொலை புரிதல் பாவமாகாது எனத் தொன்று தொட்டு வந்த தன்மையால், அச் செயலில் இரக்க மென்பதை நீக்கிய அப் பெருங் கூட்டத்தினரின் நடுவில் நீ அகப்பட்டிருந்த பொழுது எவ் வெவ்வாறு நினைந்து வருந்தினையோ? எனக்கு அதுபொழுது உண்டான துயரினும், உன்னை அந்த நிலையில் கண்டது முதல் யான் அடைந்த துயரை எவ்வாறு கூறுவேன்? நமது இருவரின் நற்பயனே நாம் அத் துயரினின்றும் ஒருங்கே விடுதலை பெற ஏதுவானோம்" என்று பற்பலவாறு அப் பசுவொடு பேசிக்கொண்டே செல்கின்றான். ஆனால் வாயற்ற அப் பசு என்ன மறு மொழி கூறும்? இங்ஙனம் செல்லும் பொழுது கற்கள் ஒன்றோடொன்று தாக்குண்டோ, காற்றினால் மரக் கிளைகள் ஒன்றோடொன்று உராய்தலி னாலோ ஓர் சிற்றொலி யெழினும் அச்சமுற்று நாற்றிசையும் பார்ப்பான். குத்துக் கற்களும், கிளைகளற்ற மொட்டை மரங்களும் அவ்வழி மருங்கே பல இருந்தன. அவற்றை அவ்விளைஞன் யாரோ வேற்று மனிதர் எனக் கருதி அஞ்சி அஞ்சிச் சென்றான். இங்ஙனம் அவன் அச்சமும் ஐயமும் கொண்டு சென்றதற்கு ஏற்ப, உண்மையிலேயே கையில் தடியொடு பருத்த உடலினையுடைய சிலர் அவன் முன் தோன்றி அவனை வழி மறித்தனர்.

"பெருந்தகையீர், அடியனை மன்னித் தருளவேண்டும்; தங்கள் கருத்திற்கு மாறுபட்டு இச் செயல் புரிந்தமை அனைவர்க்கும் நன்மை விளைவிக்க நினைத்ததனாலன்றித் தீமையைக் கருதியன்று" எனத் தனக்கு முன் நின்று வழிமறித்தவர்களைப் பார்த்துக் கூறினான் அவ்விளைஞன். அக் குழுவினருள் ஒருவன் "புலையா, நன்மையைக் கருதியா இச்செயல் புரிந்தாய்? ஆவின் ஊனைக் கருதி யன்றோ?" என்று கூறித் தன் கையிலிருந்த குறுந்தடியை ஓங்கினான். சிறுவன் "ஐயா, நெஞ்சை யொளித்தொரு வஞ்சகமில்லை, இப் பசுவின் துயரைக் களைய நினைத்தேனன்றி வேறில்லை; யானா இப் பசுவின் ஊனை விரும்பிக் கவர்பவன்?" என்று நடுங்கியவண்ணம் கூறினான். குழுவின ருள் மற்றொருவன் "யானா...கவர்பவன்? என்றால், நீ இல்லை, நாங்கள் இதன் தசையை விரும்பிப் பிணித்து வைத்தோமா? ஏ அறிவிலி! வேள்வியின் அருமையை அறிந்திருந்தும் இச் செயல்புரிய நீ துணிந்ததை நோக்கின், ஆவின் ஊனை விரும்பி யன்றி வேறு நினைவு இல்லை யென்பது தெளிவாகி றது. பார்ப்பனர் மரபில் பிறந்தும் இவ்விழி செயல்புரிய முற்பட்டதால் இனி நீ அறிஞர் அனைவராலும் விலக்கப்படுவை" என்றான்.

இளைஞன்:—பேரன்புடையீர்! வேள்வியின் அருமையை அறிந்துளேன்; எனினும் இப் பசுவின் உயிர் அதனினும் அருமையதென்று கருதினேன். வேள்வி பலபுரிய நம்மால் இயலும்; ஆனால் ஓர் ஆவிற்கு உயிர்தர நம்மால் ஆமோ? வேள்வியால் நன்மை பல விளையலாம்; ஆனால் சிறியேன் இதுவரை வேள்வியால் விளைந்த நன்மை இதுவென ஒன்றும் அறியேன். ஐய! ஆ தரும் நன்மை அளவில. அவையனைத்தும் நாம் கண்கூடாகக் காண்கின்றோம். இங்ஙனமாக யான் இப்பசுவின் ஊனை விரும்பிக் கவர்ந்தேன் எனல் பழிச் சொல்லாகும்.

குழுவினருள் ஒருவன்:—பேதாய் வேள்வியின் அருமையை அறிவை யா? அறிந்தா இச்செயல் செய்தாய்? பசுக்களால் விளைந்த நன்மை பல அறிந்த நீ வேள்வியால் விளைந்த நன்மை யொன்றும் கண்டிலையா? இப்பசு

வும், இதன் இனமும், நீயும், நானும், மற்றனைவரும் நலமே வாழ்வதற்கு ஏது வேள்வியே யென்பதை யறி; மாதம் மூன்று மழை பெய்கிறதே, அது எத ளுல் ? மாரி யின்றெனின் இவ்வுலகில் வாழ்வதேது ? உலகில் தீமை குறைந்து நன்மை பெருகுவது எதனுல்? பாவிகள் மறைந்து மற்றவர் வாழ்வது எத ளுல் ? இவையும், இவைபோன்ற பிறவும் வேள்வியால் விளையும் நன்மை யன்றோ ?

இளைஞன்:—ஐப, மாரியும் பிறவும் வேள்வியால் விளைகின்றன என்று எங்ஙனம் துணிதல்கூடும்? நல்லார் ஒருவர் உளரேல் அவர் பொருட்டு எல் லாக்கும் மழை பெய்யுமே; அந்நல்லவ ரென்போர் எல்லா வுயிர்களையும் தன் உயிர்போல் கருதும் அருளுடையவ ராவர். அவ்வாறன்றி, 'யான் புரிவது அறச்செயலே, அதுவும் தேவர்கட்கு மிகவும் மகிழ்வு தருவது' என்று கருதிப் பிறவுயிர்களுக்குத் துன்பம் தரும் வேள்வி புரிதல் அறவினையாமோ? அத ளுல் அவர் நல்லவரென்று சொல்லப்படுவரோ?

"தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றால் தேரின்
அருளாதான் செய்யும் அறம்"

"கண்ணோட்டத் துள்ள துலகியல் அஃதிலார்
உண்மை நிலக்குப் பொறை"

என்பன வள்ளுவர் வாய்மொழியன்றோ?

வள்ளுவர் அன்பையும் அருளையும் பற்றிக் கூறியிருப்பனவற்றை நின் னினும் பன்மடங்கு யாம் அறிந்துளேம்; வேள்வியைப் பற்றி அவர் கொண்ட கருத்தையும் அறிவோம். நாங்கள் அனைவரும் இரக்கம் இல்லாத வர்கள் என்றும், நீயே அருள் உருவானவன் என்றும் செருக்கி மகிழாதே. வேள்வியின் பொருட்டுப் பலியாகும் உயிர்கள் புண்ணிய உலகம் சேரும். உலகிற் பிறந்த உயிர்கள் அனைத்தும் என்றோ ஒருநாள் இறப்பது உறுதி. அதனுல் அவ் இறடபும் நல்ல கருமத்துக்கு உரியதாயின் வரும் மேன்மை பெரிதன்றோ? ஒரு புறுவின் பொருட்டுத் தன்னையே மகிழ்ந்து அளித்த ஒரு வன் அடைந்த மேன்மையை நீ அறிவாயன்றே?

இளைஞன்:—ஐய! உண்மை, உண்மை; தானே மகிழ்வோடு தன்னைப் பலியாக்கிக் கொள்ளும் தன்மை மேன்மையானதுதான். ஆனுல், இப்பசு உயிர் விடுவதற்கு அஞ்சிக் கண்ணீர் சொரிந்து நடுநடுங்கி நிற்கிறதே?

குழு..... ன்:—பேதாய்! நோயாளிக்கு வற்புறுத்தி மருந்தூட்டவில்லை யா? பிள்ளையை அடித்துச் செந்நெறியில் திருப்புகின்றோ மல்லவா? பகுத் தறிவு இல்லாத இப்பசு நன்மை தீமைகளை எங்ஙனம் அறியும்?

இளைஞன்:—பெரியீர்! மற்றும் ஒரு ஐயம்; புனிதத்தொழிற்குப் பலி யான உயிர்கள் நற்கதி யடையட்டும். ஆனுல், அவற்றை மெய் பதற மனம் மருள உயிர் பிரிக்கும் நமக்கு எக்கதி வாய்க்கும்?

குழு......ன்—ஐயம் என்றதால் கூறுகின்றேன். பேதையைத் தெருட்டி அறிவு புகட்டும் ஆசிரியனும், ஒருவன் மெய்யில் தோன்றிய புண்ணை அவ னுக்கு நோவுமிகினும், அதனைப் பொருட்படுத்தாது அறுத்து மருந்து கட்டும் மருத்துவனும் மேனிலை யடைதல் தெளிவன்றோ? வேள்வியால் அதற்குப்

பலியான விலங்கும், அவ்வேள்வி புரிந்தவரும் புண்ணிய உலகம் அடைவர். அத்துடன் இவ்வுலகமும் நன்மை யடையும்.

இளைஞன்—நீங்கள் கூறிய உவமை பொருத்தமாகத் தோன்றவில்லை. அது போகட்டும்; வேள்வியால் உயிர் துறந்து விண்ணுலகு அடைந்த விலங்குகள் தம்மைக்கொன்ற அம்மானிடர் தாம் இருக்கும் உலகினை அடைய வருங்கால், அவர்களைக் கண்களில் நெருப்புப்பொறி சிதறக் கனன்று தம் இருப்புக் கொம்புகளால் வருத்தும். ஆதலின், 'அயர்தரு வேள்வியின்பம் அழிவுறும் அதனை வெஃகல்' என்ற அறிஞர் உரை பொய்யாமா?

இதற்குமேல் அக்கூட்டத்தார்க்குப் பொறுமை காட்ட முடியவில்லை. "ஏதோ அறிவு தடுமாறி பாவச்செயலில் புகுந்த இவனை நன்னெறியிற் செலுத்தலாம் என்று நினைத்ததனால் அல்லவா இவனுக்கு இவ்வளவு துணிவு பிறந்தது" என்று சினம் மிகுந்தவராய் அவனிடம் இருந்த பசுவைபிடித்து அடித்து ஓட்ட முயன்றனர். உடனே இளைஞன் அவர்கள் முன்னிலையிற் சென்று, "ஐய, பொறுமை வடிவான இப்பசுவை வருத்தன்மின். இறைவன் அருளால் தானே தரையில் முளைத்த புல்லை மேய்ந்து, இவ்வுலகில் வாழும் நம்மனோர்க்கு கைம்மாறு வேண்டாத மேகம்போலத் தனது இனிய பாலை அருள் சுரந்த நெஞ்சோடு தருகிறது. இத்தகைய பசுவோடு தமக்கு வந்த சினம் நேர்மையல்லவே" என்று முறையிட்டான். அதனால் சினம் மிக்க ஒருவன் "நீ குழவிபபருவத்துச் சிலநாள் பசுவால் வளர்க்கப்பட்டனை யாயினும், பின்னர் பூதியென்னும் இப்போறிஞரால் நல்லறிவு பெற்றிருப்பாயென்று கருதினோம்; பேதாய்! நீ இது பொழுது பசு மகன் என்பதை உண்மையாக்கினாய்; அறிவிலி, வாயடங்கி வழிவிடு" என்று உறுத்துக் கூறினான்.

இளைஞன்:—பொறுமையிற் சிறந்த பெரியீர்! எளியேன் சொற்கள் உண்மைக்கு மாறுபடாதவரை தாங்கள் செவி கொடுத்தல்வேண்டும். தெய்வத்தன்மைவாய்ந்தது என்று போற்றப்படும் பசு வயிற்றில் தோன்றியதா இழிவாகும்? பிற்கூறுவன கொண்டு அடியனைத் தற்புகழ்ச்சி பேசுவனாக நினையாதிருக்கவேண்டுகிறேன். சேற்றில் கமலமும், சிப்பியில் முத்தும், மான் வயிற்றில் அரிதாரமும் தோன்றுவனவாயினும் அவற்றின் பெருமையை யான் கூறல் மிகையன்றோ? அவை யிருக்கட்டும்; உலகினர் நன்னெறி வழாது, வாழ்ந்து, பின்னர் உயர் நிலை யடையுமாறு தமது அருட்பெருக்கால் பொய்மை துடைத்து, அறநெறி காட்டி வாழ்ந்த பெரியாரும், நுமது குல முன்னோர்க்கு வேதம் முதலிய மெய் நூல்களை ஓதுவித்த சீரியரும் எக்குலத்துப் பிறந்தனர்? மறையவர் குலத்திலா, அல்லது வேறு குலத்தினர் மரபிலா? இரண்டிலும் இல்லையே; அறநெறிவழாத அசலன் என்னும் பெரியார் பசு வயிற்றில் உதித்தவரல்லவா? சிருங்கி முனிவர் பிறப்பிடம் மான் வயிறுமே! போகட்டும், ஆவும் மானும் உங்கள் கொள்கைப்படி மிக இழிந்த பிறப்பின அல்ல. புலி வயிற்றில் பிறந்தனரே ஒருவர்! விரிந்த அறிவும் பரந்த உள்ளமும் படைத்த சீரியர்; விரிஞ்சி யென்னும் திருப்பெயருடையார். புலித்தோலும் புனித ஆசனமாகும்; ஆதலின் அதுவும் மிக இழிவுடைத்தன்று என அமைதி காண்பீரேல், என்ன கொடுமை? நரி வயிற்றில்—விலங்குகளில் வஞ்சனை மிக்கது என்று இகழப்படும் நரி வயிற்றில் தோன்றினராம் கேசகம்பளன் என்னும் முனிவர்! குற்றமற்ற அப்பெரியாரின் கீர்த்தியை யானா எடுத்

தரைக்கத்தக்கவன்? இங்ஙனம் நீங்கள் போற்றும் பெரியோர்கள் புலி வயிற்றிலும் நரி வயிற்றிலும் பிறந்திருக்க பசுவொடு வந்த பழிகுலம் யாது? பெரியீர், வேதத்தில் பிறப்பினுல் இழிவு கூறப்பட்டுள்ளதா? பிறப்பால் எல்லா உயிரும் ஒன்றே; செய்கையால் உயர்வு தாழ்வு உண்டு; ஆதலின் அடியனை எவ்வாறு பழித்துரைப்பினும் வருந்தேன். ஐயோ, இந்தப் பசுவைமட்டும் வருத்தாது விட்டுவிடுங்கள்.

"நாம் இவன்பால் இதுவரை கருணை காட்டியதே தவறு; வழியினின்றும் விலகான், பசுவைக கவர்ந்து செல்லவேண்டுமென்ற விருப்பையும் விடான். ஆதலின், இவனுக்கு இதுவே தக்கது" என்று கூறித் தசை பருத்த உடலினன் ஒருவன் தன்கையில் இருந்த குறுநதடியால் ஓங்கிச் சிறுவனை அடித்தான். ஐயோ! அவ்விளைஞன்—களங்கமற்ற நெஞ்சினன்—மன்னுயிரைத் தன் உயிர்போல் கருதும் உததமன் துடிதுடித்து மனம் பதறி நின்றான். மேலும் அத்தடியன அவனை அடிக்க முயலவே, கூட்டத்தில் இருந்த ஓர் வேதியன் "இவனைத் தீண்டாதே, தீண்டாதே; இவன் தீண்டத் தகாதவன்! ஒழுக்கம் தவறிய பார்ப்பனி ஒருத்தியால் பெறப்பட்டவன்! இவன் வரலாற்றை ஏற்கனவே யான் அறிநதுள்ளேன். இவனுல் பிறர்க்குத் தீமையில்லையென்று கருதி ஒருவரிடமும் இதுவரை உரையாதிருந்தேன். இப்பொழுது தன் உண்மை நிலையைக் காட்டிவிட்டான். பேதைககு அறிவு புகட்டினும அவன் தனது கீழ்மைக் குணத்தை விடுதல் அரிதல்லவா? சில வருடங்கட்கு முன்னர் நமது ஊருக்குத் தெற்கே சிறிது தூரத்தில் கண் குழிந்து உடல்மெலிந்து தளர்ந்த நடையுடன் வந்த ஒரு பார்ப்பனியைக் கண்ணுற்று, அவளை யார் என வினவினேன்.

அவள், "வாரணசியில் ஆரண வுவாத்தியின் மனைவி, சாலி யென்னும் பெயருடையேன்; நிறை தவறி ஒழுகினமையால் அம்மாசு நீங்கக் குமரியாடச் சென்றேன்; செல்கையில் சூல் நிறைந்த யான் கொற்கை நகருக்குத் தெற்கே இடையர் சேரிக்கு அருகில் உள்ள ஓர் சோலையில் ஒரு ஆண் மகவை யீன்று, சிறிதும் இரக்கமின்றி அம்மகவை அங்கேயே விடுத்துச் சென்றேன்; ஐயோ! இத்தீவினையேற்கும் நற்கதி உண்டோ?" என அழுதாள். அவளுடைய மகனே இவன்! வியபிசரித்தலாற் பிறந்தவனுதலின் இவனைத் தீண்டாதே" என்று கூறி அவனைத் தடுத்தான். அவ்விளைஞன் ஆபுத்திரன் ஆவனென்றும், அக்கூட்டத்தினர் வேள்விச்சாலையில் வேதம் ஓதி நின்ற விப்பிரர் ஆவர் என்றும் நீங்கள் ஏற்கனவே அறிந்திருப்பீர்கள். அவ்வளவு துயர நிலையிலும் ஆபுத்திரன் அவர்கள் பேதமைக்கு இரங்கிக் குறுநகை புரிந்து "வேதம் முதலிய மெய் நூல்களில் தேர்ச்சிபெற்ற பெரியீர்! நமது குலம் பண்டு தொட்டு இன்றுவரை நடந்துவரும் முறையை நீங்கள் அறிந்திருந்தும் இங்ஙனம் மொழிதல் அடியேற்கு நகைப்பை விளைக்கின்றது. வேதத்தை அருளினமையால் வேதன் என்னும் திருப்பெயரையுடைய பிரமனுக்குத் தோன்றிய பெரியார் இருவர் இன்னர் என்பது நான் மட்டுமன்று, உலகமே அறிந்துளது. வசிட்டரும் அகத்தியரும் அன்றோ அவ்விருவரும்! அவர்களை அருமறை முதல்வர் என்றும் அந்தணர் என்றும் மற்றவர் இருக்கட்டும் நீங்களே போற்றி வருகின்றீர்களே! அவ்விருவருக்கும்! தந்தை மலரவன் எனினும் தாய் திலோத்தமையல்லவா? அவள் தேவ கணிகையாயிற்றே! ஒருவர்க்கன்றிப் பலருக்கும் உரிமையான ஒருத்தியிடத்துப் பிறந்தனரே வசிட்டரும் அகத்திய

ரும்! அங்ஙனமாக சாலிக்கு (கற்பிற்குச் சிறந்த எடுத்துக் காட்டாக விளங்கும் வசிட்டரின் மனைவி அருந்ததிக்கும் சாலி யென்னும் பெயர் இருத்தல் இங்கு குறிப்பிடத்தக்கது) என்னை யீன்ற அன்னைக்குத் தவறு கூறத்துணிந்தீர்களே!" எனக் கூறி மீண்டும் நகைத்தான். இதனால் அக்கூட்டத்தினர் சினம் மிக அடைந்தன ரெனினும் அவன் உரைக்கு மறுமொழி கூற வலியற்றனா. அவனை அன்புடன் போற்றி வளர்த்து அறிஞனாகச் செய்த அவனுடைய வளர்ப்புத் தந்தையான இளம்பூதியென்னும் வேதியனும் அவன்மீது வெறுப்புக்கொண்டான். "பாவி! புத்திரப் பேறு இல்லாத எனக்கு இறைவன் அளித்த புண்ணிய வடிவம் நீ யென்று இதுகாறும் போற்றிவந்தேன்; முற்பிறவியில் நான் புரிந்த தீவினையோ நின்னை எனது வீட்டில் வளர்த்து, உயர்ந்த என் குலத்தை மாசுபடுத்திக் கொண்டேன்? தீயோய்! நீ இனி எனது வீட்டு முற்றத்திலும் கால் வையாதே" என்று கூறிக் கடிந்துவிட்டான். பின்னர் அவர்கள் அப்பசுவினை வேள்விச்சாலைக்கு ஓட்ட முயன்றனர். ஆபுத்திரன் மனம் பதைத்தது. அவர்கள் பலரிடத்தே தனது தனிமையை நினைந்து அஞ்சினான்.

"மன்னுயிர் வருத்தம் கண்டும் வாழ்வதே வலிக்கு மாயில்
அன்னவன் ஆண்மை யாவது அலிபெற்ற அழகு போலாம்
என்னையான் கொடுத்தும் ஆவின் இடுக்கண்நோய் கெடுப்ப னன்றி
என்னுயிர் அரிதென் றெண்ணி இருத்தலிற் பழியு முண்டோ?"

பசுவின் உயிரினும் என் உயிர் பெரிதோ? எவ்வாறாயினும் இப்பசுவை விடுவித்தல் வேண்டும் என மனத்துணிவுகொண்டு மீண்டும் அவர்களை வழிமறித்தான். அவர்களுக்குள் தலைமை பெற்று விளங்கும் வேதியர் ஒருவர் தம்மை மறந்த கோபம் உடையவராய், அவ்விளைஞனை நன்றாக அடித்து, அவன் இரு கைகளையும் பிடித்து இழுத்து அப்பால் தள்ளி, பசுவை அடித்து விரைவாக ஓட்ட முயன்றனர். ஆண்டவன் தூண்டுதலோ யாதோ நாம் எங்ஙனம் துணிந்து கூறக்கூடும்? தன்னை அடித்து ஓட்டினமையோ, அல்லது தன் உயிரைக் காப்பதற்கு இத்துணைத் துன்பங்களையும் ஏற்று நிற்கும் அவ்வாபுத்திரன் மீது பிறந்த இரக்கமோ அத்தெய்வப் பசு தன்னைப் பிடித்திருந்தவர் கையினின்றும் தப்பித தாவி யெழும்பி, அக்கூட்டத்தினரில் தலைமையாக இருந்து ஆபுத்திரனை வருத்திய ஆரண உபாத்தியைத் தன் கொம்பால முட்டி அடவியில் ஓடி மறைந்தது. ஐயோ! பாவம்! அவர் வயிற்றினின்றுங் குடல் செவ்வலரி மாலையைபபோல் வெளியே சரிந்துவிட்டது! இச்செயலைக் கண்ட ஆபுத்திரன் மனம நடுங்கி, "அந்தோ! தீமை செய்தாராயினும் அவருக்குத் தீமை செய்தல் முறையல்லவே: எனினும் இப்பசு அச்செந்நெறியை எங்ஙனம் உணரும்? எங்ஙனமோ ஆ உயிர் தப்பியது; இனி நாமும் இக்கூட்டத்தினின்று தப்பலே தக்கது" என்று நினைத்து, அடிப்பட்டதால் தன் மெய்யில் உண்டாகும் நோவையும் மதியாது அவ்விடத்தினின்று சென்றுவிட்டான். வேதியர் கூட்டத்தில் நிகழ்ந்த அவ்வெதிர்பாராத செயலால் ஆ நழுவிப்போனதையும், ஆபுத்திரன் மறைந்து சென்றதையும் அவர்கள் பாராது குடல் சரிந்த வேதியரைத் தூக்கிச் சென்றனர்.

---

# சத்தியாக்கிரகம்



(ஆரியூர்-வ. பதுமநாப பிள்ளை.)

'சத்தியாக்கிரகம்' என்பது, 'சத்தியம்' 'ஆக்கிரகம்' எனும் இரு சொற்களால் ஆகியது. அஃது 'உண்மை கடைப்பிடித்தல்'—எனும் பொருள்படும். அறநெறியில் நின்று அச்சம சிறிதளவுமின்றி அதர்மத்தைக் கண்டவிடத்தில் அதனுடன் சாத்வீகப் போர் புரிந்து நிற்பவனே, 'சத்தியாக்கிரகி' எனப்படுவான். அத்தகைய சத்தியாக்கிரகியின் உள்ளத்திலே, பழிக்குப் பழிவாங்கும் நோக்கமாதல் அச்சமாதல் மூனைப்பாதல் தற்பெருமையாதல் சிறிதளவும் தோன்றுதல் கூடாது. அன்னோர், தமது பகைவரிடத்திலும் அன்பே பாராட்டுவர்; அன்புளங்கொண்டே பிறரது பிழைகளைக் களைய முயல்வர்; அன்புப் பொறுமைகொண்டு நடத்தலால், உயிர் துறக்க நேரினும் உவகையோடு உயிர் துறப்பர். கேவலம் உடல் வன்மையினும உள்ள வன்மையே சாலச்சிறந்தது. உண்மைச் சத்தியாக்கிரகிகள் அறத்துக்கும் ஆண்டவனுக்குமன்றி, வேறு எதற்கும் சிறிதும் அஞ்சார்; "இன்பத்துள் இன்பம் விழையாதான்—துன்பத்துள்—துன்பம் உறுதல இலன்"—எனும் நாயனார் நன்மொழிக்கு ஏற்ப, டாம்பிகக் களியாட்டுகளிலாவது பிறர் தன்னைப் புகழ வேண்டுமென்னும் நோக்கிலாவது அன்னார் தமது கருத்தைச் சிறிதும் செலுத்தாமல் பயன் கருதாப் பணிசெய்து வருவதால், துன்பம் வந்த இடத்தில் மனம் துளங்கார்; துன்பங்களெல்லாம் தம்மைத் தூய்மைப்படுத்த இறைவனால் தோற்றுவிக்கப்படும் சோதனைகளே யென்று அவற்றை மகிழ்வோடு ஏற்றுக்கொள்வர். அஹிம்சா நெறியினின்றும் சிறிதும் வழுவாமல், எத்தகைய துன்பங்களுக்கும் சிறிதும் அஞ்சாமல் உட்பட்டு, பிறர் இழைக்கும் கொடுமைகளைப் பொறுமையோடு சகித்து நடத்தலால் பிறரைத் திருத்த முயல்வதே சத்தியாக்கிரகமாகும். ஆன்ம சக்தியைப் பெருக்கக்கூடிய அரிய தியாகத்தை மேற்கொண்டோரே சத்தியாக்கிரகிகளாவர். தியாக உணர்ச்சியும் பொறுமையும் அஹிம்சா நெறியும இடுக்கண் அழியாமையும் மெய்யன்பும் ஒருங்கு சேர்ந்த ஒன்றே, 'சத்தியாக்கிரகம்' எனப்படும்.

இற்றைக்கு இரண்டாயிர வருடங்களுக்கு முன்னரே இத்தமிழ் நாட்டில் எழுந்த பின்வரும் சத்தியாக்கிரகப் பொன் மொழிகள் ஈண்டு குறிப்பிடத் தக்கன;—

"இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்து விடல்"

"இடுக்கண் வருங்கால் நகுக; அதனை
அடுத்தூர்வ(து) அஃதொப்பது இல்"

"மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாம்தம்
தகுதியான் வென்று விடல்".

தன்னைத் துன்புறுத்தியவர்களுக்குத் தானும் துன்பிழைக்க முயல்வதால் வன்மமே வளர்ந்து பெருகுமேயன்றி அமைதி ஏற்படாது. அதனால் இருவருள் ஒருவரும் நலம் பெறார். துன்புறுத்தப்பட்டவன் அன்புளங்கொண்டு பிறனிழைத்த தவறுகளைப் பொறுத்து அஞ்சாதிருப்பனேல், அவனைத் துன்புறுத்தியவனது மனம் இளகத் தொடங்குகிறது; தனது பிழையை அவன் உணர்கிறான்; தனது செயலுக்காகப் பெரிதும் வருந்துகிறான்; வெற்றி பெற்றவன் துன்புறுத்தப் பட்டவனேயன்றி துன்புறுத்தியவனன்று. அன்புளங்கொண்டு பொறுத்திருந்த அச்சீரியோன் தனது பகைவனைத் திருத்தியதோடு, தன்னையும் சத்தியாக்கிரகத்திற்குத் தகுதி உடையனாகச் செய்துகொள்வன். ஆனால், துன்புறுத்தப்பட்டவன் பதிலுக்குப் பதில் செய்யப்போதிய ஆற்றலின்மையாலோ அச்சத்தினாலோ பொறுமையும் அன்புமில்லாமலோ துன்பத்தை ஏற்றுக்கொள்வானாயின், அவன் உண்மைச் சத்தியாக்கிரகியாக ஆகமாட்டான்; அத்தகையவன் ஒரு கோழையே ஆவன். மற்றும், பிறரைச் சீர்திருத்தவோ பிறருக்குப் புத்தி கற்பிக்கவோ முன்வரும் ஒருவன், முதலில் தன்னைச் சீர்திருத்திக்கொள்ள வேண்டும். தன்னிடமுள்ள குற்றங் குறைகளைக் களைய முயலாத ஒருவன், பிறரைக் குறை கூறவோ பிறரைச் சீர்திருத்தவோ ஒரு சிறிதும் தகுதி உடையவனல்லன். பேதைகள் உண்மை அறிவின்மையினாலேயே பிறரைத் துன்புறுத்துகின்றனரென்று கொண்டு, அவர்களது பாவச்செயல்களுக்காகத் தாம் பெரிதும் இரங்கி ஆண்டவனிடம் மன்னிப்பு கேட்கும் சீரியோரே சத்தியாக்கிரக வீரராவர். துராக்கிரகத்தைத் தொலைக்க முயல்வதில் முனைந்து நிற்கும் உத்தம சத்தியாக்கிரகி, எத்தகைய சோதனைகளுக்கும் சித்த உறுதி சிறிதும் குன்றான்; மற்றவர்களுக்குக் கேடு சூழும் எண்ணம், அவன் மனத்தில் கனவிலும் தோன்றாது.

இற்றைக்குச் சுமார் ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்த இயேசுநாதரின் பின்வரும் பொன்மொழிகள், ஈண்டு நன்கு சிந்தித்து உணரத்தக்கன:—

"மாயக்காரனே! முன்பு உன் கண்ணிலிருக்கிற உத்திரத்தை எடுத்துப்போடு; பின்பு உன் சகோதரன் கண்ணிலுள்ள துரும்பை எடுத்துப்போடவகை பார்ப்பாய். தீமையோடு எதிர்த்து நிற்க வேண்டாம்; ஒருவன் உன்னை வலது கன்னத்தில் அறைந்தால், அவனுக்கு உனது மறு கன்னத்தையும் திருப்பிக் காட்டு. உங்களது சத்துருக்களைச் சிநேகியுங்கள்; உங்களைப் பகைக்கின்றவர்களுக்கு நன்மை செய்யுங்கள். இப்படிச் செய்வதனால், நீங்கள் பரலோகத்திலிருக்கிற உங்கள் பிதாவுக்கு உகந்த புதல்வர்களாயிருப்பீர்கள்."

## பண்டைய சத்தியாக்கிரகிகள்.

தமது பாரத மணித்திருநாடு, மிகப் பழைய காலந்தொட்டே சத்தியாக்கிரகிகள் பலரைக்கண்ட திருநாடு. 'ஆண்டவன் ஒருவன் உளன்'—எனும் உண்மையை மறுத்து, தன்னையே ஆண்டவனாகப் போற்றுமாறு பிறரை ஆணவ மேலீட்டால் வலியுறுத்திய இரணியனது மிருக சக்தியும் கொடுஞ்

செயல்களும், 'அணையிலான்றனைத் துணையென உடையவ'னாகிய பிரகலாதனது ஆன்மசக்தியின் முன்பு—அன்புப் பொறுமையின் முன்பு—சத்தியாக்கிரகத்தின் முன்பு என்னாயின? இறுதியில் வெற்றி பெற்றவன் இரணியனா? பிரகலாதனா? அன்பர்களே! சிந்தியுங்கள். துராக்கிரகத்தைக் கடைப்பிடித்தோர் தாயாயினும் தந்தையாயினும் ஆசிரியராயினும் வேறு யாராயினும், சத்தியாக்கிரகிகள் அவர்களது துராக்கிரகத்தைத் தொலைக்க முயலாமல் வாளா கிடக்க மனம் இசையார். தந்தையாயிற்றே யென்று பின்னடைந்து இரணியனது மிருக சக்திக்கு அஞ்சி அடங்கி ஒடுங்கி நடந்திருப்பனேல், பிரகலாதனை இன்று இவ்வுலகம் போற்றுமா? தாயாயிற்றேயென்று கைகேயியின் சூழ்வினைக்கிணங்கி நடந்திருப்பனேல், பரதனை இன்று இப்புவனம் புகழுமா? ஆசிரியராயிற்றே யென்று பரசுராமரின் கருத்துக்கு இணங்க தனது தூய்மை மிகுந்த பிரமசரிய விரதத்தைக் குலைத்துக் கொண்டிருந்தால், பீஷ்மரை இன்று இப்பிரபஞ்சம் மதிக்குமா? துராக்கிரகிகள் யாவராயினும் அவர்களைத் திருத்த முயல்வதே சத்தியாக்கிரகிகளின் கடனாகும்.

துராக்கிரகிகள் எத்தகைய மிருகசக்தி மிகுந்தோராயினும், உத்தம சத்தியாக்கிரகிகள் அத்துராக்கிரகிகளின் மூர்க்க சக்திக்குச் சிறிதளவும் அஞ்சார். என்றும்—எந்நிலையிலும்—உத்தம சத்தியாக்கிரகிகளை 'அச்சம்' என்னும் பேய் நெருங்கத் துணியாது விலகிச் சென்றுவிடும். சமண முனிவர்களின் சூழ்வினைகளுக்கு எளியவனாகிய அரசனது அமைச்சர்கள், சிவம் என்னும் சீரிய செம்பொருளைச் செவ்விதில் உணர்ந்த திருநாவுக்கரசரை அழைத்தபோது, அடிகளார் யாது கூறினார்? "நாமார்க்கும் குடியல்லோம்; நமனை அஞ்சோம்; நரகத்தில் இடர்ப்படோம்; நடலை இல்லோம்—ஏமாப்போம் பிணி அறியோம்; பணிவோம் அல்லோம்; இன்பமே எந்நாளும்—துன்பம் இல்லை!"—என்றன்றோ அடிகளார் வீரமுழக்கம் செய்து நின்றார்! அடிகளார் அவ்வளவோடு நின்றாரா? கல்லோடு பிணைத்துக் கருங்கடலில் தள்ளியபோதும், அடிகளார் தமது மன உறுதியினின்றும் சிறிதேனும் பிறழ்ந்தாரோ? "கற்றுணைப்பூட்டி ஓர் கடலிற் பாய்ச்சினும்—நற்றுணை ஆவது நமச்சிவாயவே"—என்றன்றோ அவர் மனந்தேறி யிருந்தார்! சத்தியாக்கிரகிகளுக்குச் 'சத்' எனும் செம்பொருளாகிய இறைவன் துணை இருக்கும்போது, மூர்க்க சக்தி உடையோரின் முனைப்பு அவர்களை என்ன செய்யும்? நெருப்பில் சுடச் சுட தங்கத்தின் மாற்று உயர்வதுபோல, துன்பங்களை நுகர நுகர சத்தியாக்கிரகிகளின் மனவலிமையும் பெரிதும் சிறந்து விளங்குகிறது.

திருவாசகம் என்னும் தேனைத் தமிழகத்திற்கு அளித்த மணிவாசகப் பெருந்தகையாரும், தமக்கு இழைக்கப்பட்ட துன்பங்களைக்கண்டு பரிகசித்து "யாவர்கோன் என்னையும் வந்து ஆண்டு கொண்டான்; யாமார்க்கும் குடியல்லோம் யாதும் அஞ்சோம்"—என்று வீறுகொண்டு நின்றன்றோ வேந்தனது மூர்க்க சக்தியை வென்றார்!

நமது தமிழ்நாட்டில் மட்டுமன்றி, பிறநாடுகளிலும் சத்தியாக்கிரகிகள் தோன்றி யிருக்கின்றனர். அறிவிலாக் கயவர்கள் தம்மைச் சிலுவையில் அறைந்த போதும், அவர்களிடம் சிறிதளவும் சினம் கொள்ளாமல் இரக்கமே மிகுந்து அவர்களை மன்னித்தருளுமாறு ஆண்டவனை வேண்டி நின்ற இயேசு நாதரும்; செருக்கு மிகுதியினால் இறுமாந்து கிடப்பது அஞ்ஞானமென்று

அறிவுறுத்தியதன் பயனாக மரண தண்டனை விதிக்கப்பெற்று நஞ்சை அருந்தி உயிர் துறந்த ஸாக்ரட்டீஸும் சத்தியாக்கிரக நெறிக்குச் சிறந்த இலக்கிய புருஷர்களாவர். புத்தர் பெருமானின் வாழ்க்கை முழுவதும் சத்தியாக்கிரக மணமே கமழ்வதை விரித்துரைக்க வேண்டுவதில்லை.

## சத்தியாக்கிரகம் வேறு; சாத்வீக எதிர்ப்பு வேறு.

சத்தியாக்கிரகத்திற்கும் சாத்வீக எதிர்ப்புக்கும் மிக்க வேற்றுமை உண்டு. சாத்வீக எதிர்ப்பு பல மற்றவர்களுடைய ஆயுதம்; அதன்படி ஒருவன் தனது லட்சியத்தை அடைய, அவசியமானால் பலாத்காரத்தை உபயோகிக்கலாம். ஆனால், சத்தியாக்கிரகம் பலவானிலும் பலவானுடைய ஆயுதம்; அதன்படி ஒருவன் என்றும் எவ்வித பலாத்காரத்தையும் உபயோகிக்கக் கூடாது. "எதிரியின்மீது பலாத்காரத்தை உபயோகித்தல் என்பது 'சத்தியத்தை நாடுதல்' என்பதில் அடங்காது என்றும், பொறுமையினாலும் அநுதாபத்தினாலுமே எதிரியை அவனுடைய பிழையினின்றும் விலக்க வேண்டுமென்றும் அறிந்தேன். ஆகவே, எதிரிக்குத் துன்பம் செய்வதன் மூலமாக வல்லாமல், தனக்கே துன்பத்தை விளைவித்துக் கொள்வதன் மூலமாய் சத்தியத்தை நிலை நாட்டுதல் என்பதே சத்தியாக்கிரகத்தின் பொருளாகும்"- என்பன இந்நாளில் நமது பாரதபூமியில் ஒப்புயர்வற்ற சீரிய சத்தியாக்கிரக வீரராக விளங்கி வரும் மகாத்மாகாந்தி யடிகளின் மணிமொழிகள். 'சாத்வீக எதிர்ப்பு' எனும் சொல் குறுகிய பொருளைத் தருவது; 'சத்தியாக்கிரகம்' எனும் சொல்லோ மிக்க உன்னதமான சீரிய பொருளைத் தருவது.

ஆண்டவன் சத்திய சொரூப (உண்மை வடிவின)னாக விளங்குகிறான். ஆகவே, சத்தியத்தின் சக்தி, மற்றெல்லாவற்றினும் மிக மிகச் சிறந்ததாகும். வாழ்க்கையில் வாய்மையை உறுதியாகக் கடைப்பிடித்து வாழ்வோரே மக்களாவார்; அல்லாதார் எல்லாரும் மாக்களே யாவர். சாந்தமா முனிவராம காந்தியடிகளார், சத்தியாக்கிரகத்தின் இயல்பை விளக்க வந்தவிடத்தில் பின் வருமாறு கூறுகிறார்:—

"சத்தியாக்கிரகம், நாற்புறத்திலும் கூர்மையுடையதொரு வாளாகும். அதை எவ்விதத்திலும் உபயோகிக்கலாம். அது உபயோகிப்பவனையும் எதிரியையும் ஏககாலத்தில் ஆசீர்வதிக்கும்; அது இருதிறத்தார்க்கும் நற்பயன் விளைவிக்கும்; ஒரு துளி இரத்தங்கூட சிந்தாமல் கணக்கிலடங்காத நன்மையைத் தரும்; அது என்றும் துருப் பிடிப்பதுமில்லை; அதை திருடவும் முடியாது. இத்தகைய ஆயுதத்தைப் பலஹீனர்களுடைய ஆயுதமென்று கூறுதல் நகைப்பிற் கிடமானதே."

ஆங்காங்கு தோன்றும் துராக்கிரகங்களுக்குத் தகுந்தவாறு, சத்தியாக்கிரகமும் 'பிறருடைய பாவங்களுக்குத் தான் கழுவாய் தேடுதல்' 'உயிர் துறத்தல்' 'உதவி மறுத்தல்' 'உண்ணாவிரதம்' 'சட்ட மறுப்பு' முதலிய பலதிறப்பட்ட வழிகளில் தோன்றும். எம்முறை பற்றி 'சத்தியாக்கிரகம்' மேற்கொள்ளப்படினும், பொறுமையாதல் துன்பம் கண்டு அஞ்சுதலால் சினமாதல் சத்தியாக்கிரகிகளின் மனத்தில் சிறிதும் தோன்றக்கூடா தென்பதே ஈண்டு வலியுறுத்தற்பாலது.

'குறைவிலா நிறைவுடையவன் இறைவன் ஒருவனே' ஆதலின், மனித

உடல் தாங்கிய எவரும் சிற்சில சமயங்களில் தவறு இழைத்து விடுதல் இயல்பே. 'சத்தியாக்கிரகம்' மேற்கொண்ட சான்றோர், தம்மையும் அறியாமல் எப்பிழையேனும் இழைத்துவிடுவரேல், "தினைத் துணையாம் குற்றம் வரினும்—பனைத் துணையாக் கொள்வர் பழி நாணுவார்"—என்ற நாயனாரின் அருள்மொழிக் கிணங்க, தாம் இழைத்த பிழையை உன்னி உன்னி உள்ளம் உருகி அழுது உண்ணு விரதமிருந்து ஆண்டவனை நோக்கி மன்னிப்பு வேண்டிப் பிரார்த்தித்து தமது தவறுக்குக் கழுவாய் தேடிக்கொள்வர். தமது பிழைகளைச் சிந்தித்துச் சிந்தித்துச் சிந்தை நைந்து நிற்போர், மீண்டும் பிழைகளுக்கு ஆளாவதரிது. "யானே பொய்; என் நெஞ்சும் பொய; என் அன்பும் பொய்—ஆனால், வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே"—என்றார் மணிவாசகனார். தமது பிழைகளைக் குறித்து நெஞ்சு உருகி நின்று இறைவனை நோக்கி முறையிடக்கூடிய சீரிய சத்தியாக்கிரகிகள், தற்காலத் தமிழ் நாட்டில் எத்துணைபேர் உளர்? தமது பிழைகளைத் தாமே உணர்ந்து தம்மைத் தாமே திருத்திக்கொள்ள முயலாமல் பிறருக்கு உபதேசிக்கவரும் 'தலைவர்கள்' பெருகிவரும் இக்காலத்திலே, இப்பாரத பூமியிலே சத்தியாக்கிரக நெறிக்கே ஒரு பெரும் இலக்கிய புருஷராக மகாத்மா காந்தி யடிகள் வாழ்ந்து வருவது, நம்மவர் செய்த பெருந்தவப் பயனேயாம்.

இந்தியரே யன்றி ஏனைய நாட்டினரும் பெரிதும் புகழ்ந்து போற்றிவரும் சாந்த உருவினராகிய காந்தியடிகளது வாழ்வில், இளமை தொட்டே சத்தியாக்கிரகம் படிப்படியாக வளர்ச்சிபெற்று வந்திருக்கிறது. நமது அடிகள் தமது இளமையில் அன்னையிடம் பொய் கூற அஞ்சி தீச்சார்பால் மேற்கொண்டிருந்த புலாலுண்ணலை ஒழித்தார்; இங்கிலாந்திலிருந்த காலத்திலும், தமது அன்னைக்குத் தந்த வாக்குறுதிகளை நிறைவேற்ற வேண்டி, நண்பர்களின் சினத்திற்கும் அஞ்சாமல் மாமிச உணவு வைக்கப்பட்டிருந்த விருந்தை விட்டு எழுந்து சரேலென வெளியேறிச் சென்றார். தென்னாப்பிரிக்காவில், தன்னை நையப்புடைத்த கயவனையும் அன்புளங் கொண்டு மன்னித்து விட்டார். இன்னும் பற்பல சம்பவங்களும் நிகழ்ந்தன. காந்தியடிகளது வாழ்வு, 'உண்மையோ டியைந்த வாழ்வு' ஆகும்; 'சத்திய சோதனைகள்' நிரம்பியனவாகும். அவ்வப்போது நேர்ந்த சோதனைகளுக்கு அடிகள் எளியராகி யிருப்பரேல், இன்று இவ்வுலகம் முழுவதும் அடிகளாரைச் 'சத்தியாக்கிரக வீர'ராகக் கொண்டு போற்றுமோ?

சத்தியாக்கிரகத் திலகங்களான சாவித்திரி—கண்ணகி—திரௌபதி முதலிய பதிவிரதைகளின் வழித்தோன்றிய பாரதநாட்டு வீரத்தாய்மார்களே! தீமையை எதிர்த்துப் போராடிய பிரகலாதன்—நமனோடு சமராடிய மார்க்கண்டேயர்—முதலிய இளவீரர்களின் வழிவந்த செந்தமிழ்நாட்டு வாலிப சிங்கங்களே! மிருகசக்தியைப் புறங்கண்ட அப்பர் வழிவந்த—பகைவனிடத்தும் கருணை காட்டிய மெய்ப்பொருள் நாயனார் வழித்தோன்றிய வீரத் தமிழர்களே! எழுமின்! விழிமின்!! 'சத்தியாக்கிரக நெறி' ஒன்றே நமக்கு விடுதலை அளிக்கக்கூடியது என்பதை நன்கு உணர்மின்! அறநெறி நின்று, உண்மையையும் அஞ்சாமையையும் ஒண் போராயுதங்களாகக் கொண்டு சாத்வீகப் போர்புரிய முன் வாருங்கள்! பாரதத்தாய் உங்களுக்குத் திருவருள் பொழிவாளாக. வந்தே மாதரம்!



# காளமேகப் புலவர்

(தேனி. L. சௌரிராஜன்)

இப் புலவர் திலகம் இற்றைக்குப் பன்னூறாண்டுகட்கு முன் நந் தமிழகம் தழைக்கத் திருக்குடந்தையிலே தோன்றினர். இவர் ஜாதியில் பிராமணர். இளமையிலே இவர் ஸ்ரீரங்கத்தில் பெருமான் கோயிலில் சுயம்பாகியா யிருந்தார். திருவானைக் காவிலுள்ள சம்புகேசுவரர் கோயில்தாசி மோகனாங்கி எனும் பெண்ணிடம் மயல்கொண்டு அவளைத் தன் காதலியாக வைத்திருந்து, பின் அவளுடைய விருப்பத்திற்கிணங்க சைவரா னார். பின்னர் சரஸ்வதி தேவியி னருளால் காளமேகமானது அமோகமாய் மழை பொழிவது போலத் தமிழில் ஆசு முதலிய நால்வகைக் கவிகளையும் கடல்மடை திறந்தாற்போல அசுவதாட்டியாய்ப் பாடும் சக்தி இவருக்கு உண் டாயிற்று.

ஒரு சமயம் இவர் தில்லைக்குச் சென்று அங்கு பரமசிவனுடைய பிட்சா டன உற்சவம் தரிசிக்கையில், அவ் வுற்சவத்தில் முழங்கும் காளமுதலிய வாத் திய வோசையைக் கேட்டு, 'விஷசர்ப்பத்தை ஆபரணமாகப் பூண்ட பரம சிவனே! தாங்கள் இரந் துண்ணப் புறப்பட்டும் தங்களுக்குக் காளம், மேளம், யானை யாதிய ஆடம்பரங்கள் ஏன்?' என்று பொருள்படும்படி,

"நச்சரவம் பூண்டதில்லை நாதரே தேவரீர்
பிச்சையெடுத் துண்ணப் புறப்பட்டும்—உச்சிதமாம்
காளமேன் குஞ்சரமேன் கார்க்கடல்போ லேமுழங்கும்
மேளமேன் ராசாங்க மேன்?"

என்ற பாடலைப் பாடினர். பின், 'ஐயனே! தாங்கள் இவ்வாறு தரித்திரரா யிருந்தால் கொண்ட மனைவியும் தலையின்மே லேறுவாளன்றோ! பூட்டி யிருந்த செருப்பா லொருவன் புடைக்கானோ? வாய்க்கு வந்தபடி ஒருவன் நிந் தையாகப் பேசானோ?' என்ற கருத்தமைத்து,

"தாண்டி யொருத்தி தலையின்மே லேறாளோ
பூண்டசெருப்பா லொருவன் போடானோ—மீண்டொருவன்
வையானோ வின்முறிய மாட்டானோ தென்புலியூர்
ஐயாநீ யேழையா னால்"

என்ற ஓர் வெண்பாப் பாடினர்.

பின்னர் ஒரு பொழுது தியாகராஜர் வீதியில் எழுந்தருளி திருநடனஞ் செய்யக் கண்டு, 'இந்த தியாகேசர் கையிலோ பணம் நிறைய விருப்பதா லன்றோ புனுகு, சவ்வாது முதலிய வாசனைத் திரவியங்களால் தன் மெய்யை

திரப்பி அடியார்க ளெல்லாம் பார்த்திருக்க இத் திருவாரூர் வீதியிலே நின்று கூத்தாடுகின்றார்’ என உணர்த்த,

“ஆடாரோ பின்னையவ ரன்பரெலாம் பார்த்திருக்க
நீடாரூர் வீதியிலே நின்றுதாம்—தோடாரும்
மெய்க்கே பரிமளங்கள் வீசுந் தியாகேசர்
கைக்கே பணமிருந்தக் கால்”

என்று பாடினார்.

ஒரு சமயம் இவர் திருவண்ணாமலைக்குச் சென்றிருந்த பொழுது, அங்கு சம்பந்த ஆண்டானைக் கண்டார். ஆண்டான் சிறிது கற்றவனாயினும் கல்விச் செருக்கு மிக்கு பிறரை மதியாதான். காளமேகப் புலவர் அங்கு சென்றிருந்த பொழுது அவன் மயிர்வினைஞனிடத்து சௌளம் பண்ணிக் கொண்டிருந்தான். புலவரைக் கண்டதும அவன் “என்மீது ‘மனனு’ வென ஆரம்பித்து ‘மலுக்கு’ என முடித்து ஓர் வெண்பாப் பாடவேண்டும” எனலும் அவர்,

“மன்னு திருவண்ணா மலைச்சம்பந் தாண்டாற்குப்
பன்னுதலைச் சௌளம் பண்ணுவதேன்—மின்னின்
இளைத்த விடைமாத ரிவன்குடுமி பற்றி
வளைத்திழுத்துக் குட்டாம லுக்கு”

என்று பாடி அவனுடைய கர்வத்தை ஒடுக்கினார்.

திருச்செங்காட்டில் உத்தராய தீசரைத் தரிசித்து, ‘எப்பொழுதும் ஒழுக்கத்துடனே நாட்டின் நடுவில் வாழும் நாதரே! நீரிப்பொழுது இந்தச் செங்காட்டில் வந்து ஒளித்துக் கொண்டிருந்தால், முன் யமனையும், மன்மதனையும், சிறுத்தொண்டரின் மகனையுங் கொன்ற பழிபோமோ?’ என்னுங் கருத்தமைத்து,

“காலனையுங் காமனையுங் காட்டுசிறுத்தொண்டர் தரும்
பாலனையுங் கொன்றபழி போமோ—சீலமுடன்
நாட்டிலே வாழ்ந்திருக்கு நாதரேநீர் திருச்செங்
காட்டிலே வந்திருந்தக் கால்”

என்று பாடினார்.

இன்னும் இவர் பாடிய பாடல்கள் பலவுள.



# "கண்ணா! அபயம்"

(தென்னாப்பிரிகா டர்பன் சரஸ்வதி சபைத் தலைவர்
திரு. ச. முனிஸாமி பிள்ளை.)

மரங்கள் அடர்ந்த ஒரு பெரிய காடு. குன்றுகள் சில ஆங்காங்கே காணப்பட்டன. அக் குன்றுகளில் இருந்து சில நதிகள் உற்பத்தியாகிச் 'சல சல' என்று சத்தமிட்டுக்கொண்டு ஓடி வந்தன. மலர்ச் செடிகள் எல்லாம் காற்றில் ஆடி அசைந்து கொண்டிருந்தன.

அக் காட்டிற் குள்ளே அழகே உருவா யமைந்த ஒரு பெண் யாரையோ தேடிக்கொண்டு அங்கும் இங்கும் அலைந்து திரிந்தாள். அவ்விடத்தில் மான்கள் துள்ளி ஆடின. மரத்தின் மேலிருந்து பறவைகள் சில பாடின.

தேடித் தேடி அலைந்தும் தான் தேடும் உருவத்தைக் காண முடியாமல் போகவே, அப் பெண்ணுக்கு இளைப்பு மேலிட்டது. கால் கை சோர்ந்து அடி சாய்ந்த மரம்போல் கீழே விழுந்து விட்டாள். அப்பொழுது வில்லும் கையுமாய் ஒரு வேடன் அங்குத் தோன்றினான். அவன் அப் பெண்ணை அணுகி, "பெண்ணே! உன் அழகு என்னை மயக்குகிறது" என்று கூறி நகைத்தான். அந்தப் பெண் அவனை உற்று நோக்கினாள்.

உடனே வேடன், "கண்ணே, மணியே, உன்னைக் கட்டித் தழுவ மனங் கொண்டேன். எழுந்திரு போகலாம். உனக்குத் தேனும் கனியும் தருகிறேன்" என்று கூறினான்.

இதைக் கேட்ட அப்பெண்மணி எழுந்து நின்று, "அண்ணா! உன்னை நமஸ்கரிக்கின்றேன். இந்தக் கொடுமையான வார்த்தைகளைத் திரும்பச் சொல்ல வேண்டாம். இன்னொருவனுக்கு மனைவியான என்னை நீ இப்படிக் கேட்கலாமா?" என்றாள்.

இச் சொற்களைக் கேட்டும் அந்த வேடன் மனம் இரங்கவில்லை. "அடி பெண்ணே! உன் சாத்திரங்கள் எனக்கு வேண்டாம். நான் வேண்டும் பொருள் நீயே" என்றான்.

அப்பெண், "கண்ணா!" என்று அலறி ஒரு கூக்குரல் போட்டு விட்டுக் கீழே விழுந்து விட்டாள்; சிறிது நேரம் பொறுத்து மயக்கந்தெளிந்து கண் விழித்துப் பார்த்தாள். ஆ! அவள் கண்ட காட்சியை என்னென்பது! நீல வண்ணனாகிய கண்ணபிரான் தன் புல்லாங்குழலோடு அவள் முன் நின்றான். அந்தப் பெண் எழுந்து தன்னை வேடன் மிரட்டியதை எல்லாம் கூறி, 'அந்த வேடன் எங்கே? உன்னைக் கண்டா ஓடி விட்டான்?' என்று கேட்டாள். அதற்குக் கண்ணன் ஒரு மாயப்புன்னகை செய்தான். இவற்றையெல்லாம் பார்த்துக்கொண்டு நான் அக் காட்டிலேயே எங்கேயோ நிற்பது போலத் தோன்றியது. வேடன் யார்? என்று நான் யோசித்துக்கொண்டே இருந்தேன்; கண்ணனே வேடன் உருக்கொண்டு வந்து தன் காதலியை ஏமாற்றினான் என்று யாரோ கூறுவதுபோல் இருந்தது. அவ்வளவுதான். நான் அக் குரலோசை எங்கிருந்து வருகிறதென சுற்று முற்றும் பார்த்தேன். நான் இருப்பது காடல்ல. எந்தக் கண்ணனும் என் கண்ணிற்கு அப்போது

# துஷ்டர் சேர்க்கை நஷ்டம் விளைக்கும்

(கா. சின்னட்பா, தெல்லிப்பழை.)

**விருத்தம்.**

கெட்டவர்க ளென்றிந்த நாட்டோர் செப்பும்
கீழ்மக்கள் தம்மைநிதம் நீக்கி வாழா
தெட்டுணையு மவரோடிங் கிணங்கி வாழ்வோர்
இவ்வுலகி லெத்தனையோ இன்ன லுற்று
நட்டத்தைத் தொடர்பா யெந்நாளு மெய்தி
நலிவுறுதல் நிச்சயமீ தோரா தோர்கள்
விட்டிந்த மண்ணுலக வாழ்வைப் பின்பு
விண்ணுலகம்போ தேங்கிடுவர் மெய்தா னீதே. (1)

சித்தத்துச் சீரில்லாச் சிதடர் தம்மைச்
சீவியத்தில் நன்மைபல செய்யா தோரை
இத்தரையோர் புகழ்ந்திடவே யேற்ற தர்மம்
என்றுஞ்செய் தின்புறு திருப்போர் தம்மை
அத்தன்று ணடைவதற்கிங் கார்வ மில்லா
தல்லலுறும் கீழ்மக்க ளானோர் தம்மை
உத்தமர்க ளொருபோது மவப்பி னேடிவ்
வலகினிலே மதித்திடா ருண்மை யீதே. (2)

நல்லவர்க ளெந்நாளும் நன்மை செய்வர்
நாட்டோரின் வாழ்த்தென்றும் நாடி நிற்பர்
பொல்லாத செயல்களிலே புன்மை யோடு
புல்லரைப்போற் புந்திதனைப் புகவே விட்டிங்
கெல்லாரு மிகழ்ந்திடவே யேங்கி வாடி
இவ்வுலகிற் சீவிக்க எண்ண மாட்டார்
துல்லியமாய்ச் சுகம்நாடித் தூய சிந்தை
தோன்றிடவே சேவைபல புரிவ ரன்றே. (3)

---

தென்படவில்லை. ஓகோ! நாம் கனவு கண்டிருக்கிறோம்! என்று எண்ணினேன். அதன் பிறகுதான் எனக்கு விஷயம் புரிந்தது; அன்று இரவு நான் படுக்கப்போகும் முன் பாரதியின் "கண்ணன் பாட்டுகளை" ஊன்றிப் படித்துக் கொண்டிருந்தேன். அவைகளில், "திக்கு தெரியாத காட்டில்—உனைத் தேடி யிளைத்தேனே" என்ற கண்ணியின் பொருள் அப்படியே என் கனவில் எனக்குக் காட்சி கொடுத்து இருக்கிறது.

சிந்தைதனி லஞ்ஞானஞ் செறிந்தி ருப்போர்
சீரற்ற செயல்களிலே யீடு பட்டுப்
பந்தமெலாம் பற்றிடவே பாரில் வாழ்வர்
பயமிவரை யெந்நாளும் பற்றி நிற்கும்
எந்தைபிரான் பாதமல ரென்று மெண்ணி
எழிலோடிங் கெச்செயலும் செய்வ தற்கும்
இந்தவுல கிருப்பவர்க ளென்றும் போற்றி
ஏத்துதற்கு மேற்றநிலை யிவரெய் தாரே. (4)

கற்றவர்கள் கெட்டவர்க்குக் கண்ணி யத்தைக்
காட்டிடவே யொருபோதுங் கருத மாட்டார்
மற்றவர்கள் தமையிகழ்வர் மனத்தி லென்றும்
மாசுநிறை துஷ்டரைத்தாம் மதித்தா லென்று
பொற்புமிகு புண்ணியந்தான் பொருந்தா தோரைப்
புல்லரெனப் புகன்றிடுவர் போற்ற மாட்டார்
அற்பர்தமை யணைந்திடுவோ ரல்ல லுற்றே
அவனிதனிற் கேடுறுவ ரறிவீ ரீதே. (5)

பன்றிதனைச் சேருமது பயந்த கன்றும்
பவ்வீயை யருந்துதலைப் பார்த்தும் பின்பு
நன்றென்றும் நாடாத தீயோர் தம்மை
நண்ணிடுவோர் நிச்சயமாய் நலிந்து வாடி
என்றுந்தம் சிந்தைபல இன்ன லுற்றே
இவ்வுலகிற் சந்தோஷ மின்றி வாழ்ந்து
பொன்றுங்கா லிறைவனருள் பொருந்திடாது
புலம்பிடுமப் பான்மைதனைப் புகலப் போமோ. (6)

எள்ளளவும் சிந்தைதனி லிரக்க மின்றி
எவரேனும் தீயவரோ டிணைந்து வாழ்ந்தால்
பள்ளத்தை நீர்நாடிப் பாய்தல் போலப்
பலகஷ்ட மெந்நாளும் பற்று மென்றே
உள்ளத்திற் றூய்மையெனு முயர்ந்த பான்மை
உண்மையாய்ப் பொருந்தியிங் குள்ளோ ரெல்லாம்
கள்ளமிலா மனத்தினுடன் கற்றோர் சேர்ந்த
கண்ணியமார் சற்சங்கம் கருது வாரே. (7)

சற்சனரைச் சந்ததமும் சார்ந்து நிற்போர்
சாற்றருநல் லின்பமதைத் தாமெய் தற்காய்
அற்பரது சேர்க்கைதனை யறவே விட்டிங்
கத்தன்ற னணைந்துய்ய ஆர்வம் கொண்டு
பொற்புமிகு புண்ணியங்கள் பொலிவாய்ச் செய்து
பூதலத்தோர் போற்றிடவே வாழ்வ ரிந்த
அற்புதத்தை யறிந்திடுநல் லறிவுள் ளோர்கள்
ஆனந்தத் தமிழ்ந்திடுவ ரறிந்தி டீரே. (8)

# விவேகானந்த சுவாமிகள்

("கரன்")

விவேகானந்தருடைய இயற்பெயர் நரேந்திரநாத தத்தர் என்பது. வாலிபர்கள் மாட்டு இன்றியமையாததாய் இருக்க வேண்டிய குதூகலமும் வேடிக்கை விநோதங்களில் பற்றும், இவரிடத்துமிருந்தன. கலாசாலையிற் படிக்கும்போது, சுமார் இருநூறு மாணவர்கள் அடங்கியிருந்த வகுப்புக்கு அதன் ஆசிரியர் வரச் சிறிது காலதாமத மேற்பட்டது. அப்பொழுது நரேந்திரர் ஒரு பாட்டுப்பாடி அவர்களை மகிழ்விக்க வேண்டுமென்று அனைவரும் வேண்டினார்கள். அவரும் அக்கணமே இனிமையான குரலில், கம்பீரமாகப் பாடியதை எல்லாரும் மனம் குவிந்து நிசப்தமாய் கேட்டுக்கொண்டிருந்தார்கள். ஆசிரியரும் பாட்டு முடியும் பரியந்தம் வெளியே இருந்து கேட்டு அனுபவித்துவிட்டு மலர்ந்த முகக்குறிப்புடன் பிரவேசித்து கானரசத்தை மிகவும் போற்றினார்.

சங்கீதமன்றி நாடகத்துறையிலும், மேம்பாடு பெற்றிருந்த நரேந்திரர் இவ்வித்தையைக் கசடறக் கற்றுக்கொள்ளுதற்கு சங்கீத வித்துவான்கள் இருவர்களது உதவியைக் கொண்டு, வீணை, மிருதங்கம் முதலிய கருவிகள் வாசிக்கவும், ராகங்கள் பாடவும் பயின்றுவந்தார். நானாவித தேகப் பயிற்சிகளிலும், பந்து விளையாட்டுகளிலும், தேர்ச்சிபெற்றிருந்ததுபோலவே, சிலம்ப வித்தையிலும் தேர்ச்சிபெற்றிருந்தார். தேக வலிமையாலே சிறந்தவர்களையும்கூட இவ்வித்தையில் தோற்கடிக்கவல்ல சில மர்மங்களையும் அவர் கற்றிருந்தார். ஒரு நாள் ஒரு சிலம்பப் பந்தயத்தில் வயது முதிர்ந்தவனும் வித்தையில் வல்லவனுமான ஒருவனுடன் எதிர்த்து விளையாட நரேந்திரர் முன்வந்தார். பார்க்க வந்தவர்கள் சிறியவனாகிய இவனுக்குச் சிலம்புப் போர் விளையாட்டில், என்ன ஆபத்து நேரிடுமோ என்று பயந்தனர். ஆனால் வீரம் ததும்பிய அவ்விளைஞர், பேர்பெற்ற அம்மல்லனுடன் நெடுநேரம் எதிர்த்து விளையாடினது மல்லாமல் முடிவில், எதிரியின் சிலம்பத்தடி சின்னாபின்னமாக உடைந்துவிழச் செய்தது பார்த்தோர்க்குப் பெருவியப்பூட்டியது.

பிறகு விவேகானந்த சுவாமிகள் தேசசஞ்சாரம் செய்யவாரம்பித்தார். வாரணாசியில், ஒரு தெருவில் போய்க்கொண்டிருக்கையில் குரங்குக் கூட்டமொன்று இவரைப் பின் தொடர்ந்தது. அம்மிருகங்களிடமிருந்து தப்பித்துக்கொள்ள இவர் விரைந்து சென்றார். ஆனால் அவைகளும் வேகமாய் அவரைப் பின்பற்றி வந்தன. இவரைச் சூழ்ந்துகொண்டு தாக்கும் தருவாயில் இருந்தபோது, அவ்வழியே சென்றுகொண்டிருந்த சன்யாசி யொருவர் "ஓடாதே; மிருகத்தை எதிர்த்து நில்" என்றுரைத்தது, சுவாமிகள் காதில் விழுந்தது. அப்படிச் செய்தவுடனே, வானரங்கள் திகைத்து நாலுபக்கமும் சிதறி ஓடிவிட்டன. சுவாமிகள் இதிலிருந்து கற்றுக்கொண்ட பாடமாவது,

"மிருகத்தை மட்டுமல்ல, மிருகத்தன்மை வாய்ந்த யாவற்றையும், மருளப் பண்ணுகின்ற யாவற்றையும், மயக்கம் வருவிக்கின்ற யாவற்றையும், எதிர்த்து நிற்கவேண்டும், அவற்றுடன் போராடவேண்டும்; திகைத்து ஓடலாகாது" என்பதாம். சிறிது காலம், மலைநாட்டினுள் வதிந்திருந்தார். உலகத்திலே மிகப் பெரியதாகிய இமோத் பர்வதத்தின் கம்பீரமான தோற்றம் சுவாமிகளின் மனத்தை மாண்புறச் செய்தது. அடர்ந்த ஆரண்யம், மலையின் அருவிகள், நீர்வீழ்ச்சிகள் ஓடும் ஓடைகள், அலையெறியும் ஆறுகள், பாடும் பறவைகள், வீசும் இளங்காற்று, ஓசை ஒலி யொன்றும் கேளாத குகைகள் ஆகிய இவைகளுக்கிடையே, பரந்த எண்ணங்கள் எண்ணியும், உயர்ந்த உணர்ச்சிகள் எய்தியும், ஆழ்ந்த நிஷ்டைகள் புரிந்தும் சுவாமிகள் காலம் போக்குவாராயினர். கண்ணுக்கு எட்டியவரையும், அதற்கப்பாலும், ஒழிவிலாதிருக்கும் பனிக்கட்டியினுள் புதைந்து கிடைந்த பர்வதங்களைப் பார்த்தமாத்திரத்திலே, யாருக்கும் பரம சாந்த மூண்டாகும். அத்தகைய மகோன்னத மலையிலே, நிலவும் சிவனார் போன்று நம் சுவாமிகளும், மனம் ஒடுங்கப் பெற்றுச் சாந்த மூர்த்தியாகத் திகழ்ந்திருந்தார்.

இவர் பிறகு ராஜபுதனம், ஆள்வார் முதலிய இடங்களுக்குச் சென்றார். கற்றவர்களும், மற்றவர்களும், இந்துக்களும், முகமதியர்களும், திரள்திரளாய் இவரிடம் வரலாயினர். இந்து மதம், முகமதிய மதம், மதங்களின் சமரசம், சம்ஸ்கிருதம், ஆங்கிலம், உருது இத்யாதி விஷயங்களைப்பற்றி சுவாமிகள் அற்புதமாகப் பேசினது எல்லாருடைய மனத்தையும் கவர்ந்தது.

ஆள்வார் சமஸ்தானத்தை அடைந்ததும் "ஆங்கிலக் கல்வியில், அளவில்லாத தேர்ச்சிபெற்ற ஒரு மகாபுருஷர் எனது இல்லத்தில் எழுந்தருளியிருக்கிறார்" என்று ஒரு நாள் திவான் மகாராஜாவுக்குத் தெரிவித்தார். அக்கோமகனும், சுவாமிகள் இருப்பிடம் வந்து வணங்கினர். பிறகு அவர்களிடையே கீழ்க்கண்டவாறு சம்பாஷணை நடந்தது.

மகாராஜா:—"பண்டிதராகிய நீங்கள் பணம் சம்பாதியாது பிக்ஷை எடுப்பானேன்?"

சுவாமிகள்:—"பிரஜைகளைப் பரிபாலிப்பதைப் புறக்கணித்து விட்டு, நீவிர் ஆங்கிலர்களுடன்கூடி வனத்தில் வேட்டையாடியும், "கிரிக்கெட்" ஆடியும், நாட்டிற்குரிய பொருளை விரயம் பண்ணியும், வீண் காலம் கழிப்பானேன்?"

கோமகன்:—"அது என் இஷ்டம்."

சுவாமிகள்:—"இரந்துண்பதும் என் இஷ்டம். ஆனல் சமூகத்துக்கு நான் செய்யவேண்டிய கடமையில் தவறுவதில்லை."

மகாராஜா:—(பரிகாசப் புன்னகையுடன்) "விக்கிரகங்களை வணங்குவதில் எனக்கு விருப்பமில்லை. என் கதி என்னாகும்?"

சுவாமி:—"என்ன ஏளனம் பண்ணுகிறீரா?"

மகாராஜா:—"இல்லை; மகாசுவாமி! பாமரர்போன்று நான் கல்லையும் மண்ணையும் உலோகத்தையும், வணங்கேன். இது ஓர் அபராதமெனில், இதற்காக மறுமையில் நான் துன்புற நேரிடுமோ?"

சுவாமி:—"நல்லது ; ஒவ்வொருவரும் அவரவரது கொள்கையின்படி நடந்துகொள்க."

விக்கிரகங்களின் எதிரே நின்றுகொண்டு சுவாமிகளே கசிந்துருகி வழிபட்டதைப் பார்த்தவர்கள் சிலர் அச்சபையின்கண் இருந்தனர். அன்னவர்கள் விக்கிராராதனையைக் கண்டிக்க சுவாமிகள் மகாராஜாவுக்கு எப்படி இடந்தாரென்று வியந்தார்கள்.

ஆனால் சிறிது நேரத்துக்குள் சுவாமிகள் நிலைமையை அறவே மாற்றிவிட்டார். அங்கு ஒரு சுவரில் மாட்டப்பெற்றிருந்த படமொன்றைக் கொணரச்செய்தார். உடனே அதன் மீது காரித்துப்பும்படி திவானை ஏவினர். மற்றவர்களையும் அங்ஙனமே தூண்டினர். ஆனால், அவர்கள் எல்லாரும் மருண்டார்கள்; வெருண்டார்கள். "என் ? இது வெறும் கண்ணாடியும் காகிதமும்தானே! இதன் மீது துப்புவதற்கு உங்களுக்கு என்ன ஆட்சேபம்?" என்றார். "அது எங்கள் அரசர்பெருமானது படமல்லவா?" என்று ஒடுங்கிய குரலில் உரைத்தார்கள் சபையோர்கள் அனைவரும். சுவாமிகள் மீண்டும் "அப்புகைப்படமானது மகாராஜா அல்ல என்பது உங்களுக்குத் தெரியும். அவர் போன்ற பிரதிபிம்பம் மாத்திரமே அது. எனினும் அதன்மூலம் அவருக்கு மரியாதை காட்டுகிறீர்கள். அதுபோலவே, கல்லும் மண்ணும் கடவுளாகிவிடமாட்டா. கல்லே, மண்ணே, தாமிரமே என்று யாரும் பிரார்த்திப்பதில்லை. இவ்வஸ்துக்களினால், செய்திருக்கும் விக்கிரகங்கள் அல்லது சின்னங்களின் மூலம் ஏகனாய் எல்லாம் வல்லவனாய், எங்கும் நிறைந்தவனாய் இருக்கும் முழுமுதற் கடவுளையே நினைந்து ஜனங்கள் வணங்குகின்றனர். கடவுளது ஞாபக மூட்டுதற்கே இந்த உருவங்கள் உதவிபுரிகின்றன" என்று விளக்கிக் காட்டினர். இதைச் செவியுற்ற இராஜா "இவ்விஷயத்தில் நான் இது பரியந்தம் அறிவிலியா யிருந்தேன். இப்பொழுது கண் விழித்துக்கொண்டேன்" என்று கைகூப்பி வணங்கி விநயத்துடன் தெரிவித்துக்கொண்டார்.

இதன் பின் சுவாமிகள் கிம்பிடி என்ற சமஸ்தானத்துக்குச் சென்றார். சஞ்சாரத்தில் களைத்துப்போய், அவ்வூர்போய்ச் சேர்ந்ததும், சந்யாசிகள் வசிக்குமிடம் அங்கு இருப்பதாகக் கேள்வியுற்று அங்கே சென்றார். அது ஒரு தன்னந்தனியான வீடு. அதில் வசித்திருந்த சாதுக்கள் சிலர் எத்தனை நாள் வேணுமானாலும் அங்கு அமர்ந்திருக்கலாமென்று கூறி அன்புடன் இவரை வரவேற்றனர். அவர்களுடைய ஒழுக்கத்தைப் பற்றி சுவாமிகள் முதலில் கவனிக்கவில்லை. ஆனால், அவர்கள் பில்லிச் சூனியக்காரர்கள். குரூரமான முறையில் மக்களை பலிகொடுத்தும், அருவருப்பான நீசத் தொழில்கள் புரிந்தும், துஷ்ட தேவதைகளை வசப்படுத்துவது அவர்களது நோக்கம். அத்

தகையவர்கள் பக்கத்து அறையில் பூசைபோடுவது சுவாமிகள் காதில் விழுந்தது. தீங்கு ஏதாவது நேரிடுமோ என்றெண்ணி அவர் வெளியேகப் பார்த்தார். ஆனால் அந்தோ! வெளிக்கதவைப் பூட்டி வைத்துக்கொண்டு அவர்கள் காவலிருந்தார்கள். விபரீதக் கொள்கையும் கொடூரச் செயலும் உடைய ஒரு பாலார் தேவாராதனையின் பெயரால், நீசத்தொழில் செய்வது கண்டு, இவர்களால் தமக்குக் கெடுதியும், ஆபத்தும் நேரிடப்போகிற தென்று பயந்தார்; எனினும் கடவுளை நினைத்து சும்மா இருந்தார்.

இது இப்படியிருக்க, நமது சுவாமிகளைக் கண்டு தரிசிக்க ஒரு பையன் இடையிடையே அங்குவந்துகொண் டிருந்தான். அவனைப் பற்றி சூனியக்காரர் யாருக்கும் சந்தேகம் ஒன்றும் தோன்றவில்லை. மறுநாட் காலையில் அவனைக் கண்டதும், திடீரென்று யோசனை ஒன்று சுவாமிகள் மனதில் ஏற்பட்டது. தமது அறையிற் கிடந்த ஒரு ஓட்டின் மீது "நான் அபாயத்தில் அகப்பட்டுக்கொண் டிருக்கிறேன். இதை இவ்வூர் மகாராஜாவிடம் கொடு" என்று அப்பையன் காதில் ஓதி ஓட்டைக் கையிற் கொடுத்தார். அவனும் அதை வேஷ்டிக்குள் மறைத்துக்கொண்டு வெளியே போய்விட்டான். ஒரு மணி நேரத்துக்குள் சிப்பாய்த் திரள் ஒன்று அங்கு வந்துவிட்டது. சுவாமிகளும் அப்பாதகர்கள் கையினின்று மீண்டார். அச்சிறுவன் செய்த உதவியைச் சுவாமிகள் என்றும் மறக்கவில்லை.

லிம்படி மகாராஜாவின் அரண்மனையைச் சார்ந்த பண்டிதர்கள் சிலருடன் சுவாமிகள் சொற்பநாள் அமர்ந்திருந்தார். இப்படி இராஜாக்களுடன் அவர் நெருங்கிப் பழகினது தமது பேருக்கும் புகழுக்கும் அல்ல. சமுதாயத்தில் பொறுப்பு மிகப் படைத்திருந்த அன்னவர்களைச் சீர்திருத்திவிட்டால், அவர்களின் மூலம் ஆயிரக்கணக்கான பிரஜைகள் நன்மையடைவார்கள் என்பதே அவரது நோக்கம். கல்வி, பொருளாதாரம், கைத்தொழில், விவசாயம் முதலிய துறைகளில் என்னென்ன அபிவிருத்திகள் செய்யவேண்டுமென்று அரசர்களுக்கும், மந்திரிப் பிரதானிகளுக்கும், திவான்களுக்கும் சுவாமி போதிப்பார்.

மகாபண்டிதரெனவும், தேசாபிமானி யெனவும் நாடெங்கும் பிரசித்தி பெற்ற பாலகங்காதர திலகருடன் பத்துநாள் பூனாவில் அமர்ந்திருந்தார் நம் சுவாமிகள். நான்கு வேதங்களையும் கசடறக் கற்றவர் திலகர் பெருமான். ஆதலால் சுவாமிகளும், அவரும் வைதிக வாழ்வே, இந்தியாவின் சிறந்த நாகரீகம் என்றும், அதை ஆதாரமாகக் கொண்டுதான் புதிய முறையில் இந்தியா புத்துயிர்பெற்று எழுந்திருக்கவேண்டும் என்றும் அளவளாவி உரையாடினர். "சதா ஔஷதம் சாப்பிடும் பழக்கத்துக்கு யாரும் ஆளாய்விடலாகாது. மனந்தான் அநேக வியாதிகளுக்குக் காரணம். ஆதலால் மனம் உற்சாகத்துடனும், மகிழ்ச்சியுடனும், தூய்மை பொருந்தியும் இருந்தால், நோய்கள் பல எளிதில் தவிர்க்கப்படும். அத்துடன் தேகத்தைத் தளர்வுறச் செய்யும் இன்பம் எதிலும், மனிதன் ஈடுபடலாகாது. இரண்டாவது நல்லவனுக்குத்தான் உலகம் நல்லதாகத் தோன்றும். பிறர்மீது குறைகூறாது எல்லார்க்கும் அன்பனாய் நடப்பவனிடத்து, மற்றவர்களும் அன்பாய் நடந்துகொள்வார்கள்" என்று அவர் பெல்காமில் உள்ள ஜனங்களுக்கு உபதேசஞ் செய்தார்.

பம்பாய் ராஜதானியில் சஞ்சரித்துக்கொண்டிருந்தபோது சுவாமிகள் அநேக மகாராஜாக்களைச் சந்திக்க நேரிட்டதெனினும், அவர் அப்பிரதேசங்களில் உண்ண உணவில்லாது கழித்த நாட்களும் பலவுண்டு. ஒரு முறை அவர் முதுவேனிற் காலத்தில் ரயில் வண்டியில் நெடும் பிரயாணம் செய்ய நேர்ந்தது. அப்பொழுது எந்த ஸ்டேஷனிலும் விலை கொடுத்தாலொழிய குடிப்பதற்கும் ஜலம் கிடைக்காது போய்விட்டது. சுவாமிகளோ கையிற் பணம் வைத்துக்கொள்வதில்லை. ஆதலால் ஒருநாள் முழுவதும் ஜலபானங் கூட இல்லாது அவர் வண்டியிற்போய்க் கொண்டிருந்தார். அவருடன் பிரயாணம் செய்த வணிகன் ஒருவன் அவரைப் பரிகாசம் பண்ணிக்கொண்டே போனான். ஏனென்றால், பணம் சம்பாதியாத சோம்பேறியைக் காண அவனுக்குப் பிடிக்கவில்லை. மறுநாள் உச்சி வேளையில் ஒரு சந்திப்பு ஸ்டேஷனில் ரயில் வண்டி மாற்றுதற்காகத் தங்கும் மண்டபமொன்றில் பிரயாணிகள் காத்திருக்கவேண்டியதாயிற்று. ஏதோ கொஞ்சம் இனம் கொடுத்தவர்களை மட்டும், காவற்காரன் மண்டபத்தினுள் உட்காரவிட்டான். ஆதலால், ஸ்வாமிகள் மண்டபத்துக்குள் பிரவேசிக்கவும் முடியவில்லை. வேஷ்டி ஒன்றை நனைத்து அதைச் சுடுமணலின்மேல் விரித்து ஒரு கம்பத்தின்மீது சாய்ந்து கொண்டு கொடிய வெயிலில், அவர் உட்கார்ந்திருந்தார்.

அவர் எதிரே மண்டபத்துள் அமர்ந்திருந்த வணிகனுக்கு இதெல்லாம் வேடிக்கையா யிருந்தது. "சன்யாசியாரே பாரும்! நான் கஷ்டப்பட்டுப் பணம் சம்பாதிக்கிறேன். ஆதலால் நிழலிலே வீற்றிருந்து பூரி, லட்டு முதலிய பக்ஷணங்கள் புசிக்கிறேன். நீர் உலகைத் துறந்த பெரியோர் அல்லவா? ஆதலால் உலர்ந்த தொண்டையும், ஒடுங்கிய வயிறும் தாங்கி வெயிலில் புழுங்கிக் கிடப்பதுதான் உமது கதி!" என்று பரிகசித்தான். சினம் ஊட்டும் இந்நிலையிலும், சுவாமிகளது முகத்துக்கு அணிகலமாக இலங்கிய சாந்தம் சிறிதும் மாறவில்லை.

அப்போது அவ்வூரைச் சார்ந்த மனிதன் ஒருவன் வலது கரத்திலே பெரியதொரு பொட்டணமும், ஒரு லோட்டாவும், இடது கரத்தில் ஆசனமொன்றும், மண் கூஜாவில் குளிர் ஜலமும்பற்றி எடுத்துக்கொண்டு அங்கு வந்து சேர்ந்தான். ஓரிடத்தில், அவசரத்துடன் ஆசனத்தைப் பரப்பி அதன் மீது தான் கொணர்ந்த பண்டங்களை வைத்துவிட்டு "போஜனம் பண்ண எழுந்தருளும் சுவாமி!" என்று பசித்திருந்த சுவாமிகளை வணங்கினன். சுவாமிகள் "நான் உன்னை முன் பின் அறியேன். நீ தேடுபவர் நானென்று தவறாய் எண்ணுகிறாய்போலும்" என்றார். "இல்லை; இல்லை, எனக்குக் காண்பிக்கப்பட்டவர் நீர்தான். தயவுகூர்ந்து விரைவில் உணவேற்க வாருங்கள்" என்று பணிவுடன் திரும்பவும் அழைத்தான் அப்புதிய மனிதன். "நீ என்னை எங்கு காணலுற்றாய்? விவரம் சொல்லுக?" என்று சுவாமிகளும் மிக வியந்து வினவினர்.

அதற்கு அம்மனிதன், "அடிகாள்! நான் இவ்வூரிலுள்ள ஒரு மிட்டாய்க் கடைக்காரன். இன்று நான் போஜனம பண்ணியதும் சிறிது கண்ணுறங்கலாமென்று படுத்தேன். அப்போது ஸ்ரீராமபிரான் என் கனவிற் றோன்றி, தங்களை நன்றாகக் குறிப்பிட்டுக் காட்டி, "என் பக்தன் இரண்டு நாளாய் உண்ண உணவின்றி வருவதைக் காண நான் ஆற்றகிலேன். பூரியும் கறியும் சமைத்து

மிட்டாய் வகைகள், குளிர்ந்த ஜலம், அமர்ந்திருக்க ஆசனம் இவைகளை எடுத்துக்கொண்டு ஸ்டேஷனுக்கு ஓடிவா" என்றார். விழித்தெழுந்த பேதையேன் இது வெறுங் கனவென்றெண்ணித் திரும்பப்படுத்தேன். ஆனால், எம்பெருமான் என்னை மறுபடியும் தட்டி எழுப்பி, இப்பணியாற்ற ஆக்ஞாபித்தார். அவ்வண்ணமே அடியேனும் விரைந்து வந்துளேன். தூரத்தில் வரும்போதே தங்களை அடையாளங் கண்டு கொண்டேன். பசியால், வாடியிருக்கும் பெரியோய் உண்ண எழுந்தருளும்" என்று கைகூப்பி வேண்டி நின்றான். அதுபடியே சுவாமியும் அமுது பண்ணினார். நிகழ்ந்த யாவையும் வியப்புடன் பார்த்துவந்த வணிகன் தனது அபராதத்தை க்ஷமித்தருளும்படி சுவாமியை வணங்கி வேண்டினான். நிந்தை, ஸ்துதி, மானம், அவமானம் இவை யாவையும் சமமாகப் பார்க்கும் தீர்க்க தரிசியாகிய நம் துறவி வேந்தர் அவனிடம் தாம் வெகுளவில்லை என்று உறுதி கூறினார்.

ஆணவ அகங்காரமுடையவர்களை அதட்டி புத்திபுகட்டவல்ல ஆற்றலும், ஸ்ரீமத் விவேகானந்த சுவாமிகள் மிகப் படைத்திருந்தார். ஒருநாள் பிரபு ஒருவர் ரயிலில் இரண்டாம் வகுப்பு வண்டிக்கு இவருக்குச் சீட்டு வாங்கிக் கொடுத்திருந்தார். பெட்டி படுக்கையின்றி, உணவின்றி, இவர் இரண்டாம் வகுப்பிலே பிரயாணம் பண்ணினது, அவ்வண்டியிலே பிரயாணம் செய்த இரண்டு ஆங்கிலேயர்களுக்கு வியப்பூட்டியது.

---




# 44. நெப்போலியனுடன் நடத்திய மாபெரும் போராட்டம்.

(T. S. ராஜகோபாலன், B. A., L. T.)

பிரஞ்சுப் புரட்சி ஏற்பட்ட பொழுது, ஆரம்பத்தில் அவ் வியக்கத்தில் அனுதாபம் இருந்ததும், பிறகு அமிதவாதிகள் அதிக்கிரமித்து அதிக்ரூரமான செய்கைகளைச் செய்ததன் காரணமாக ஆங்கிலேயருக்கு அருவருப்பு ஏற்பட்டதுமாகிய விபரத்தை நேயர்கள் உணர்வர். "அமிதவாதிகளின் அடாத கொடுமைகளினால் ஏழைகளுக்கு அன்னவஸ்திரம் ஏற்பட்டது" என்ற அறிவு வந்து நிதானஸ்தர்கள் நிர்வாகத்திற்கு வந்து, நிர்மாண வேலைத் திட்டங்களினால் நிம்மதியான நிலைமை ஏற்பட்ட போது பாமர ஜனங்களின் சந்தோஷம் மிகுந்தது. தேசீயப் படைகள் நிர்மாணிக்கப்பட்டன. ஆக்க வேலைகள் ஆரம்பமாயின. தேசம் தங்களுடையதென்ற உணர்ச்சி ஏற்பட்டது. அப்போதுதான் அயல்நாட்டு பாமர மக்களின் பான்மை கெட்ட நிலையைத் தீர்த்து வைப்பதற்குத் தயாராக இருந்ததாகப் பிரகடனஞ் செய்தனர். அப்படிச் செய்ததானது ஐரோப்பிய வல்லரசுகளையே அறைகூவி யழைத்தது போலாயிற்று. அதிலும் இறந்த அரசி மேரி அண்டாயினெட் ஆஸ்திரிய இளவரசியானது பற்றி அவளுடைய மரணத்திற்காக வஞ்சம் தீர்த்து விட விரும்பியதாக ஆஸ்திரியர் சொல்லிக் கிளம்பிய போது, பிரஞ்சுக்காரருடைய உணர்ச்சி வீறுகொண் டெழுந்தது. ஆஸ்திரியர்கள். தோற்றார்கள் என்றபோது பிரஞ்சுக்காரருடைய சந்தோஷம் மிகுதியாயிற்று. இந்த நிலையில் புரட்சிக்கு எதிரான சேர்க்கை யுடன்படிக்கைகள் ஏற்பட்ட போது தேசத்தின் கௌரவத்திற்கே ஹானி வந்ததென்ற உணர்ச்சி ஏற்பட்டது சகஜமேயாகி, அந்த உணர்ச்சி ஊக்கமுள்ளதாக அமைந்து, உருவகப்பட்டு உருப்படியான திட்டங்களுக்கு வழி காட்டிய பெருமை நெப்போலியனுக்கு உரித்தானதென்று சரித்திரங்கள் கூறும். உண்மையில் ஒரு அவதார புருஷன். உலக சரித்திரத்தில் ஏற்பட்ட ஒரு பெரிய மேதாவி. கலங்காத நெஞ்சுடைய தீரன். சமயோசித புத்தியுள்ளவன். சோம்பலென்ற பேச்சே அறியாதவன். 'முடியாது'' என்ற பதம் "மூடர்களின அகராதிகளிலுள்ள பதம்" என்று இடித்துரைப்பவன். நினைத்த காரியத்தை சாதிக்கவல்லவன். உழைப்பாளி. இம் மேதாவியின் சரித்திரத்தை அப்பட் (Abbot) என்ற அறிவாளி ஆயிரம்பக்கங்களுக்கு மேற்பட்ட ஒரு புத்தகம் எழுதி யிருக்கிறார் என்றால் இந்தக் கட்டுரைகளின் போக்கில் எவ்வளவு தூரம் அடக்கி எழுத முடியும்?

முந்தின கட்டுரையில் குறிப்பிட்டபடி ஆஸ்திரியர்களை இத்தாலியினின்றும் விரட்ட உத்தேசங் கொண்டு, திட்டம் வகுத்து சேனை நடத்த முன்னணி

வேலைக்கு எஞ்சினியர்களை அனுப்பினாராம். அவர்கள் திரும்பி வந்து "இந்த காரியம் அசாத்தியமானது" என்றார்களாம். அப்போது தான், மேல் பாரா வில் கண்ட மாதிரியான அர்த்தம் தொனிக்க, "Is it impossible or impassable ?" என்று இடித் துரைத்துத் திருப்பியடித்து வேலை செய்யச் சொன்னது மட்டுமல்லாமல், தானும் கூட இருந்து, உழைப்பவர்களுக்கு ஊக்கமளித்து, வேலை செய்து வெற்றியும் பெற்றார். குதிரையின் மீதே வாரக் கணக்காக, காலங்கழித்து, அந்த சவாரி நிலையிலேயே, உண்பது, இளைப்பாறுவது, உறங்குவது நிர்வாகப் போக்கின் பல இலாகாக்களையும் கவனித்து அப்போதைக் கப்போது உத்தரவுகள் போடுவது போன்ற காரியங்களைச் செய்து வந்தார். குறிப்பிட்ட மணிக் கணக்கில் உறங்க ஆரம்பித்து, அந்தப்படி கணக்காகவே உறக்கத்திலிருந்து விழித்து விடுவாராம்! எவ்வளவு ஆபத்தான நிலையிலும் கலங்காத நெஞ்சினராகி, சமயோஜித புத்தியை இழப்பதில்லையாம். இதற்கு உதாரணமாக சென்ற கட்டுரையில குறிப்பிட்ட நைல் நதி முகத் துவாரச் சண்டையைச் சொல்லலாம். தோற்றது தான் தாமதம். துரிதமாக பிரான்ஸுக்கு மாயமாகத் திரும்பி வீரர்களை ஊக்கி ஆஸ்திரியாவை இரண்டாம் முறையாகத் தோற்கடித்து நசுக்கினார். கார்ஸிகா என்ற தீவில் பிறந்து, கல்வி கற்று, காளைப் பருவத்திலேயே தலைவராகக் கூடிய அம்சங்களைக் காட்டி பணிவும் உழைப்பும் காட்டி, சேனையில் சிறிய உத்யோகத்தில் முதலிலமர்ந்து, தம்முடைய அபாரமான சக்திகளைச் சந்தர்ப்பத்திற் கேற்ப அளவுடன் காட்டி, படிப்படியாய் பதவிகளில் உயர்ந்தும், முடிவில் சேனாதிபதியாகவும் வந்து, தேச நிர்வாகத்தில் பிரதான புருஷர் இருவரில் ஒருவராகி, நிர்வாகத் திறமையினால் அவ் விருவரிலும் முதல்வராகி, தேசத்தின் கீர்த்தி பூராவுக்கும் தாமே பொறுப்பாளியாகிய அந்த நிலைமையில்தான் இங்கிலாந்தும், தன் தேசமும் சளைத்திருந்த சந்தர்ப்பமான 1802-ம் வருஷத்தில் அமீன்ஸ் சமாதானம் செய்து கொண்ட விபரம் முந்தின கட்டுரை விஷயம்.

யுத்த வெறி பிடித்தவர்களுக்கு சண்டை காலமும் சமாதான காலமும் ஒரே கணக்காகத் தான் இருப்பது அனுபவ பூர்வமானது. அந்தப் போக்கில் அமீன்ஸ் சமாதான ஷரத்துகளை ஆங்கிலேயா மீறினார்கள் என்பது பிரஞ்சுக்காரரின் கக்ஷி. பிரஞ்சுக்காரர்கள் மீறினார்கள் என்பது ஆங்கிலேயர் கக்ஷி. எப்படியாயினும் யுத்தம் 1803 லேயே ஆரம்பித்து விட்டது. அது வரையில் பிரதான நிர்வாகியும் சர்வாதிகாரியாகவும் இருந்த நெப்போலியன பிரஞ்சுச் சக்கரவர்த்தியாகவும் ஆகி தன்சகோதரர்கள் ஹாலந்திலும் இத்தாலியிலும் அரசுசெலுத்திய நிலைமையி லிருந்தார். மால்டா தீவைக் காலி செய்வது என்ற அம்சததில தகராறு ஏற்பட்டது யுத்தம் மீளுவதற்கு ஒரு நெருப்புப்பொறி காரணம். இதே சமயத்தில் ஐயர்லந்து பிரச்னையில் அதிருப்தி பட்ட பிட் ராஜீனாமாச் செயது, மீண்டும் நெப்போலியன் கிளைத்த காரணத்தினால் தேசத்தைக காப்பாற்றும் பொருட்டு நிர்வாகத்தை மேற்போட்டுக்கொண்டு முன்னணிக்கு வந்தார் என்று குறிப்பிடத்தக்கது. 1803 முதல் 1815 வரையில் நெப்போலியனுடன் உயிர்ப் போராட்டமாக ஏற்பட்டுத் திணறி, சேர்க்கைகள் ஏற்படுவதும் நெப்போலியனால் சிதறி பிடிக்கப்படுவதும், இங்கிலாந்து மட்டும் மூண்டி நிற்பதும் என்ற பழையபாடம் ஆரம்பித்து நடந்தது சரித்திரம் ஆகும்.

யுத்தப் போக்கை ஆராயும் பொழுது, நெப்போலியன் தம்முடைய துராகிருதமான அதிகாரத்தை இதர ஐரோப்பிய தேசங்களின்மீது செலுத்த

முயன்று ஐரோப்பிய அதிகாரச் சம நிலையை (Balance of power-உல்லி காலத்திய விசேஷம் என்பதை நேயர்கள் ஞாபக மூட்டிக் கொள்வதவசியம்) ப் பாதிக்க முயன்றார். முயற்சியில் வெற்றியும் பெற்றார். ஏனெனில் அந்தந்த தேசங்களி லிருந்த பொது ஜனங்கள், பிரஞ்சுக்காரர் நிலமான்ய முறையின்படி ஸ்தாபிக்கப்பட்ட யதேச்சாதிகாரத்தை தகர்த்து விட்டது போல, தாங்களும் செய்து விடலாம் என்ற நம்பிக்கையில் நெப்போலியனை ஆதரித்தது போன்ற உணர்ச்சியைக் காட்டினார்கள். உதாரணமாக இத்தாலியர் ஆஸ்திரியரின் யதேச்சாதிகாரத்திலிருந்து விடுதலை பெற்றதாக நினைத்தனர். அதே மாதிரி பெல்ஜியம் என்ற தேசமும் ஹாலந்து தேசமும் பரஸ்பரம் தனியாயிருக்க விரும்பின. இரண்டும் ஜெர்மனியர் ஆஸ்திரியர்களிட மிருந்து விடுதலை பெற விரும்பின. அந்த மாதிரி ஏற்படும் போது இங்கிலாந்துக்கு உபத்திரவமாகத் தோன்றியதுடன், வல்லரசு செலுத்தி பெரிய ஏகாதிபத்ய சாம்ராஜ்யத்தை ஆண்டனுபவித்த ஆஸ்திரியாவும் நெப்போலியனை வெறுத்தது சகஜமேயாகும். வெறுப் பிருந்தாலும் நெப்போலியனுடைய தெய்வீக ஆற்றலுக் கெதிராக தலை தூக்க முடியவில்லை. தூக்கினால் மண்டையில் விழுவது போல் 'மட்' என்று நெப்போலியனுடைய இரும்புக் கையடியும் தோல்வியும் நிதர்சனம். நிதர்சனம் ஆகும்போது சரணாகதியும் கூட வருவது ஆயிற்று. இங்கிலந்து ஒவ்வொரு சரணா கதி நிலையின் போதும் ஒரு சரியான கடற் சண்டை வெற்றியினால் தன் நிலைமையை சமாளித்துக் கொள்ளும். அவ் வெற்றி, நிலச்சண்டை யாவற்றிலும் சந்தேகமின்றி மகத்தான வெற்றி பெற்ற நெப்போலியனையும் கலக்கி, முன்பு குறிப்பிடப்பட்டது போன்று. "Throw a bridge over the Strait of Dover! To-rmorrow England will be ours!" என்று கர்ஜிக்கச் செய்தது. ஆனால் இங்கிலாந்து இம்மாதிரியான வெற்றியினால் கண்ட பலன், கடன் சுமையும் மனக் கலக்கமும் அல்லலும், அவதிப்பாடுமே யாகும். "உயிரை மட்டும் வைத்து உடலைச் சித்திரவதை செய்வது" போன்ற நிலைமைதான் என்பது மிகையாகாது.

ஏககாலத்தில் இந்தியாவில் ஏற்பட்ட கொள்ளைப்பு முறையை, வெல்லெஸ்லி பிரபு ராஜரீகமான முறையில் சுதேச மன்னர்களை தன் வசப்படுத்திக் கொண்டார். அவர் தம்பி ஸர் ஆர்தர் வெல்லெஸ்லி அச்சமயத்தில் "போரில் காலனு மஞ்சக் கலக்கும் மராட்டியர்களை" யுத்த முனையில் வென்று நிலைமையை சரிசெய்தார். இங்கிலாந்திலும் சிறிய பிட் தேசாபிமானமுள்ள இளைஞர்களைத் தட்டி எழுப்பி சாரணர் படையாகத் திரட்டி போர்முனைக்கு அனுப்பினார். ஆனால் நெப்போலியனோ ஸ்பெயின், ஹாலந்து, பெல்ஜியம், ஆஸ்திரியா, ஜெர்மனி, இத்தாலி முதலிய தேசங்களில் தன் வாக்குக்கு மறு வாக்கில்லாமல், தன் விரலாட்டத்திலேயே தம்மிஷ்டப்படி யாட்டும் நிலைமையை ஸ்தாபித்து 1805ல் ஸ்பெயினை வற்புறுத்தி பெரிய கப்பல் படையைத் திரட்டச் செய்து, தம் தேசக் கப்பல் படையையும் பலப்படுத்தி இரண்டையும் ஒன்றுகூட ஏற்பாடு செய்து அப்படியே இங்கிலாந்தை கபளீகரம் செய்துவிட மஹத்தான ஏற்பாட்டைச் செய்து, இங்கிலாந்து வாசிகளை இராத் தூக்கமோ, நிம்மதி நிலையோ இல்லாமல் விரட்டி வந்தார். . பிரஞ்சு கப்பல் படைத்தலைவன் வில்லினூ (Villeneuve) வெனபவனுக்குக் கடுமையான உத்தரவு நெப்போலியன் இட்டிருந்தார். அவனும் ஆங்கிலேயரை ஏமாற்ற எண்ணினான். ஏனெனில் ஆங்கிலேயர் கப்பல் படைத்தலைவர்

நெல்ஸன் ஸ்பெயின் படையையும் பிரஞ்சு படையையும் ஒன்று சேர வொட்டாமல் தடுக்க, ஸ்பெயினுக் கருகேயே போய்த் தயாராகிவிட்டார். ஸ்பெயின் கப்பல் படையை ஆங்கிலேயர் தடுக்கா வண்ணம், வில்லினூ, மெதுவாக அமெரிக்காவிலுள்ள மேற்கிந்தியத் தீவுகளைப் பிடிக்கச் செல்வது போன்று பாசாங்கு செய்தான். நெல்ஸனும் நம்பி, பின்னே கப்பல் படையை நடத்தித் துரத்தியவர், தெய்வாதீனமாய் திரும்பி, ட்ரபால்கார் முனை (Trafalgar)க்கு எதிரே இரண்டு படைகளையும் தனித்தனியே தோற்கடித்து சிதறடித்தார். இந்தக் கடல் சண்டையிற் தான் "England expects every man to do his duty" ஆங்கிலேயன் ஒவ்வொருவனும் தன் கடமைகளை தளராதும், தவறாதும் செய்வானென்று தேசம் எதிர் பார்க்கிறது. என்ற புகழ்பெற்ற உத்தரவைப் போட்டாராம்! யுத்தமும் முடிந்தது! பிரான்ஸூம் தோற்றது!! நெல்சனும் வெற்றி தருவாயில் குண்டுபட்டு உயிர் துறந்தார்!!! (வெற்றி யடைந்து விட்டோம் என்ற பிரக்ஞையுடன் இறந்தாராம்.) இந்த வெற்றி சரித்திரத்தில் மிகப் பெரிய வெற்றி யென்பதற்கு Trafalgar Square (லண்டன்) என்ற வெளியிடமும், அதிலுள்ள நெல்சனின் உருவச்சிலையும் சான்றாகும். வருஷா வருஷம் இந்த ட்ராபால்கார் வெளியில், நெல்சன் சிலைக்கு முன்னால் ட்ராபால்கார் தினம் கொண்டாடப் படுகிறது இன்றளவும் மாமூலாக இருக்கிறது!

நெப்போலியனுடைய கடைசி மஹத்தான முயற்சியும் சிதறுண்டு போயது. ஆஸ்திரியா முதலிய தேசங்கள் இங்கிலாந்துடன் மூன்றாவது சேர்க்கை யுடன்படிக்கை, உடனே 1805–ல் செய்து கொண்டன. அதுதான் தாமதம் நெப்போலியன் தன் படையை ஆஸ்திரியா பக்கம் திருப்பி, ஆஸ்டர்லிட்ஸ் (Austerlitz) என்ற இடத்தில் 1805-ல், ஆஸ்திரியப் படைகளை யைப்புடைத்து, தாக்கி, சவட்டிப் பிழிந்து நெப்போலியன் என்றாலே கதிகலங்கும்படி யடித்து, கௌரவம் என்பதே லவலேசமும் இல்லாத சர்வ கேவலமான ஒரு உடன்படிக்கைக்கு, ப்ரெஸ்பர்க் என்ற விடத்தில் இணங்கும்படி நசுக்கி விட்டார்! உடனே தம்மைச் சுழற்றித் தம் இனத்தாரையும் சுற்றத்தாரையும் அரசர்களாக்கி தம்மை யசைக்க முடியாதபடி செய்துகொண்டார். ஆஸ்திரியா தலைதூக்கவே தூக்காத நிலைமைக்கு ஆகிவிட்டது! (பாவம் எவ்வளவு முறை தோல்வி!) இத்தாலியில் தன் நேர் அரசு செலுத்தினான். நேப்பிள்ஸ் ராஜ்யத்திலிருந்து பழைய பிரான்ஞ்சு சந்ததியரசை விரட்டி தன் சகோதரன் ஜோஸப் என்பவனை அரசனாக்கினார். வடக்கே, ஹாலந்துக்கு ஒரு தம்பி அரசனானான். ஜெர்மனி பிரதேசத்திற்கு மற்றொரு தம்பி அரசனானான். இந்தக் கடுமையான நிலைமைக்கு வழி யேற்படுத்திய ஆஸ்டர்லிட்ஸ சண்டை தோல்வியானது, பிட்டை மனதுடைந்து மாளும்படி செய்துவிட்டது என்பது, "Austerlitz killed Pitt (ஆஸ்டர்லிட்ஸ் பிட்டைக் கொன்றது)" என்ற சொல்லினால் வெளியாகும்.

அடுத்து 1806-ல் ப்ரஷ்ஷியா அரசன் நெப்போலியனை எதிர்த்ததில் நெப்போலியன் சடுதியில் சென்று ஜீனு "Jena" என்ற விடத்தில் வெற்றி பெற்று, அந்த தேசத்திய தலைநகரான பெர்லினில் (Berlin) நுழைந்துவிட்டான். அதே சந்தர்ப்பத்தில் சதியாலோசனை செய்து கிளம்பிய ரஷ்ஷியா அரசன் ட்ஸார் அலெக்ஸாண்டர் (Tsar Alexander) என்பவனையும் ப்ரீட்லண்ட் (Friedland) என்ற விடத்தில் வென்று அடக்கி, அவனையும்

Tilsit (டில்ஸிட்) என்ற விடத்தில் சமாதானம் செய்து கொள்ளும்படி யடித்தார். ஆக ஒருவிதத்தில் ஐரோப்பா பூராவும் நெப்போலியனுடைய ஒரு குடைக்கீழ் வந்தேவிட்டது! ஏக சக்ராதிபதி நிலைமை உச்சஸ்தானத்தை யடைந்து விட்டது. நெப்போலியனை எதிர்ப்பாரோ, ஒப்பாரோ, மிக்காரோ அப்போது இலர்!

இந்த உன்னத நிலையில், தோன்றியது ஒரு அபூர்வயுக்தி சர்வாதிகாரி நெப்போலியனுக்கு! "இங்கிலாந்துக்கு உயிர் நாடி போன்றது வியாபாரம். அந்த வியாபாரத்தைப் படுக்க வைத்துவிட்டால் இங்கிலாந்தின் ஆட்டமெல்லாம் ஒய்ந்து செத்து வீழ்ந்துவிடும். அப்படி வீழ்ந்து விட்டால் தன்னிடம் சுலபமாக சரணாகதியடைந்து விடும்" என்பதே அந்த யுக்தி. அப்படிச் செய்து விடுவதற்கு இடம், பொருள், ஏவல் எல்லாம் தனக்குண்டு என்று எண்ணி விட்டார். உடனே போட்டார் ஒரு உத்தரவு பெர்லின் நகரிலிருந்து! அதற்கு சரித்திரத்தில் "புகழ்பெற்ற பெர்லின் உத்தரவு" (The famous Berlin Degree" என்பது பெயர்.) அந்த உத்திரவின்படி, நெப்போலியனுக்கு அடங்கின தேசங்களோ, நேச தேசங்களோ இங்கிலாந்தின் கப்பல்களில் வரும் சாமான்களையோ, இங்கிலாந்தின் சொந்த சாமான்களையோ நாட்டிற்குள் வரவிடலாகாது. வாங்கவும் கூடாது. வாங்கினதாகவோ வரவிட்டதாகவோ தெரிந்தால் அல்லது சந்தேகம் ஏற்பட்டாலும் கடுமையான தண்டனைக்குள்பட வேண்டும் என்று திட்டம் செய்யப்பட்டு, கடுமையாகவும் அமுலுக்கு கொண்டு வரப்பட்டது. ஆனால் இங்கிலாந்து நிர்வாகிகளோ என்றால் இதில் அச்சங்கொண்டார்க ளில்லை. சமயோஜிதமான புத்தியை விடாதவர்களாய் அவர்களும், "சபை யுத்தரவுகள்" (Orders in council) என்ற உத்தரவைப் போட்டு தங்கள் தேசத்திய வியாபாரப்பொருள்களோ, வியாபாரக் கப்பல்களோ எந்தவித முகாந்திரத்தைக் கொண்டும் நெபோலியனுடைய ஆதிக்கத்திற் குட்பட்ட எந்த பிரதேசத்திற்கும் போகக்கூடாது என்று அதே 1806-ம் வருஷத்தில் செய்து விட்டார்கள். ஏனெனில், அந்த ஜனங்களுக்கு இங்கிலாந்து சாமான்களும், இங்கிலாந்து கப்பலில் வரும் சாமான்கள் அத்தியாவசியம் என்பதை ஆங்கிலேயர் நன்குணர்ந்திருந்தனர். அந்தக் காரணத்தில் நெப்போலியன் திட்டப்படுத்திய "கண்டத்து முறை" (The Continental System) யும், அதை ஏற்படுத்திய பெர்லின் உத்தரவும் நிலைத்து நிற்கமாட்டா என்று திடங்கொண்டு, மனஞ் சளைக்காமல் மறு உத்தரவு போட்டு விட்டனர். எதிர்பார்த்தபடியே அதிக காலம் அந்த நிலைமையை நெப்போலியன் நிலைக்கச் செய்ய முடியவில்லை.

முக்கியமாக போர்ச்சுகல் தேசத்திற்கும் இங்கிலாந்திற்கும் நடந்து வந்த சாராய வியாபாரம் நிற்கவில்லை. நேப்பிள்ஸ ஸிஸிலி போன்ற அடங்கிய தேசங்கள் நெப்போலியனுடைய நிர்ணயத்தை திருட்டுத்தனமாய் மீற ஆரம்பித்துவிட்டன. கண்டு பிடிக்கப்பட்ட போது கடுமையாகத் தண்டிக்கவும் பட்டன. இதே முறைகள் பல பாகங்களிலும் கையாளப்பட்டு திருட்டு வியாபாரம் பலப்பட ஆரம்பித்துவிட்டது. அதைத்தான் ஆங்கிலேயரும் ஆவலுடன் எதிர்பார்த்திருந்தனர் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? ஆகக் கூடிய பலன் போர்ச்சுகல் தேசத்தினர் பஹிரங்கமாகவே "கண்டத்து முறை"யை மீறலாயினர். கொடுங்கோன்மைக் குள்பட்டவர்களை ரக்ஷிக்கும் தோரணையில் ஆங்கிலேயரும் அனுசரணை செய்தனர். இதே சமயத்தில் நெப்போ

# "சேக்கிழார் உவமை மாண்பு"

——:(o):——

(வே. கணேசன்.)

பொதுவாக எல்லா ஆசிரியர்களும், தாங்களியற்ற வெடுத்துக் கொண்ட நூலிற்கு, முதலில் கடவுள் வாழ்த்து, பின் பாயிரம், அதன் பிறகு நாட்டுச் சிறப்பு, நகரச் சிறப்பு முதலியன கூறியே நூலின் கருத்தைத் துவக்குவது மரபு. ஆசிரியர்களின் கல்வித்திற மனைத்தையும் சிறப்புக்கள் கூறுமிடத்திலேயே காட்டுவார்கள். அவர்களது உவமையின் மாண்பும் ஆண்டே பயில்வோரைப் பரவச முறச்செய்யும் பான்மைத்தாய்த் திகழும்.

நமது சேக்கிழார் பிரானும் ஏனைய வாசிரியர்களைப்போல் மரபுக்கிணங்க கடவுள் வாழ்த்து, பாயிரம் முதலிய யாவும் முறையே கூறியுள்ளார். அன்னவர் அவரது கவித்திறமையையும், அறிவி னுயர்வையும் இத்தகையதென்று எடுத்துக் காட்டி உலகத்தாருக்கு உலையாவின்ப மளித்திருக்கின்றார்.

நாட்டுச் சிறப்புக் கூறப் போந்த நாயனார், சோழநாட்டி லொழுகிச் செல்லுங் காவிரி நதியை, நான்முகன், கங்கைமாநதி முதலியவற்றிற் கொப்பிட் டுரைத்துக்கொண்டு வருங்கால்,

> "வம்புலா மலர் நீரால் வழிபட்டுச்
> செம்பொன் வார்கரை யெண்ணில் சிவாலயத்
> தெம்பிரானை யிறைஞ்சலி னீர்ம் பொன்னி
> உம்பர் நாயகர்க் கன்பரு மொக்குமால்".

என்று அழகுபெறக் கூறியுள்ளார்.

---

லியன் செய்த மற்றொரு காரியமும் அவருடைய சர்வாதிகாரத்திற்கு உலை வைத்ததுபோல் ஆக்கிவிட்டது. போர்ச்சுகல் அரசன் கண்டத்து முறையை எதிர்த்தபோது அவனை நெப்போலியன் விரட்டியடித்து, ராஜ்யத்தைக் கைப்பற்றிக்கொண்டான். ஓடிய போர்ச்சுகல் அரசன் ஸ்பெயினில் அடைக்கலம் புகுந்தான். அங்கிருந்த அரசன் சார்ல்ஸ்IVக்கும் அவன் மகனுக்கும் விரோதமும் மன வேற்றுமையும், போர்ச்சுகல் அரசன் சம்பந்தமாக சச்சரவேற்பட்டு நெப்போலியனிடம் நியாயம் தீர்க்கச் சென்றனர். அவர்களை இருவரையும் ஆளத் தகுதியற்றவர்களாக்கி, சிம்மாசனத்தினின்றும் விலக்கி, தன் சகோதரன் நேப்பிள்ஸ் அரசன் ஜோஸப் என்பவனை ஸ்பெயினுக்கு அரசனாக்கினார். வந்தது கோபம் ஸ்பானியருக்கு! ஆரம்பித்தது யுத்தம். அந்த யுத்தத்திற்கு "தீபகல்ப யுத்தம்" என்பது சரித்திரப்பெயர். இதுவே நெப்போலியனுடைய வீழ்ச்சிக்கு வழி தேடினதென்ற விபரம் அடுத்த கட்டுரையின் விஷயமாகும்.

நதி மிகவும் அழகாக வோடி வருகின்றது. அதனிரு கரைகளிலும் பொற்றுகள்கள் சிந்திக் கிடக்கின்றன. அக்கரைகளி னிருமருங்குஞ் சிவாலயங்களுள. அஃதாவது, இரு கரைகளிலும் சிவாலயங்கள். நடுவில் நதி பாய்கின்றது. அத்தன்மையை எவ்வளவு அழகாகச் சித்திரித்துள்ளார் என்பதை யறிந்து மகிழுங்கள். அந்நதியை யோரடியாருக் கொப்பிட் டுரைத்திருக்கின்றார். ஓடும் நதியிலும் கடவுளின் கவினும் அடியாரின் அகமுங் காணும் கவியின் திறன்தானென்னே! ஒழுகும் ஆறிலும் கடவுளைக் காண்கின்றார் சேக்கிழார். காவிரி நதியை யடியார்களுக்கு ஒப்பிட்டுள்ள தன்மை உள்ளங் கொள்ளா உவகை யளிக்கின்றதன்றோ!

அடியார்க ளெப்பொழுதும் அரனிடத்தில் மாறா அன்பு பூண்டவர்கள். அல்லும் பகலும் அவரை அகமுற வணங்கும் வித்தகர்கள். தங்கள் பொருட்கள் யாவையும் மாலயற்கரிய நாதனுக்கே யளிக்குந் தன்மையர்கள். அஃதேபோல் இக்காவிரியும், ஓடும்பொழுது, தனது இருமருங்குமுள்ள கரைகளில் தனது பொருட்களாகிய செம்பொற் றுகள்களைத் தங்கவிட்டுச் செல்கின்றது. மேலும், என்று மொரு குறைவுமின்றி கோயில்களின் முன்பாகப் பாய்வது, அடியார்கள் இறைவனை யிறைஞ்சுவது போன்றுளது.

அடியார்களின் மனம் எப்பொழுதுங் குளிர்ந்த தன்மையது. அவர்கள் கடவுளி னிருகழல்களை யன்றோ யாண்டும் வணங்கி, மனதிலும் கொண்டிருக்கின்றனர். அரன் கழல் வணங்கு மொருவனுக்கு ஈரநெஞ் சிருப்ப தியல்பே யன்றோ! குளிர்ச்சி பொருந்திய அக்காவிரியின் நீரும் அடியார்களினகத்தைப் போன்றுளது. அதன் பொருட்டே அது குளிர்ந்திருக்கின்றதென்னு முண்மையைக் கூறாமற் கூறியுள்ளார்.

அன்னவரின் சிறப்பு விளங்க இச்செய்யு ளொன்றே போதுமாயினும், இன்னுமொன் றிரண்டு பாக்கள்கூட நோக்கி, அவற்றின் அழகென்னும் நறவை மாந்தி யின்ப மெய்துவாம்.

இந்நதிக்கரையை விடுத்து நாட்டிற்குட் சிறிது சென்று நோக்குவாம். எங்கு நோக்கினும் பச்சைப் பசேலென்று நெற்கதிர்கள் வயல்களெங்கும் நிறைந்து நிற்கின்றன. இடை யிடையே சில சிற்றோடைகள் சல சலவென்னு மோசையுடன், இள மங்கையர் தங்கள் காற் சிலம்பொலிக்க, இடை துவள நடந்து வருவது போன்று அழகாக ஓடுகின்றன. வயல்களி லெங்கும் களைகளையுங் கடைசியர்கள் தங்கள் தங்கள் வேலைகளைச் செய்து நிற்கின்றனர். சிலர் அங்கு மலரா நிற்கும் செங்குவளைப் பூக்களைப் பறித்துத் தங்கள் கருங் குழன்மேற் சூடுகின்றனர். சிலர் தங்கள் திங்கணுதலிற் றோன்றும் முத்துப் போன்ற வியர்வை நீரைத் துடைத்துக் கொள்ளுகின்றனர். இன்னுஞ் சில பெண்கள் ஆண்டுள்ள சமலத்தின் நறவை மாந்தி யின்புறுகின்றனர். ஈண்டு இவ்வண்ண மிருக்க இன்னஞ் சிறிதப்பாற் செல்வாம்.

அங்கு நீண்டதோர் வயல். நெற்கதிர்கள் யாவும் தங்களுக்கு நிகர் யாவையு மில்லையென்று தோன்றுமாறு நன்றாக வளர்ந்து, தடித்துயர்ந்து, அகத்தேயுள்ள வெண்மைக் கருவின் வளமையினால் நன்றாகப் பசந்து, அப் பசப்பு வெளியிற் றோன்ற தாள் விரித்து நிற்கின்றன. அத்தன்மையை நமது சேக்கிழார்,

"சாலிநீள் வயலினோங்கத் தன்னிக ரின்றி மிக்கு
வாலிதாம் வெண்மையுண்மைக் கருவினும் வளத்தவாகிச்
சூன்முதிர் பசலைகொண்டு சுருள்விரித் தரனுக் கன்பர்
ஆலின சிந்தைபோல வலர்ந்தன கதிர்க ளெல்லாம்."

என்று கூறுந் தன்மையை என்னென் றியம்புவாம்!

சுருள் விரித்து நிற்கும் கதிர்களில் அடியாரின் ஆலின சிந்தையைக் காணும் சேக்கிழாரின், அடியாரிடததுள்ள பெரு மதிப்பும், அரனிடத்துள்ள அன்பும் நம்மால் வரைய வியலுமோ? அவர் உவமித்திருக்குந் தன்மை உள்ளத்தைக் கவருகின்ற தன்றோ! இயற்கையி லன்றோ இறைவனைக் காண்கின்றார்.

கதிர்கள் சுருள் விரித்து நிற்குந்தன்மை அடியார்கள் மனம்போலிருக்கிறது. அஃதை, அரனுக் கன்பர் ஆலின சிந்தைபோ லென்று கூறி யிருக்கிறார்.

அடியார்கள் தங்கள் மனதிற் குற்றமென்பதைக் கொள்ளாதவர்கள். அவர்களை காமம், குரோதம், லோபம், மோஹம், மதம், மாற்சரியம் என்னு மூட்பகையாகிய அரககர்கள் அணுகார். எப்பொழுதும் அரனிடத்தில் அகலா வன்பு கொண்டவர்கள். தங்களது உடல், பொருள், ஆவி மூன்றையும் அடியாரின் பொருட்டுச் செலவிடும் தன்மை வாய்ந்தவர்கள். உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசும் மனத்தினரன்று. வாய்மை யல்லாததைக் கனவிலுங் கருதார். அரனடியாரைக் காணின், அவர்கள் முன்னால் தங்கள் திருவனைத்தையு மெடுத்திட்டு, அவர்கள் மனம்போல் அவைகளைப் பயன் படுத்துமாறு வேண்டுவர். பிறருக்குத் தீங்கு செய்யார். இத்தகைய தன்மை யுடையவர்கள் சிந்தை ஆலின சிந்தையென்பதற் கையமு முண்டோ? ஆகையினாலேயே அடியார்களை ஆலின சிந்தையரென்றார்.

அஃதேபோல் கதிர்கள் சுருள்விரித்து நிற்பது "நாங்கள் உள்ளொன்று வைத்துப் புறமொன்று காட்டவில்லை. நாங்கள் தாங்கி நிற்கும் இந்நென்மணிகள் யாவும் மனிதர்களுக்குப் பயனபடும் பொருட்டே யிருக்கின்றன. ஆகையால் யாவரும் வருவீர். இம்மணிகளை யுங்கள் மனம்போற் கொள்வீர்" என்று கூறுவனபோ லிருக்கின்றனவாம்.

இவ்வுவமையைச் சேக்கிழார் எத்தகைய கவினுடன் மொழிந்துள்ளார்! படிக்கப் படிக்கத் தெவிட்டா வின்பமன்றோ நல்குகின்றது!

அவரது புலமையை இன்னுஞ் சிறிது நோக்குவாம்.

சிறிது தூரத்திற்கப்பால் வேறொரு வயல். அங்கு கதிர்கள் தங்கள் சுமை தாங்கவொண்ணாது தலைசாய்ந்து, ஒன்றன்மேலொன்று விழுந்து கிடக்கின்றன. அறுவடைக்குச் சமய மடுத்து விட்டது. அத்தோற்றத்தை,

"பத்தியின் பாலராகிப் பரமனுக் காளாமன்பர்
தத்தமிற் கூடினர்க டலையினால் வணங்குமாபோன்

மொய்த்தநீள் பத்தியின்பான் முதிர்தலை வணங்கிமற்றை
வித்தகர் தன்மைபோல விளைந்தன சாலியெல்லாம்."

என்று பெருமைபடுத்திக் கூறியுள்ளார்.

அடியார்கள் ஒருவரை யொருவர் காணுவார்களாயின் அவர்கள் அடியின் மிசை தமது முடிபட வணங்கி நிற்பார்கள். அஃதேபோல், இக்கதிர்கள் தலை சாய்ந்து ஒன்றன்மேலொன்று விழுந்து கிடப்பது, அடியார்கள் ஒருவரை யொருவர் வணங்குவது போன்றிருக்கின்றதாம்.

சேக்கிழார் கண்ணுறும் பொருள்கள் யாவற்றிலும் அரானி னன்மையும், அடியாரின் பெருமையையு மல்லாது பிரிதொன்றைக் காண்கின்றாரில்லை. அவ் வளவு பெருமைபடுத்திக் கூறும் அடியாரின் தன்மைதான் யாதென்று சிறிது நோக்குவாம்.

"அடியார்" என்னும் பதத்திற்கு "தொண்டு செய்பவர்" என்பது பொருள். தொண்டு செய்தல் என்பது பணிசெய்தல் என்பதாம்.

அவர்கள் மனத்தகத்து மாசில்லாப் பெருந்தகையாளர்கள். பிறருக்குத் தீங்கு நினையா உத்தமர்கள். அரனன்பரைக் காண நேரிடின், நடுநிசியாயினுஞ் சிறிதுந் தயங்காது அவர்களுக்கு வேண்டுவன வியற்றிக் கொடுக்குங் குணத் தினர். உட்பகையென்னு மரகர்களை அணுகவொட்டாது அகலவோட்டு மறி வினர். எப்பொழுதும் அரனது கழல்களையே தங்களது மனமாகிய வில்லத் தில் இருத்திக் கொண்டிருப்பவர்கள்.

இத்தகைய வாழ்ந்த கருத்துக்களை யெல்லாஞ் சேக்கிழார் எத்தகைய கவினுடன் கூறியுள்ளார்! இதன்றோ இன்மொழிப் புலவரி னியல்பு! புதை பொருட்கள் பல புகுத்திக் கவி செய்தலன்றோ கற்றோரின் மாண்பு!





# சாங்கிய தரிசனம்

(திரு. எஸ். ஏ. திருமலைக் கொழுந்துப் பிள்ளை, பி.ஏ.)

## 44-வது, காரிகை

*தர்மேணக்மன மூர்த்வம் கமனம் அதஸ்தாத் பவத்யதர்மேண—*
*ஞ்யானேன் சாபவர்கோ விபர்யயாதிஷ்யதே பந்த,*

*அறத்தால் மேலேறுங் கதி விளைகின்றது; பாவத்தாற் கீழ்நோக்கி விழும் கதி விளைகின்றது. ஞானமாகிய மெய்யுணர்ச்சியால் விடுதலை (முத்தி) கைகூடுகின்றது; அஞ்ஞானமாகிய திரிவுணர்ச்சியால் சிக்கல் (பந்தம்) உண்டாகின்றது.*

## 45-வது, காரிகை

*வைராக்கியாத் பிரகிருதிலய: ஸம்ஸா ரோபவதி ராஜஸாஸ்த் ராகாத்—*

*ஐஸ்வர்யாத விகாதோ விபர்யாயாத் தஹிபர்யாஸ :*

*வைராக்கியத்தால் பிரகிருதி லயங்கிட்டுகின்றது; அவாவால் பிறவிக்கடலில் இலிங்கம் அங்கு மிங்கும் ஓடி அலமரல் நேர்கின்றது. ஐசுவரியத்தால் தடையற்ற போகத்திற் றடை நேர்கின்றது.*

உரை. ஆகவே, எட்டுப்பாவங்கள், எட்டுக்கதிகள் அறம் (தர்மம்)—சொர்க்கலோகப் பிராப்தி; அதர்மம்— நரகலோகப் பிராப்தி; ஞானம்—ஜனன மரணத் தெளிவு; திரிவுணர்ச்சி—பிறப்பு இறப்பின் மயக்கம் நீங்காமை; வைராக்கியம்—இலிங்கம் ஓட்டமின்றிப் பிரகிருதியில் ஒடுங்கித் தூங்குதல்; அவா—பிறவிக்கடலில் திரிந்து அலைதல்; ஐசுவரியம் (சித்தி)—நினைத்த போகம் தடையின்றிக் கூடிவரல்; அனைசுவரியம் (சக்தி)—நினைத்த போகத்திற்கு இடையூறு உண்டாதல்.

அறம் யாதோவெனில் ஆன்மாக்கள் ஈடேறும் வண்ணம் அவன் கோரிய நெறியின் வழி யொழுகலாம்.

"நெறியைப் படைத்தான் நெருஞ்சில் படைத்தான்
நெறியில் வழுவில், நெருஞ்சில் முட்பாயும்
நெறியில் வழுவாது இயங்க வல்லார்க்கு
நெறியில் நெரிஞ்சில் முட்பாய கில்லாவே." (திருமந்திரம்)

அதர்மமாகிய நெறியல்லா நெறிவழிச் செல்லின் மொத்துறுதல் உண்டாகும்.

ஞானம், அஞ்ஞான மென்பவையிவை யென்பதனைப் பின்வரும் அருள் வாக்கான் உணர்க;—

திருவாசகம்

"வைத்தநிதி பெண்டிர் மக்கள்குலம் கல்வியெனும்
பித்தவுலகிற் பிறப் போடிறப்பென்னும்
சித்தவிகாரக் கலக்கம் தெளிவித்த
வித்தகச் செல்வர்க்கே சென்று ஊதாய் கோத்தும்பீ."

வைராக்கியம் என்பது இகபர போகங்களில் ஆசை செல்லாமை. எந்த எந்த ஆசைகளை யெல்லாம் விட்டு ஒருவன் நீங்குகின்றானோ, அந்த அந்த ஆசைகளாற் பின் விளையும் துன்பத்தினின்றும் விடுதலை யடைகின்றான். துன்பநிவர்த்திக்கு ஆசை யறுதல் வழியாகும். அவாவே பிறப்பினும்வித்து.

"ஆசைப் படப்பட ஆய்வருந்துன்பம்
ஆசை விடவிட ஆனந்தமாமே." (திருமந்திரம்)

ஐசுவரியம் என்பது சக்தியைத் தன் வயப்படுத்தி அதனை யாளுதல். சக்தியை யாள்வார்க்கு எப்போகமும் இடையூறின்றி நினைத்தாங்கு நிகழும்; சக்தி கை வசமாகாதாரோ எவ்வகையான போகத்தின் கண்ணும் இடையூறைக்காண்பர்.

மேற்கதி யென்பது தேவசரீரம் பெறுதல். இது ஒளிவழிச் செல்லும் மார்க்கம். கீழ்க்கதி என்பது விலங்குகளாகவேனும் நரகத்திலேனும் சேருதல்; இது இருள்வழி—மனிதகதியோ ஒளியும் இருளும் உடன்கலந்த கதி. ஒளி வழிப்பட்டார் மேலே உயர்த்தப்படுவார். இருள் வழிப்பட்டார் கீழே இழுக்கப்படுவார். மனிதனோ ஒளியும் இருளும் வாய்ந்தவனாதலின் சொர்க்கம், மத்தியம், பாதலமாகிய மூன்று கதியிலும் திரியவல்லவன். பரஞானத்தைப் பெறும்பொழுது இந்த மூன்று கதிகளையும் தாண்டி துரியகதியில் பிறப்பைக் கடந்து ஏறிக்கொள்வன்.

பந்தம் என்பது பிறப்பின் மயக்கம் தீராமையாம். இது மூன்று வித மாகுமெனக் கௌடபாதர் கூறுவாராயினர். அவை பிரகிருதிகாபந்தம், வைகிருதிகாபந்தம், தக்ஷிணபந்தம், என்பன. ஒருவன் தன்னைச், சடமென நினைத்தல் இயற்கையாகிய பிரகிருதிகாபந்தம்; இந்திரியங்களாக வேனும், அந்தக்கரணங்களாக வேனும் மதித்தல் வைகிருதிகா பந்தம்; தன்னை யறியாது ஒருவன் விரதங்களாலும், தர்ம கைங்கிரியங்களாலும் தனக்கு நன்மை தேடுவது தக்ஷிண பந்தம்.

இனி, புத்தியின் சிருட்டியை விரிக்கலுற்றார்.

## 46-வது காரிகை

ஏஷ பிரத்ய யஸர்கோ விபர்யயா ஸக்தி துஷ்டி சித்தாக்யः—குணவைஷம்ய விமர்த்தாத் தஸ்யச பேதாஸ்து பம்சாஸத்.

## புத்தி சிருட்டி

மேற்கண்ட எட்டு நோக்கங்களும் (பாவங்களும்) அவற்றாற் போதரும் பலன்களாகிய எட்டுக் கதிகளும் புத்தியின் விளைவாம். (சிருட்டியாம்)

இவை திரிவுணர்ச்சி, வலிக்குறைவு, மடி, சித்தி என்னும் நான்கு வகுப்பினுள் அடங்கும் இந் நான்கு வகுப்பினுள்ளும் புகுந்து நோக்கின் முக்குணங்கள் ஒன்றோடு ஒன்று முரணுவதால் ஐம்பது பாகுபாடுகள் தென்படும்.

உரை. ஆகவே புத்தி சிருட்டியை பாவங்களாகவும், அவற்றின் பல ஆகவும் நோக்கின் பதினாறும்.

மற்றுமோர் பாவனையாற் பார்க்கின் இப்பதினாறும் நான்கு வகுப்பினுள் அடங்கும். அந் நான்கையும் உட்புகுந்து நோக்க ஐம்பதாகத் தோன்றும்.

அது எவ்வாறெனிற் கூறலுற்றார்.

47-வது காரிகை

பஞ்ச விபர்யய பேதா பவந்திய சக்திஸ்ச்ச காணவைகல்யாத்—அஷ்டா விம்ச திபேதாஸ் துஷ்டி நவதாஷ்டதாசித்திஃ

புத்தி சிருட்டி ஐம்பது வகைத்து

திரிவுகாட்சி ஐந்துவகையினை யுடையது; கரணங்களில் நேரும் விகற்பங்காரணமாக உண்டாகும் வலிக்குறைவு இருபத்தெட்டு வகைப்படும். மடி ஒன்பது வகைப்படும்; சித்திகள் எட்டு வகையின.

உரை. திரிவுக்காட்சி—5,
வலிக்குறைவு—28,
மடி—9,
சித்தி—8, } 50

திரிவுக் காட்சி=விபர்யயம். இந்த இடத்தில் தவறான எண்ணத்தின் மேற்று, அவித்தை யெனப் பதஞ்சலியார் பெயர் கொடுத்து யோகநூலிற் கூறியதைக் கபிலன் விபர்யயம் எனக் குறியீடு கொடுத்து அதன் பிரிவுகளையும் கூறலுற்றான்.

வலிக்குறைவு=சக்தி ஈனம். அந்தக்கரணங்களிடத்தும் இந்திரியங்களிடத்தும் உள்ள சக்தி குறைவுபடுதல்.

மடி=துஷ்டி. விவேகத்தைப் பணி கொள்ளாமை.

சித்தி என்பது சர்வசக்தியும், குற்றேவலுக்குக் காத்திருத்தல். இவை அஷ்டமகா சித்திகளெனப் பெயர் பெறும். கபிலன் இவ் அட்டமா சித்திகளையும் வேறோர் பாவனையால் எட்டு வகுப்பினுள் அடக்கினான்.

விபர்யயம் ஆகிய திரிவுணர்ச்சியைத் தெய்வப் புலமைத் திருவள்ளுவனார் தமிழில் மருள் என்னும் பெயராற் கூறினார். தானல்லாத வொன்றைத் தானாக மதித்தலே மருளாம்; பொருளல்லவற்றைப் பொருளெனக் கொள்ளுதலும் மருளாம்:

அறியாமை ஐந்து பாகு பாடுகளை யுடையது. இவற்றைப் பஞ்சக்கிலேசங்களெனப் பதஞ்சலி கூறுகின்றார். அவர் அவற்றிற்கு இடும் பெயர்களாவது:—அவித்தை அஸ்மிதை, ராகம், துவேஷம், அபினிவேசம். கபிலன் இவற்றை முறையே தமசு, மோகம், மகாமோகம், தாமிசிரம், அந்த தாமிசிரம் என்னும் பெயர்களாற் கூறினர். தமிழிற் குறியீடு கொடுப்பின் இவை:—

அறியாமை. {
மருள்=தன்னை மற்றொன்றாக நினைத்தல்.
அவா்=அகங்காரம்=அஸ்மிதை.
பேரவா=ஆசை=ராகம்.
பேரிருள்=வெறுப்பு=துவேஷம்.
மிக்கபேரிருள்=பற்று=அபினிவேசம்.
}




**சூரிய வெப்பத்தில் ஓடும் மோட்டார்:—**

சமீபத்தில் சூரிய வெப்பத்தைக்கொண்டே ஓடக்கூடிய மோட்டார் செய்யப்பட்டிருக்கிறது இம் மோட்டார் வெய்யில் அதிகமாக ஆக, வேக மாக ஓடுமாம். சூரியன் அஸ்தமிக்க ஆரம்பித்து விட்டால் ஓடாதாம். இதி லிருந்து சூரிய உஷ்ணம் இருக்கும் வரை இம்மோட்டாருக்குப் பெட்ரோல் வேண்டியதில்லை எனத் தெரிகிற தல்லவா!

***

**6 முட்டைகளிட்ட கோழி:—**

மோஹல்புரம் போலீஸ் ஸ்டேஷனைச் சேர்ந்த கெமால்டின் என்னும் பெயருடைய தலைமை தாணாக்காரனுடைய பெட்டைக் கோழி யொன்று ஆறு முட்டைகளை இட்டதாம்.

***

**குடியில் முதல் பரிசு பெறத் தக்கவர்:—**

அமெரிக்காவில் வசிக்கும் ஆர்த் ஆக்வியன் என்பவர் ஒரு காலன் பிராந் தியை 17 விநாடிகளில் குடிக்கிறாராம். ஆதலாலல் இவரே குடியில் முதல் பரிசுபெறத் தக்கவராம்.

***

**திருட்டுப் பையனுக்குச் சைகில் பரிசு:—**

12 வயதுள்ள ஒரு நீக்ரோ பையன் அடிக்கடி சைகிலைத் திருடிவிட்டுத் தொந்திரவு கொடுத்துக் கொண்டிருந்ததால், போலீஸார் அவனைச் சிறை செய்வது சிரமமா யிருக்கிறதெனக் கருதி அவனுக்குத் தாங்களே பணம் போட்டு ஒரு சைகிலை வாங்கிக் கொடுத்திருக்கிறார்களாம்.

***

**நேரத்தைக் கூறும் கடியாரம்:—**

அமெரிக்காவில் நேரத்தைக் கூறுங் கடியார மொன்று புதிதாகக் கண்டு பிடிக்கப்பட் டிருக்கிறதாம். டயலுக்குப் பதிலாக கோமாளி மனிதனின் முகப்பட மொன்று அமைக்கப்பட் டிருக்கிறது. மின்சார விசையால் ஓடும் இக்கடியாரம் கால்மணிக் கொருமுறை நேரத்தைக் கூறுகிறதாம். மற்ற நேரங்களிலும் விளம்பரங்களையும் இக்கடியாரத்தைக் கொண்டே கூற வைக் கலாமென முயற்சி செய்யப்படுகிறது.

***

**4 கால்களுடைய கோழிக் குஞ்சு:—**

சூலக்கரை என்னுமூரில் வசிக்கும் இஸ்ரவேல் கவுண்டர் என்பவர் வீட் டுக் கோழி முட்டை யிட்டதாம். அது பொரிந்ததும் 4 கால்களோடு ஒரு குஞ்சு வெளி வந்ததாம்,




எட்வர்ட் அரசர் ஏறிச் செல்லும் மோட்டாரில் அவர் அதில் பிரயாணஞ் செய்கையிலும், அரசாங்க கடிதங்களைக் கவனிப்பதற்காக ஒரு மேஜையும், மேஜை விளக்கும் இருக்கின்றனவாம்.

* * * *

ருஷ்யாவில் ஆண்டுதோறும் சராசரி 5000 ஆகாய விமானங்கள் செய்யப்படுகின்றனவாம்.

* * * *

இந்தியாவிலேயே மிகவும் உயரமானவன் பூரி ஜில்லா பள்ளிக்கூடத்திலுள்ள நிகில சந்திரி என்பவனாகும். 16 வயதுள்ள அவனது உயரம் 6 அடி 4 அங்குல மாகும்.

* * * *

12 அங்குலக் குறுக்களவுள்ள பெரிய காளான் ஒன்று பிரஷியாவில் முளைத்திருக்கிறதாம்.

* * * *

200 மைல் மோட்டார் பந்தய மொன்றில் மான்றீவில் 10 வயது உள்ள ஆர் சீமான் என்னுஞ் சிறுவன் வெற்றி பெற்றானாம்.

* * * *

அமெரிக்காவில் 9 வாத்து முட்டைகள் சூரிய வெளிச்சத்தாலேயே பொரிக்கப்பட்டு விட்டனவாம்.

* * * *

இங்கிலாந்தின் வீட்டிலிருந்தபடியே டெலிவிஷன் கருவிகளின் உதவி, யால் சினிமா உற்சவங்கள் முதலியவற்றைப் பார்க்க வசதி செய்யப்பட்டிருக்கின்றனவாம்.

* * * *

அமெரிக்க நிபுண ரொருவரால், மஞ்சட் காமாலை அதை யொட்டிய கண் கெடுதல்கள் முதலியவற்றை மின்சார சக்தியைக்கொண்டு குணப் படுத்தப் படுகின்றனவாம்.

* * * *

இங்கிலாந்தில், சினிமா படங்களை உபயோகிக்கும் முறையை பள்ளிக்கூட உபாத்தியாயர்களுக்கும் கற்றுக் கொடுக்கப் படுகிறதாம்.

* * * *

தென்னாப்பிரிக்காவில் டர்பன் என்னு மிடத்தில் பள்ளிச் சிறுவர்களுக்கு நாடோறும் 500 காலன் பால் இலவசமாகக் கொடுக்கப்படுகிறதாம்.

* * * *

கூடிய சீக்கிரம் இங்கிலாந்தில் நடக்கப்போகும் எட்வர்ட் மன்னர் முடிசூட்டு விழாவுக்கு இந்தியாவிலிருந்து சுமார் 200 சமஸ்தான ராஜாக்கள் செல்வார்களெனக் கூறப்படுகிறது.

# ஆசிரியர் குறிப்புக்கள்

## தமிழை வளர்க்கும் யோசனை

தமிழ்க் கலை அபிவிருத்தியடைய வேண்டுமாயின் பாஷை வளர்ச்சி பெறுதல் அவசியம். பாஷை வளர்ச்சி யென்றால் சம்பந்தப்பட்ட சிலர் முயற்சி எடுத்து அதற்கான மார்க்கம் தேடவேண்டுமே யொழிய எவரும் எதையேனும் செய்யலா மென்பது சரியல்ல. ஆகவே பாஷையை வளர்ப்பதற்காக, அதாவது கலை அபிவிருத்திக்கு அவசியமான சொற்களை ஆக்க சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கம் சென்ற மூன்று ஆண்டுகளாகப் பிரயத்தனப்பட்டு இப்போது ஒரு பகுதியைத் திரட்டி வெளியிட்டிருக்கின்றது. அதைப்பற்றி ஆராயவும், இன்னும் மேற்கொண்டு செய்ய வேண்டிய வேலைகளைப் பற்றிக் கவனிக்கவும் ஒரு மகாநாடு சென்ற ஞாயிற்றுக்கிழமை யன்று சென்னை பச்சையப்பன் மண்டபத்தில் தமிழ் அறிஞர் சுவாமி விபுலானந்தர் தலைமையில் கூடியது. அவரது தலைமை யுரையின் சாராம்சத்தை வேறோரிடத்தில் பிரசுரித்துள்ளோம். தமிழ்க்கலை அபிவிருத்தியில் ஆர்வமுடைய அனைவரும் அதைப்படிக்க வேண்டியது அவசியம். அம் மகாநாட்டைத் திறந்து வைத்த சர். சி. பி. ராமசாமி ஐயரும், வரவேற்புத் தலைவராக இருந்த ஸ்ரீ. டி. எஸ். நடராஜப் பிள்ளையும், தலைமை தாங்கிய சுவாமிகளும் தமிழ்ப் பாஷையை வளர்ப்பதற்கான பல அரிய யோசனைகளைக்கூறி யிருக்கின்றனர். கலை நூல்களை நாட்டு மொழியில் எழுதினால்தான் நமது கலையும் அபிவிருத்தி யடையும். மொழி பெயர்ப்பு வேலையில் இறங்குபவர்களுக்குத்தான் சொற்களை ஆக்கவேண்டிய அவசியம் நன்கு புலனாகின்றது. வேறு பாஷைகளிலுள்ள சொற்கள் எப்படியோ தமிழில் புகுந்துகொண் டிருக்கின்றன. அவற்றை யெல்லாம் புறக்கணித்துத் தள்ளி வேறு சொற்களை ஆக்க வேண்டியது அவசியமா என்னும் கேள்வி பிறக்கின்றது. இவ் விஷயத்தில் பலர் பற்பல விதமான அபிப்பிராய முடையவர்களாக இருக்கின்றனர். எனினும் சென்னை மாகாணத்தமிழ்ச் சங்கத்தாரும், மேற்படி மகாநாட்டினரும் சரியான யோசனையையே பின்பற்றி வருகிறார்களென்பது நமது அபிப்பிராயம். தமிழ்ப்பாஷை சம்பந்தப்பட்ட வரையில் வடமொழிச் சொற்களும் ஆங்கிலச் சொற்களும் அதிகமாகப் பரவி யிருக்கின்றன. அவற்றில் பல அனைவரும் அறியக்கூடிய வகையில் சர்வ சாதாரணமாகப் பரவி விட்டிருக்கின்றன. இவற்றிற்கும் தமிழ்ச் சொற்களை ஆக்கவேண்டுமா என்றால், அங்குதான் நிதானமாகக் கவனிக்க வேண்டி யிருக்கிறது. வடமொழியினிடமோ ஆங்கிலத்தினிடமோ எவருக்கும் துவேஷம் கூடாது, எனினும் கூடுமான வரை அம்மொழிகளின் சொற்களை விலக்கித் தமிழ்ச்சொற்களை ஆக்கலே நலம். ஆனால் எவ்வாற்றானும் மொழி பெயர்க்கவோ, விளக்கவோ முடியாதபோது வழக்கத்தில் வந்து மக்களுக்கு அர்த்தம் விளங்குகின்ற அச் சொற்களையே வைத்துக் கொள்ளலாம். மேலும் தலைமை தாங்கிய சுவாமிகள் கூறுகிறபடி ஆன்றோர் வழங்கி வழக்கத்தில் வந்த சொற்களை உவந்தேற்றலே சிறப்புடைத்தாம். இக் கொள்கையைத் தாங்கியே சங்கம் வேலைசெய்து வந்திருப்பது பாராட்டத் தக்கதாகும். இன்னமும் அச்சங்கம் தன் வேலையைச் சிறப்பாகச் செய்து முடித்துத் தமிழின் வளர்ச்சிக்கான மார்க்கங்களைத் தேடிக் கலைத் துறையில் தமிழன்னைக்கு உன்னத ஸ்தானம் கிடைக்கும்படி செய்வார்களென்று ஆவலுடன் எதிர் பார்க்கிறோம்.

---

## முட்டாள்களின் வேலைதான்

இப்பால் சொற்ப காலமாக நம் தாழ்த்தப்பட்ட சமூகத்தைச் சேர்ந்த சகோதரர்களில் சிலர் 'ஹிந்து மதத்தில் தீண்டாமை இருக்கிறது, ஆதலால் நாங்கள் இனியும் சகிக்க முடியாது; வேறு எந்த மதத்திலேனும் சேர்ந்து விடுகிறோம்' என்று ஆர்ப்பாட்டம் செய்து வருகிறார்கள். அவர்கள், தாங்கள் அவ்வாறு தடபுடல் செய்வதுதான் தங்களுக்குக் கௌரவத்தையும் பெருமையையும் தருவதாகவும் எண்ணுகின்றனர். ஆனால் உண்மை என்ன! ஆதிதிராவிடர்களுக்குள் இருக்கும் முட்டாள்களும், வீரமில்லாதவர்களும் தான் அந்த வேலையைச் செய்வார்களே யொழிய மற்றவர்கள் ஹிந்து மதத்தையே சீர்திருத்துவார்கள் என்று தான் அச்சமூகத்திலுள்ள அறிஞர்களும், உயர்ஜாதி ஹிந்துக்களிடையேயுள்ள உத்தமர்களும் கூறுகிறார்கள். சமீபத்தில் சென்னை ஆரியசமாஜக் கட்டடத்தில் ஹரிஜனங்கள் மதம் மாறுவது சரியா என்பது பற்றி ஆலோசிப்பதற்காக ஒரு சர்வமத மகாநாடு கூடியது. அதில் தலைமை வகித்த பெரியாரான திவான்பகதூர் ஆர். சீனிவாசன் அவர்கள் ஆதித்திராவிடர்களின் நிகரற்ற நாகரிகத்தைப்பற்றி விளக்கி அப்படிப்பட்ட சமூகத்தைச் சேர்ந்த அவர்கள் பிற மதங்களைத் தழுவுவது சரியல்ல வென்று விளக்கினார். ஹரிஜன சமூகத்தின் முன்னேற்றத்துக்காகப் பெரிதும் பாடுபட்டு வரும் அறிஞர், சுவாமி சகஜானந்தம் அவர்கள் திருக்குறள்தான் ஆதித்திராவிடர்களின் நூலென்றும் அதில் கூறப்படும் மதமே அவர்களுடைய மதமென்றும் கூறி, முட்டாள்கள் தான் இத்தகைய மதத்தைவிட்டுப் போவார்கள். என்று சொன்னார். அம்மகாநாட்டில் ஹிந்து மதத்தின் சார்பாகப் பேசிய சென்னை ஹரிஜனசேவா சங்கத்தலைவர் திவான்பகதூர். வி. பாஷ்யமய்யங்கார் அவர்கள் ஹிந்துமதத்தில் தீண்டாமை சொல்லப்படவில்லை என்று உறுதியாகக்கூறி மத்திய காலத்தில் ஏற்பட்ட கஷ்டத்தைக்கருதி மதம் மாறுவது கூடாதென்றும் தெரிவித்தார். இதைப்பற்றி சென்னை அட்வகேட் ஜனரல், சர். அல்லாடி கிருஷ்ணசாமி ஐயர் கூறியதும் கவனிக்கத்தக்கது. ராயபுரம் கண்ணப்பர் வாசக சாலையில் அவர் ஒரு விழாவில் கலந்துகொண்டு பேசுகையில் ஹிந்து மதத்தை நன்றாக ஆராய்ச்சிசெய்து அதிலுள்ள கெடுதல்களை விலக்கிப் புனிதமாக்கவேண்டுமே யொழிய அம்மதத்தை விட்டுப்போய் விடுவதாகச் சொல்வது வீரமற்ற பேச்சாகும் என்று கூறினார். மேலும் அவர் அன்று கூறியதுபோலவே நாமும் ஹரிஜன சமூகத்தினின்றும் இக்காலத்தில் சில நாயன்மார்கள் தோன்றவேண்டு மென்றே ஆசைப்படுகிறோம். ஆதித்திராவிட சமூகத்தில் எத்தனையோ உத்தமர்களும் மேதாவிகளும் இருக்கிறார்கள். அவர்கள் சமய சீர்திருத்தக்காரர்களாகத் தோன்றி ஹிந்து மதத்தையே தக்கபடி சீர்திருத்த வேண்டுமென்பதே நமது ஆவல். ஜாதி ஹிந்துக்களும் தாழ்த்தப்பட்டவர்க வென்போரும் சேர்ந்து தாய்ச் சமயத்தைப் புனிதப்படுத்துவதே சிலாக்யமான வேலையாகும். உயர் ஜாதியினரும் அகங்காரத்தை விட்டு மதத்தின் மேன்மைக்காகப் பாடுபடுவார்களென்று நம்புகிறோம்.

---

## இந்திய மாதரும் சமூக சேவையும்

இந்தியப் பெண்கள் சமூக சேவையில் ஈடுபட வேண்டியது அவசியம் என்பதை எவரும் மறுக்க முடியாது. அவ்வாறு செய்வது பலருக்குப் புதிய

முறை எனத் தோன்றலாம். ஆனால் அதுவே உண்மையல்ல. பண்டைக் காலத்திலும் பெண்கள் ஆடவர்களுடன் சரி சமானமாகப் பல துறைகளிலும் சமூகத்துக்குச் சேவை செய்திருக்கிறார்கள் என்பதற்கு வேண்டிய அத்தாட்சிகள் இருக்கின்றன. ஒரு சமூகத்தின் முன்னேற்றத்துக்கு ஆடவர்களின் உழைப்பு எவ்வளவு அவசியமோ அவ்வளவு அவசியமாகப் பெண்களின் சேவையும் தேவை. ஆங்கிலம்கற்ற பெண்மணிகள் சமூகத்தொண்டில் ஈடுபடுவது சிலாக்கியமானதுதான். அவர்கள் கல்வியைக்கற்று அதன் பயனாக மேல் நாட்டு நாகரிகத்தில் மோகங்கொண்டு ஏதோ தங்கள் சுக போகங்களிலும் ஆடம்பர வாழ்விலும் கவனத்தைச் செலுத்துகிறார்களே யொழிய சமூக சேவையில் ஆர்வமுடையவர்களாக இருப்பதாகத் தெரியவில்லை. இந்திய மாதர்களின் கல்வியறிவும் ஆற்றலும் அவர்களுடைய சகோதரிகளுக்குப் பயன் படுவதாக இருக்கவேண்டும். சமீபத்தில் சென்னை கிறிஸ்தவ இளைஞர் சங்கத்தினர் ஆதரவில் நடந்த விவாதசபைக் கூட்டமொன்றில் ஆங்கிலக் கல்விகற்ற இந்தியப்பெண்கள் சமூகத்தொண்டில் ஈடுபடுவது சிலாகிக்கத்தக் தக்கது என்னும் பிரேரணையைக் கொண்டுவந்த ஸ்ரீமதி. சரஸ்வதி என்னும் பெண்மணி, 'பண்டைக்காலநிலை மாறியிருப்பினும் தற்காலப் பெண்களுக்கு பண்டைக்கால இந்திய மாதர்களின் சரித்திரம் பலவழிகளில் வழிகாட்டியாய் இருக்கிறது. புறநானூறு அகநானூறு, மணிமேகலை இவற்றிலிருந்து பெண்கள் சமூகத் தொண்டிற்குரிய படிப்பினைகளைக் கற்கலாம். இந்தியாவில் ஆங்கிலம் கற்ற பெண்கள் படியாதவர்களுக்குச் செய்ய வேண்டிய போதுமான தொண்டாற்றவில்லையென்று கூறலாம். தமிழ்ப்பாவையின் பற்றை வளர்த்து ஆண்களுடன் ஒத்துழைத்து பெண்மக்கள் அஞ்ஞானத்தையும் சுகாதார மின்மையையும் ஒழிப்பதில் வெகுவாய் முற்படவேண்டும்' என்று கூறியதை நாம் மனமார ஆதரிக்கின்றோம். தேசத்தில் ஆண்களிடையிலும் பெண்களிடையிலும் அறியாமையும் சுகாதார மின்மையும் அதிகமாக நிரம்பி யிருக்கிறது. அவற்றை ஒழித்துச் சமூகத்தை முன்னேற்றுவதற்குப் பாடுபடாத வரையில் பெண்கள் கல்வி கற்றாலும் ஒன்றுதான்; கற்காவிட்டாலும் ஒன்றுதான். கேவலம் சுயநலத்துக்காக அறிவுபெறுவது சிலாக்கியமானதல்ல.

---

## ஹரிஜன சேவையும் காங்கிரசும்

நம் நாட்டிலுள்ள தாழ்த்தப்பட்டாரின் நிலைமையை உயர்த்துவதற்காகவே மகாத்மா காந்தியடிகள் ஹரிஜனசேவா சங்கத்தை ஸ்தாபித்தனர். அது செய்துவரும் சேவையை ஹரிஜன சமூகத் தலைவரான ஸ்ரீமான்கள் எம். சி. ராஜா, ஆர். சீனிவாசன், வி. தர்மலிங்கம் பிள்ளை முதலியவர்கள் பாராட்டி வருகின்றனர். சமீபத்தில் சென்னை ஹரிஜனசேவா சங்கத்தின் நான்காவது ஆண்டுவிழா நடைபெற்றபோது திவான்பகதூர் ஆர். சீனிவாசன் பேசுகையில் அச்சங்கம் இந்த இரண்டுமூன்று ஆண்டுகளுக்குள்ளாக சுமார் எழெட்டு லட்சம் ரூபாய்வரை செலவு செய்திருப்பதாகக் கூறி அச்சங்கத்தின் வேலையைப் பாராட்டியிருக்கிறார். தாழ்த்தப்பட்டவர்களை, கல்வி, சமூகம், பொருளாதாரம் சமயம் முதலிய துறைகளில் முன்னேற்றுவிக்கவே ஹரிஜன சேவா சங்கம் உழைத்து வருகின்றது. அச்சங்கம் மகாத்மாவின் முயற்சியினாலும் காங்கிரசின் ஆதரவாலும் ஸ்தாபிக்கப்பட்டு நடந்துவருகிறதென்றாலும் காங்கிரசின் அரசியலுக்கும் அதற்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை. காங்கிரஸ்காரர்

கள் பலர் அதில் இருக்கலாம். அதுபோலவே காங்கிரசல்லாதவர்களும் பலர் அதில் இருப்பது கண்கூடு. காங்கிரசின் அரசியல் கொள்கைகளை ஒப்புக் கொள்ளாதவர்களும் அதன் நிர்மாண திட்டத்தில் ஒத்துழைக்க விரும்புவோர் களை யெல்லாம் சேர்த்துக்கொண்டு இந்திய சமூகத்தைப் பல துறைகளிலும் முன்னேற்றுவிக்கவே மகாத்மாஜி அகில இந்திய ஹரிஜனசேவா சங்கத்தை யும் அகில இந்திய நூற்போர் சங்கத்தையும் நிறுவினார். காங்கிரசின் காற்று பட்டாலும் கூடாது என்று கருதுவோர் அதில் சேராமல் இருக்கலாம். ஆனால் மற்றவர்கள் பலரும் இப்பிரத்தியேக சங்கங்களைப் பலவகையிலும் ஆதரித்து வருகிறார்கள். ஹரிஜனசேவா சங்கத்தின் நிதியைக் காங்கிரஸ் தன் அரசியல் வேலைக்கு (தேர்தல் உள்பட)ப் பயன்படுத்திக் கொள்வதாக எதிரிகள் புகார் கூறி வருகின்றனர். சமீபத்திலும் ஜஸ்டிஸ்கட்சிக்குத் தலைவரான கனம் பொப் பிலி அரசர் ஆந்திர நாட்டில் தம் கட்சிக்குப் பிரசாரம் செய்யும்போது இந்த அபிப்பிராயத்தை வெளியிட்டார். அதற்கு தமிழ்நாடு காங்கிரசின் காரிய தரிசியான ஸ்ரீ எம். பக்தவத்சலம் சரியான பதில் அளித்துள்ளார். காங்கிரஸ் காரர்க ளல்லாதவர்களும். தமிழ்நாட்டு ஹரிஜன சமூகத் தலைவர்களுமான திவான்பகதூர் ஆர். சீனிவாசன் ராவ்பகதூர் தர்மலிங்கம் பிள்ளை முதலிய பலர் அடிக்கடி அத்தகைய புகார் பொய் என்று இடித்துக்கூறி வருகின்றார் கள். ஆயினும் எதிர் கட்சியினர் பிடிவாதமாக அப்புகாரையே மீண்டும் மீண்டும் செய்து வருவது அவர்களுடைய தவறான மனப்பான்மையைக் காட் டுகிறதே யொழிய அதனாலேயே அவர்கள் கூறுவதே உண்மையென்று ஏற் பட்டு விடாது. ஏதோ பல பொதுநிதிகளையும் காங்கிரஸ்காரர்கள் துஷ்பிர யோகம் செய்வதாகக் குற்றம்சாட்டி வரப்போகும் தேர்தலில் காங்கிரசைத் தோற்கடித்துவிடலாம் என எதிரிகள் கருதுவது பகற்கனவாகவே முடியும். தேச மகாஜனங்கள் எல்லா உண்மைகளையும் ஆராய்ந்து அறியக்கூடிய சக்தி யுடையவர்களாக இருப்பதைக் காங்கிரசின் எதிரிகள் அறியவேண்டு மென் பதே நமது அவா.

---

## நட்புகோரும் தூதர்கள் விஜயம்

தென்னாப்பிரிக்காவிலிருந்து ஒரு தூது கோஷ்டியினர் இப்போது இந் தியாவுக்கு விஜயம் செய்திருக்கிறார்கள். அவர்கள் அரசியல் சம்பந்தமான எத்தகைய உத்தேசத்துடனும் வரவில்லை. இந்தியாவில் சுற்றுப் பிரயாணம் செய்து இங்குள்ள நிலைமைகளை அறிந்து கொண்டு செல்லவும், இந்தியா வுக்கும் தென்னாப்பிரிக்காவுக்கு மிடையில் அன்னியோன்னியத்தையும் உறவையும் அதிகப்படுத்தவுமே வந்திருக்கிறார்கள். சுமார் பத்து ஆண்டுக ளுக்கு முன்னர் இவ்வாறு ஒரு தூது கோஷ்டியினர் வந்து போனார்கள். தென்னாப்பிரிக்காவில் இந்தியர்கள் பலர் இருக்கிறார்கள். தென்னிந்தியர்கள் தான் முதன் முதலில் அங்குச் சென்றது. அங்குள்ள இந்தியர்களின் நலத் தைக் கோருவது நமது கடமை. அதைப் பற்றிக் கவனிப்பதற்காகவே இந் திய சர்க்காரும் ஏஜண்ட் ஒருவரை நியமித்திருக்கிறார்கள். ஆகவே இந்தியா வுக்கும் தென்னாப்பிரிக்காவுக்கும் நெருங்கிய உறவும் நட்பும் இருக்கவேண்டி யது அவசியம். ஆனால் சில வருஷங்களுக்கு முன்வரை விஷயங்களை நன்கு அறியாததால் பல தப்பபிப்பிராயங்கள் ஏற்பட்டிருந்தன. ஆனால் இப்பால் இரு தேசங்களின் பிரமுகர்களும் நெருங்கிப் பழகுவதால் உறவும் நட்பும் ஏற்பட




# லக்ஷ்மிபாய்

அல்லது

# ஆற்காட்டு முற்றுகை.

(எம். லக்ஷ்மண முதலியார்.)

(239-ம் பக்கத் தொடர்ச்சி.)

"ஹை, ஹை! அம்பு சாளரத்திற்குள் போய்விட்டது," என்று குதூகலித்தான் குரூபி. அம்பில் கட்டப்பட்டிருந்த பட்டுக் கயிற்றின் மற்றொரு மூனை வில்லில் கட்டப்பட்டிருந்த படியால் அதைக் கொஞ்சம் இசிவாக இழுத்துப் பிடித்துக்கொண்டு கயிற்றை அசைத்து சைகை செய்தான் குரூபி. பதில் சைகையும் வந்தது. குரூபிக்கு அடங்காத சந்தோஷம் உண்டாகியது. உடனே வடக்கயிற்றின் மூனையை இந்தப் பட்டுக் கயிற்றோடு முடிந்துவிட்டு மற்றொரு தடவை அதை அசைத்து சைகை செய்தான். சிறிது நேரத்தில் பட்டுக்கயிறு மேல்நோக்கி இழுக்கப்பட்டது. அத்துடன் வடக்கயிறும் சேர்ந்து மேலே போயிற்று. சிறிது நேரத்தில் வடக்கயிறு அநேக பாகம் நீளம் மேலே சென்றுவிட்டது. பிறகு அந்தக்கயிறு ஒரு உதறல் உதறியது. அந்த சைகையறிந்து குரூபி தன்னிடமுள்ள வடக்கயிற்றின் மற்றொரு மூனையைக் கெட்டியாய்ப்பிடித்து இழுத்துப் பார்த்தான்; மேலே சென்ற மூனை அங்கே வலுவான ஓர் பாகத்தில் மிக பலமாய் முடியப் பட்டுவிட்டது என்று

---

இடமிருக்கிறது. இதனுல்தான் இந்தத் தூதர்களை மகாத்மாஜியும் வரவேற்று அனுப்பிய வாழ்த்துச் செய்தியிலும் 'தூது கோஷ்டியின் இந்தப் பிரயாணத்தின் பயனைத் தப்பபிப்பிராயங்கள் சூழ்ந்திருப்பது நீங்கி இருதேசங்களுக்குள்ளாக அதிக நட்பு ஏற்படுமென்று ஆண்டவனைப் பிரார்த்திக்கிறேன்' எனக் கூறியிருக்கிறார். மேலும் இந்தியர்களாகிய நாமும் தென்னப்பிரிக்கர்களும் இன்று ஒரே சாம்ராஜ்யத்தைச் சேர்ந்தவர்களாக இருக்கிறோம். ஆதலால் நம்முடைய கஷ்டங்களையும் பிரச்னைகளையும் அவர்கள் அறிய விரும்புவதில் ஆச்சர்ய மொன்றுமில்லை. முக்கியமாக அந்த தூதுகோஷ்டியின் தலைவரான ஸ்ரீ. ஹாப்மீயரே கூறுவது போல இந்தியா மதங்களுக்கெல்லாம் தாய்நாடாகவும், தென்னப்பிரிக்காவுக்கும் உலகத்துக்கும் வழி காட்டக்கூடியதாகவும் இருக்கிறபடியால் இங்கு வந்து இங்குள்ள நிலைமைகளை அறிந்துகொண்டு போய் இந்தியாவுக்கும் தென்னப்பிரிக்காவுக்கு மிடையில் அந்நியோன்யத்தைப்பெருக்கும் நோக்கத்துடன் விஜயம் செய்திருக்கும் அந்த தூதுகோஷ்டியினரை வரவேற்கவேண்டியதும், அவர்களுடைய சுற்றுப்பிரயாணம் சுகமாக முடிவடைய வேண்டுமென்று பிரார்த்திப்பதும் நமது கடமையாகும்.

அறிந்தான். உடனே தன்னிடமுள்ள முளையையும் சமீபத்திலுள்ள ஒரு ஸ்தூபியின் சிகரத்தில் முடிந்துவிட்டு சற்றுநேரம் ஆவலுடன் அண்ணாந்து பார்த்தபடியே நின்றான். ஆ! அவன் எதிர்பார்த்த சைகை கிடைத்தது. எங்கும் சுற்றிச்சுற்றி யாராவது ஆட்கள் இருக்கின்றார்களாவெனப் பார்த்தான். ஒரு வௌவால்கூட பறக்கவில்லை. ஒரு பல்லிகூட சப்திக்கவில்லை. எங்கும் ஒரே நிசப்தமாக இருந்தது. சரி, இனி தாமதிக்கக்கூடாது! என்று நினைத்தான் குரூபி; மறுக்ஷணம் கயிற்றைப்பிடித்து மூன்றுதரம் அசைத்தாட்டி விட்டான்.

அவ்வளவுதான். கோபுரத்தின் சாளரத்தில் மங்கலாய் தெரிந்துகொண்டிருந்த வெளிச்சம் சற்று நேரம் மறைந்து பிறகு முன்போல் தெரிய ஆரம்பித்தது. வடக்கயிறு தடபுடவென்று உதறி ஆட ஆரம்பித்தது. ஹுசேன் சாளரத்தின் வழியாய் வெளியே வந்து கயிற்றைப் பிடித்துக்கொண்டு இறங்கி வருகிறான் என்பதை குரூபி உணர்ந்தான். அதை இலக்ஷ்மி பாயிடமும் தெரிவித்தான். அவள் மனம் அச்சமயம் இருந்த விதத்தை வாசகர்களே ஊகித்துக் கொள்வது நலம்! அப்பொழுது ஓர் கொத்தளத்திலிருந்து தாரை சப்தம் பூம், பூம் என்று முழங்கியது. இலக்ஷ்மி பாய் நடுங்கினாள். அவள் சரீரம் ஜில்லென்று வியர்த்துப் போய் விட்டது. குரூபி மரம்போல் ஸ்தம்பித்து நின்றான். கயிற்றின் அசைவும் நின்றுவிட்டபடியால் ஹுசேனும் ஆபத்தை உணர்ந்து கொண்டான் என்று நினைத்தார்கள் குரூபியும் இலக்ஷ்மி பாயும். அப்படியே சிறிது நேரம் சென்றது. அந்தகாரத்திற்குத் துணை வருவதுபோல் நிசப்தம் குடிகொண்டது.

"ஆ! அது ஒன்றுமில்லை. வழக்கமாய் இரவு இருபது நாழிகைக்கு ஊதும் தாரை சப்தம். நீ அச்சமில்லாமல் இரு" என்று இலக்ஷ்மி பாயிடம் சொல்லி விட்டு கயிற்றைப் பிடித்து அசைத்து ஒரு சைகைக் கொடுத்தான் குரூரன். யாவருக்கும் பயம் தெளிந்தது. ஆனால் ஒவ்வொரு க்ஷணமும் ஒவ்வொரு யுகமாகத் தோன்றியது. அப்படி மிகக் கஷ்டப்பட்டு அநேக "யுகங்கள்" கழிந்த பிறகு கடைசியாக ஓர் உருவம் கயிற்றைப் பிடித்துக் கொண்டு வந்து அவர்களுக் கிடையில் இறங்கியது.

"சர்தார்!" என்றான் குரூரன்.

"நண்பா!" என்று ஒரு மெலிந்த குரல் பதில் கேட்டது.

அந்தக் குரல் ஹுசேனுடையது என்று அறிந்ததும் இலக்ஷ்மி பாய் ஒரே பாய்ச்சலாய்ப் பாய்ந்து அவனை இறுகத் தழுவிக் கொண்டாள். அதிக இருட்டாய் இருந்த போதிலும் இதைக் கண்ட குரூபி மறு பக்கம் திரும்பிக் கொண்டான். அப்போது அவன் மனதில் மகிழ்ச்சி இல்லாமலில்லை.

"சரி, நமக்கு நேரமாகிறது புறப்படுங்கள். இனிமேல் காவல்காரர்கள் விழித்துக் கொள்வார்கள். அவர்களுடைய ஆகாரத்தில் நான் கலந்த அபின் மயக்கம் இப்போது தெளிய ஆரம்பிக்கும். ஜல்தி வாருங்கள்," என்று முன் நடந்தான் குரூபி. பதில் வார்த்தை பேசாமல் ஊமையர்கள் போல் காதலனும் காதலியும் அவனைத் தொடர்ந்து சென்றார்கள். கொஞ்ச தூரம் யாவரும் அரண்மனையின் மேல் தளத்திலேயே நடந்த பிறகு அங்கே ஒரு படிக்கட்டுக் காணப்பட்டது. குரூரன் அதன் பேரில் ஏறி நடந்தான். மற்றவர்களும் பின் தொடர்ந்தார்கள். அந்தப் படிக்கட்டு ஒரு சிறிய உப்பரிகைக்

குள் கொண்டுபோய் விட்டது. அங்கிருந்து இரண்டு முற்றங்களைக் கடந்த பின் ஒரு ஸ்தூபி தென்பட்டது. ஸ்தூபி ஓரமாய் உயர்ந்த அரண்மனை மதில் சுவர் எழும்பி நின்றது. அதில் ஒரு சாளரம் காணப்பட்டது இந்த இடத்தை அடைந்ததும் குரூபி நாலா பக்கமும் சுற்றிப் பார்த்துக் கொண்டு அந்த சாளரத்திற்குள் நுழைந்து எதையோ கவனித்து விட்டு மறுபடியும் வெளியில் வந்தான். "எல்லாம் சரியாயிருக்கின்றன. இந்த சாளரத்தில் நூலேணி தொங்கவிடப்பட்டிருக்கிறது. அதைப் பிடித்துக்கொண்டு கீழே இறங்குங்கள்." எனறு குசு குசுவென்று சொன்னான். எங்கும் ஏக இருட்டாய் இருந்தது. ஹுசேனுக்கு இன்னும் மயக்கம் தெளியவில்லை. அப்படி இருந்த போதிலும் குரூபியின் சொல்லுக்குப் பதில் பேசாமல் உடனே கீழ்ப்படிந்தான். முதலில் ஹுசேனும், பிறகு இலக்ஷ்மி பாயும், அதன் பின்னால் நொண்டிக்கால் குரூபியும் இறங்கினார்கள். இந்த நூலேணி முன் கூட்டியே அவன் தயாரித்து வைத்திருந்தானா வெனக் கேட்க நினைத்தாள் இலக்ஷ்மி பாய். ஆனால் இத்தருணத்தில் ஒன்றுமே பேசக்கூடாதென எண்ணி மௌனமாய் இருந்து விட்டாள். இந்த நொண்டிக் குரூபி செய்யும் ஒவ்வொரு விந்தையான வேலையும் அவனது ஆச்சரியமான சுறு சுறுப்பும் இலக்ஷ்மிபாய்க்கு மேலும் மேலும் வியப்பை உண்டுபண்ணிக் கொண்டே போயிற்று.

நூலேணியைப் பிடித்துக் கொண்டு இறங்கிய மூவரும் தாங்கள் அரண்மனைக்கும் வெளியே வந்துவிட்டதைக் கண்டார்கள். குரூரன் மெதுவாய் ஒரு சிட்டி அடித்தான். அதைக் கேட்டு மறைவிலிருந்த ஓர் மனிதன் வந்தான். அவன் இரண்டொரு வார்த்தை குரூபியுடன் பேசிய பிறகு அவனைத் தொடர்ந்து எல்லோரும் சென்றார்கள். சந்துகளிலும், தோட்டங்களிலும், பழைய வீடுகளிலும் புகுந்து வெகு தூரம் சென்ற பிறகு கோட்டை மதில் சுவா ஆகாயத்தை அளாவிக் கொண்டு நிற்பதைக் கண்ட இலக்ஷ்மி பாய் தாங்கள் பட்டணத்தைக் கடந்து மதில் சுவர் பக்கம் வந்து விட்டதை யறிந்தாள்.

"இந்த மதிலைத் தாண்ட வேண்டுமே!" என்று ஏங்கினாள் நங்கை.

"இதைத் தாண்டினாலும் அப்பாலுள்ள முதலைகள் சஞ்சரிக்கும் ஆழமான அகழியைக் கடக்க வேண்டுமே!" என்றான் குரூரான். ஹுசேன் வாய் திறக்கவே யில்லை. அவன் எவ்விதம் மௌனமாக குரூரன் சொல்படி தட்டாமல் நடந்து கொண்டு வருவதை நோக்க அவனும் குரூரானும் முன்னாடியே கடிதம் மூலம் கலந்து ஆலோசித்து இந்த சூழ்ச்சியை முடிவு செய்திருக்க வேண்டும் என்று ஊகித்தாள் இலக்ஷ்மி பாய். கடிதங்கள் அம்பு மூலமாய் குரூரன் அனுப்பி இருக்க வேண்டும் என்பதும் அவளுக்குத் தோன்றியது. இந்த சந்தேகங்களை உடனே நிவர்த்தி செய்து கொண்டு விடுவதற்கு ஆவல் உள்ளவளா யிருந்தாலும் சமயம் இது அல்ல என்றறிந்து நாவை அடக்கிக் கொண்டிருந்தாள்.

சிறிது நேரம் குரூபி தனது வீரசிகாமணிகளை மதில் ஓரமாகவே அழைத்துக்கொண்டு போய் ஓர் அடர்த்தியான புதரை வந்தடைந்தான். அங்கு சென்றதும் குரூபி மற்றவர்களையும் தன் பின்னால் வரும்படி சைகை செய்து விட்டு புதருக்குள் நுழைந்தான். அது ஜன நடமாட்டமில்லாத இடமாயிருந்த போதிலும் சமீபத்தில் யாரோ அங்கே நடமாடியிருக்கும் அடையாளங்களைக் கண்டாள் இலக்ஷ்மிபாய். அதற்குள் நுழைந்து இருபது அடி சென்றதும்

நீரில் அலைகள் மோதும் சப்தம் அவர்கள் காதிற்கு எட்டியது. மதில் சுவற்றில் இங்கே ஒரு கள்ள வழி இருக்கவேண்டும். அதன் வழியாகத்தான் அகழியின் அலைசப்தம் அவ்வளவு சமீபத்தில் கேட்கிறதென்று ஊகித்தாள் இலக்ஷ்மி பாய். சிறிது நேரத்தில் அவள் நினைத்தபடியே அகழியின் அலையோசை அதிகத் தெளிவாக வந்தது. அப்பொழுது, மதிலில் ஓர் ஆள் தாராளமாய் நுழையக்கூடிய ஒரு வழி மதிலில் இருப்பதைப் பார்த்தாள். ஆ! என்று கூறிக்கொண்டு ஹூசேனை இருகத் தழுவிக் கொண்டாள். குரூபி அந்த வழியில் தலையை நுழைத்து ஏதோ இரண்டொரு வார்த்தைப் பேசிவிட்டு மறுபடியும் தலையை வெளியே இழுத்துக் கொண்டான். இலக்ஷ்மி பாய் அதன் வழியாக எட்டிப் பார்த்தாள். ஜில்லென்று குளிர்ந்த காற்று அவளது முகத்தில் வீசியது. எங்கும் ஏக இருட்டாயிருந்தது. அகழியிலிருந்து பயங்கரமான ஓசைகள் ஒலித்துக்கொண்டிருந்தன. ஜல மட்டத்திலிருந்து மனிதக்குரல் கேட்பதாக அவளுக்குத் தோன்றியது. உடனே மிகுந்த வியப்போடு தலையை உள்ளே இழுத்துக்கொண்டாள்.

"ஜல்தி, ஜல்தி. நூலேணி வழியாய் இறங்குங்கள். கீழே நமது நண்பர் தெப்பம் வைத்துக்கொண்டு காத்திருக்கிறார். அதன் மூலம் அகழியைக் கடந்துவிடலாம்" என்றான் குரூபி. அவனைப் பற்றிய மர்மம் இலக்ஷ்மி பாயின் மனதில் வரவர அதிகரித்துக் கொண்டே போயிற்று.

சிறிது நேரத்தில் ஆழமான அகழியின் நடுவில் ஓர் தெப்பம் மிதந்து கொண்டிருந்தது. அதில் நமது கதாநாயக நாயகிகளும், அதிசயமான தொண்டிச் சேவகனும் இருந்தார்கள். அகழியில் அலைகள் மோதும் சப்தமும், முதலைகள் குதித்து விளையாடும் சப்தமும், பலவித ஜலப்பிராணிகள் ஒலமிடும் சப்தமும் கேட்க மிகப் பயங்கரமாயிருந்தது. இலக்ஷ்மிபாய் தனது அச்சத்தில் ஹூசேனை அணைத்துப் பிடித்துக் கொண்டாள். அப்பொழுது ஆற்காட்டுக் கோட்டை மதில் சுவற்றைத் தாங்கள் கடந்து சென்ற பயங்கரக் காட்சி அவளுக்கு ஞாபகம் வந்தது. உடனே அவளது உடல் உச்சி முதல் உள்ளங்கால் வரையில் நடுங்கியது.

தெப்பம் மெதுவாய் நகர்ந்து அக்கரையிலுள்ள ஒரு மரத்தின் கீழ் சென்று நின்றது. அந்த மரத்தின் மீதிருந்து ஒரு கயிறு தொங்கிக்கொண்டிருந்தது. ஒவ்வொருவராக அந்தக் கயிற்றைப் பிடித்துக்கொண்டு காலை அகழியின் சுவற்றில் உதைந்து கொண்டு ஏறி மேலே அகழியின் கரையை அடைந்தார்கள்.

குரூபி அண்ணாந்து வானத்தைப் பார்த்தான்.

பொழுது விடிவதற்கு இன்னும் எட்டு நாழிகைதான் இருக்கின்றது. இதற்குள் நாம் ஐங்காதம் போகவேண்டும். சர்தார்! உங்கள் உடம்பில் தெம்பு இருக்கின்றதா?" என்று வினவினான் குரூபி. இதைக் கேட்டவுடன் ஹூசேனுக்குத் தன்னைப் பற்றிய நினைவே வரவில்லை. இலக்ஷ்மிபாய் அவ்வளவு தூரம் இந்த இருட்டில் பிரயாணம் செய்வதற்குத் தகுதியுள்ளவளாய் இருப்பாளாவென்று அவனுக்கு கவலையுண்டாகியது. டக், டக், டக் என்று சப்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தான் ஹூசேன். வெண்மையான இரண்டு உருவம் இருட்டில் தங்களை நோக்கி வருவதைக் கண்டான். அருகில் வந்ததும் அவைகளிரண்டும் தெய்வலோகப் புரவியைப்போல் சுத்த வெண்மை

யான புரவிகளாய் இருக்கக் கண்டதும் அவன் மனதில் எழுந்த மகிழ்ச்சியை என்னென்று சொல்வது?

அப்பொழுது குரூரன் இலக்ஷ்மி பாயை நோக்கி, "அம்மா, உன்னிடத்தில் ஏதாவது ஆயுதமிருக்கின்றதா?" எனக் கேட்டான்.

"ஐயோ! என் கட்டாரியை மாபத்கான் அபகரித்துக் கொண்டானே" என்றாள்.

"அப்படியானால் இதை வைத்துக் கொள்" என்று அவளிடத்தில் ஒரு கட்டாரியைக் கொடுத்தான். அது தன்னுடையதுபோல் இருக்கக் கண்டு, இந்தக் கட்டாரி உங்களிடம் எப்படி வந்தது" என்று வினவினாள் இராஜ குமாரி.

"அது உன்னுடையதுதான். அதை உன் கையிலிருந்து பிடுங்கி மாபத்கான் வீசி எறிந்தானல்லவா? அப்போது அது என் பக்கத்தில் வந்துவிழுந்தது. அதை நான் தடவிப்பார்த்து எடுத்து என் கையில் வைத்துகொண்டேன். ஹா! அந்த இரும்புத் தடிக்குப் பதிலாய் இந்தக் கட்டாரியை நான் உபயோகப்படுத்தி யிருகக முடியும்! இதனால்—கடவுளே! வஞ்சகக் கொலை பாதகம் வேண்டாம், வேண்டாம். சுட்! நான் என்னமோ உளறுகிறேனே! ஜல்தி, ஜல்தி காலதாமதம் செய்தால் நம்மை துரத்திக்கொண்டு சிப்பாய்கள் வந்து விடுவார்கள். ஜப்தி குதிரையில் ஏறிகொள் இல—அம்மா" என்றான்.

"எனக்குக் கட்டாரி வேண்டாம். சர்தாரிடம் கொடுங்கள்" என்றாள் இலக்ஷ்மிபாய்.

"அவருக்கு வேறே ஆயுதம் இருக்கின்றது. நீயே அதை வைத்துக் கொள்." என்று சொல்லிக்கொண்டே எங்கிருந்தோ இரண்டு உடை வாளை வெளியில் எடுத்தான் அந்த விநோதமான மனிதன்.

"இது இரண்டும் துக்காஜி மஹாராஜா காலத்தில் ஒரு அரேபிய பக்கிரியினால் அவருக்குச் சன்மானம செய்யப்பட்டவை. இதன் பெயர் *'நெய்கினி' இதன் பெயர் *'பாத்மானி'" என்று சொல்லிக்கொண்டு ஒவ்வொன்றாய் இரண்டையும் உயர்த்திக் காண்பித்தான்.

"ஓ! அப்படியானால் என்னிடம் நெய்கினியைக் கொடுத்து விடு" என்று அந்த அபூர்வசக்தி வாய்ந்த வாளைப் பெற்றுக்கொண்டான் ஹுசேன். பாத்மானி என்ற பகைவரின் உதிரத்தை உருஞ்சும் வீரவாளை குரூரன் தானே கையில் பிடித்துக்கொண்டான்.

இதற்குள் இலக்ஷ்மிபாய் ஓர் புரவியின் பேரில் உந்தி ஏறி உட்கார்ந்து விட்டாள்.

ஹுசேன் மற்றொரு புரவியின் கடிவாளத்தைப் பிடித்து அதில் ஏறப் போனான்.

"நில்லுங்கள், நில்லுங்கள்! அதில் நான் சவாரி செய்யப்போகிறேன். நீங்கள் இலக்ஷ்மிபாயுடன் ஏறிக் கொள்ளுங்கள். மன்மதனும் ரதியும் ஒரே புரவியில் சவாரி செய்வதைப்பற்றி பரவாயில்லை." என்றான் குரூரன்.

---

* இந்த இரண்டு வாட்களும் சென்னை மியூஸியத்தில் வைக்கப்பட்டிருப்பதை இன்றும் காணலாம்.

# “ஆனந்தபோதினி” பஞ்சாங்கம்.

தாது௵ ஐப்பசி௴—கலியுகாதி 5038, சாலிவாகனம் 1359,
பசலி 1346, கொல்லமாண்டு 1112, ஹிஜரி 1355,
இங்கிலீஷ் 1936௵ அக்டோபர்௴—நவம்பர்௴

| ஐப்பசி௴ | அக்டோபர்௴ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| | | | | | | [ஸ்நாநாரம்பம் |
| 1 | 17 | சனி | துதி37-13 | சுவா10-38 | அ10-38சி | சந்திர தெரிசனம், துலா |
| 2 | 18 | ஞா | திரி43-33 | விசா18-18 | மா60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 3 | 19 | திங் | சது49-23 | அனு25-33 | சித்60 | மாசசதுர்த்தி விரதம் [தம் |
| 4 | 20 | செவ் | பஞ்54-33 | கே32-8 | மா32-8அ | உபாங்கலலிதா கௌரி விர |
| 5 | 21 | புதன் | சஷ்58-18 | மூல37-43 | ம37-43அ | சஷ்டி [நான் |
| 6 | 22 | வியா | சப்60 | பூரா41-45 | சித்60 | சரஸ்வதி ஆவாஹனம், கரி |
| 7 | 23 | வெள் | சப்0-28 | உத்44-10 | சி44-10மா | சுவாதிகார்த்திகை நா2-28<br>விருச்சிகாயனம் நா-33-35 |
| 8 | 24 | சனி | அஷ்0-33<br>நவ58-40 | திரு44-13 | சித்60 | துர்க்கை நவமி, சரஸ்வதி<br>பூஜை, ஆயுத பூஜை |
| 9 | 25 | ஞா | தச57-8 | அவி 42-20 | ம42-20சி | விஜய தசமி |
| 10 | 26 | திங் | ஏகா48-35 | சத38-35 | சி38-35ம | ஸ்மார்த்த ஏகாதசி |
| 11 | 27 | செவ் | துவா41-5 | பூர33-15 | ம33-15அ | வைஷ்ணவ ஏகாதசி |
| 12 | 28 | புதன் | திர32-25 | உத்26-43 | சி26-43மா | புஷ்காம் பிரவேசம் [கும் |
| 13 | 29 | வியா | ச ○ 23-5 | ரே19-20 | சி19-20அ | பௌர்ணமி, அன்னபிஷே |
| 14 | 30 | வெள் | பவு13-25 | அஸ்11-35 | அ11-35சி | தனபால,கோஜாகரிவிரதம் |
| 15 | 31 | சனி | பிர3-50<br>துதி54-53 | பா3-55<br>கி✻56-55 | சி3-55அ | கிருத்திகை,ஆஸ்வீயபகுளம் |
| 16 | 1936௵ நவம்பர்௴ 1 | ஞா | திரி47-0 | ரோ50-53 | சித்60 | |
| 17 | 2 | திங் | சது40-35 | மிரு46-30 | அ46-30சி | |
| 18 | 3 | செவ் | பஞ்35-47 | திரு43-40 | மா43-40சி | |
| 19 | 4 | புதன் | சஷ்33-0 | புன42-53 | சித்60 | |
| 20 | 5 | வியா | சப்32-2 | பூச43-48 | அ43-48சி | |
| 21 | 6 | வெள் | அஷ்33-0 | ஆயி46-8 | மா60 | |
| 22 | 7 | சனி | நவ35-43 | மக50-58 | அ50-58சி | |
| 23 | 8 | ஞா | தச39-45 | பூ56-35 | சி56-35அ | |
| 24 | 9 | திங் | ஏகா44-55 | உத்60 | சித்60 | |
| 25 | 10 | செவ் | து50-50 | உத்3-15 | அ3-15சித் | கோவட்ச துவாதசி [வில்) |
| 26 | 11 | புத | திர57-8 | அஸ்10-25 | மா10-25சி | நரக சதுர்தசி ஸ்நானம் (இர |
| 27 | 12 | வியா | சது60 | சித்17-55 | சி17-55அ | தீபாவளி (சிலருக்கு) |
| 28 | 13 | வெள் | ச ● 3-40 | சுவா25-28 | சித்60 | சர்வத்ர அமாவா, கேதார<br>கௌரி விரதம்,தீபாவளி |
| 29 | 14 | சனி | அமா10-3 | விசா32-50 | சித்60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 30 | 15 | ஞா | பிர16-0 | அனு39-50 | மா60 | சந்திர தெரிசனம் |

| | | | |
|---|---|---|---|
| | | | சே |
| சனி | 1-விரு-சுக்<br>12-தனு-குரு<br>13-துலா-புத்<br>17-கன்-செ<br>25-தனு-சுக் | | செ |
| ராகு | குரு | சூரி<br>சுக் | புத |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" PRESS,
NO. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS